செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி யருளுமிட மங்காக மன்றுடும்
ஐயன் றிருக்கூத்துக் கும்பிட் டணைவுறுநாள்.

(இ-ள்.) கழுமலக்கோன்=சீகாழித்தலைவராகிய அவ்வாளுடைய பிள்ளையார், செய்யசடையார் திருவேட்களஞ்சென்று=சிவந்த சடையையுடைய பாசுபதேசுவரரது திருவேட்களமென்னுந் தலத்தையடைந்து, கைதொழுது சொற்பதிகம்பாடி=கைகூப்பிவணங்கிச் சொல்நிறைந்த திருப்பதிகம் பாடியருளி, வைகியருளுமிடம் அங்காக=தாம் இருந்தருளுமிடம் அத்தலமாகக் கொண்டு, மன்றுடும் ஐயன் திருக்கூத்துக்கும்பிட்டு அணைவுறுநாள்=கனகசபையில் ஆனந்தத்தாண்டவம்புரிந்தருளும் நடேசப்பெருமானது திருநடனத்தை நாடோறும்வணங்கி வருநாளில்—எ-று (கசுசு)

திருவேட்களம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

அந்தமு மாதியு மாகியவண்ண லாரழ லங்கை யமர்ந்திலங்க, மந்த முழவ மியம்ப மலைமகள் காண நின்றாடிச், சந்த மிலங்கு நகுதலை கங்கை தண்மதி யம்மய லேததும்ப, வெந்தவெண் ணீறுமெய் பூசும்வேட்கள நன்ன கராரே.

விண்ணியன் மாடம் விளங்கொளி வீதி வெண்கொடி யெங்கும் விரிந்திலங்க, நண்ணிய சீர்வளர் காழி நற்றமிழ் ஞான சம்பந்தன், பெண்ணினல் லாளொரு பாக மமர்ந்து பேணிய வேட்கள மேன்மொழிந்த, பண்ணியல் பாடல்வல் லார்கள் பழியொடு பாவ மிலாரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - பாசுபதேசுவரர். தேவியார்-நல்லநாயகியம்மை



கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விடைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
யம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார்.

(இ-ள்.) கைம்மான்மறியார் கழிப்பாலையுள்ளணைந்து=திருக்கரத்திலமான்கன்றையேந்திய பால்வண்ணநாதர் எழுந்தருளிய திருக்கழிப்பாலை யென்னுந் தலத்தையடைந்தருளி; மெய்ம்மாலை சொற்பதிகம்பாடி=மெய்நிறைந்த சொல்லானுய திருப்பதிகமாலையைத் திருவாய்மலர்ந்தருளி, விடைக்கொன்றை

ச்செம்மாலே வேணித்திருவுசசி மேவியுறை அமமானேக்கும்பிட்டு அருந்தமி ழுமபாடினூா=வாசனேபொருநதிய கொன்றைமலராளாகியமாலேயைசசிவந்த சடைமுடியில தரித்த திருநெலவாயிலில திருவுச்சியென்னும் ஆலயத்தி லெழுநதருளிய உசசேசனைதொழுது அரிய திருபபதிகததையும் பாடி யருளினூா—எ-று (கசுஎ)

திருககழிபபாலேப-பண்-இநதளம.

திருசசிறறமபலம

புனலா டியபுன சடையா யாணம
மனலா கவிழித நவனே யழகாா
கனலா டலினுய கழிப்பா லேயுளா
யுனவாா கழலகை தொழுதுள குதுமே.

கழியாா பதிகா வலனேப புகலிப
பழியா மறைஞா னசமபந தன்சொல
வழிபா டிவைகொண டடிவாழ்த தவலாா
கெழியாா ரிமையோ ரொடுகே டிலரே.

திருசசிறறமபலம.

சுவாமிபெயா-பாலவணணநாதா தேவியாா-வேதநாயகி.

திருபபதிகம—அ

பாடும பதிகமிசை யாழபபா ணருமபயிறறி
நாடுஞ சிறபபெயத நாளுநடம் போறறுவாா
நீடுந திருததில்லை யநதணாக ணீணமனறு
ளாடுங கழறகணுகக ராமபே றதிசயிபபாா.

(இ-ள) பாடுமபதிக விசையாழபபாணரும பயிறறிநாடுஞசிறப்பெயத= தாம அருளிசசெயகினற திருபபதிகஙகளி னிசையைத திருநீலகண்ட யாழப் பாணரும யாழினிடததுச சேர்ததுவாசிதது யாவராலும அதிககததகக சிறபபினேயடைய, நாளுமநடமபோறறுவாா=நாடோறுந திருநடனததைத துதிககுஙகருததுடைய பிளளேயாா, நீடுநதிருததில்லை அநதணாகள=செலவ மிகுநத தில்லேவாழநதணாகள, நீளமனறுளாடுங கழறகணுககராமபேறு அதி சயிபபாா=உயாநதகனகசபையினகண ஆடியருளுமகுஞசிதபாததிறகுத் தி ருவணுககராயிருககும பேறறினைத திருவுளத்திறகருதி அதிசயமடைவாராயி னுர்—எ-று. (கசுஅ)

ஆஙகவாதஞ் சிலத தளவின மையுநினேநதே
யோஙகி யெழுஙகாத லொழியாத வுளளத்தாா
தேஙகமழுஞ் சோலைத திருவேட் களஙகடநது
பூஙகிடஙகு சூழபுலியூா புககணேயும பொழுதினகண்.

(இ-ள்.) ஆங்கவர்தஞ் சீலத்தளவின்மையும் நினைந்து=அங்குவசிக்கும் அத்தில்லைவாழந்தணர்களது ஒழுக்கமிகுதியையுங்கருதி, ஓங்கியெழுங்காதல் ஒழியாதவுள்ளத்தார்=மிக்கெழுகின்றபெருவிருப்பானது நீங்காதவுள்ளத்தை யுடைய ஆளுடையபிள்ளையார்; தேன்கமழுஞ்சோலைத் திருவேட்களங்கடந்து =தேனானது கமழ்கின்றசோலையினையுடைய திருவேட்களத்தினின்றும்நீங்கி, பூங்கிடங்குசூழ் புலியூர்புக்கணையும் பொழுதின்கண்=மலர்கணிறைந்த அகழ்சூழ்ந்தசிதம்பரத்தை அடைந்தருளுங்காலத்து—எ-று. (௧௬௧)

அண்டத் திறைவ ரருளா லணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களுந்
தொண்டத் தகைமைக் கணநாத ராயத்தோன்றக்
கண்டப் பரிசுபெரும் பாணர்க்குங் காட்டினார்

(இ-ள்.) அண்டத்திறைவர் அருளால் அணிதில்லை முண்டத் திருநீற்றுமூவாயிரவர்களும் = அண்டங்களுக்கெல்லாம் முதல்வராகிய சிவபிரானாரது திருவருளினால் அழகிய தில்லையின்கண் வாழுந் திருநீற்றுப் புண்டரமணிந்த தில்லைவாழந்தணர்கள் யாவரும், தொண்டத்தகைமைக்கணநாதராய்த்தோன்றக்கண்டு=தொண்டின் தன்மைபூண்டொழுகுஞ் சிவகணநாதராயக் காணவு தனைப்பார்த்தருளி, அப்பரிசு பெரும்பாணர்க்குங்காட்டினார்=அவர் அத்தன்மையாதலைத் திருநீலகண்ட பெரும்பாணர்க்குங் காட்டியருளினார்—எ-று.

செல்வம் பிறிவறியாத் தில்லைவா ழந்தணரு
மெல்லையிலசீர்ச் சண்பை யிளவே றெழுந்தருளி
யொல்லை யிறைஞ்சாமுன் றாமு முடனிறைஞ்சி
மல்ல லணிவீதி மருங்கணைய வந்தார்கள்.

(இ-ள்.) செல்வம்பிறிவறியாத் தில்லைவாழந்தணரும்=திருவருட்செல்வத்தினின்றும் நீங்காத தில்லைமூவாயிரவர்களும், எல்லையில்சீர்ச் சண்பையிளவேறு எழுந்தருளி=அளவுபடாத சிறப்பினையுடைய சீகாழியில் அவதரித்த இளஞ்சிங்கம்போலும் ஆளுடையபிள்ளையா ரெழுந்தருளி, ஒல்லையிறைஞ்சா முன்றாமும் உடனிறைஞ்சி=விரைந்து வணங்குதற்குமுன் தாங்களுமுட னேவணங்கி, மல்லல் அணிவீதிமருங்கு அணையவந்தார்கள்=வளப்பமிக்க அழகிய திருவீதியின்கண் பிள்ளையாரது இருமருங்குஞ்சூழவந்தார்கள்—எ-று.

பொங்கி யெழுங்காதல் புலன்கொள் பூசுரர்தஞ்
சிங்க மனையார் திருமுடியின் மேற்குவித்துப்
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்குஞ்
செங்கைசையொடுஞ் சென்று திருவாயி லுட்புக்கார்.

(இ-ள்.) பொங்கியெழுங்காதல் புலன்கொள் பூசுரர்தம் சிங்கமனையார்= மிக்கெழுகின்ற விருப்பமே தம்மைச் சிவபிரானை அடைவிக்கும் வாயிலாகப் பிராமணர்குலத்துக்குத் தலைமையான சிங்கத்தையொத்த ஆளுடையபிள்ளை

யார்; திருமுடியின்மேற்குவித்த பங்கயத்தின் செவ்விபழித்து வனப்பு ஓங்கும்=தமது திருமுடியின்மேற் குவிக்கப்பட்டுத் தாமரையினது பொலிவை இகழ்ந்து அழகுவாய்ந்த, செங்கையொடுஞ்சென்று திருவாயில் உட்புக்கார்=திருக்கரங்களோடு மெழுந்தருளித் திருக்கோபுரத்தின் திருவாயிலினுள்ளே புகுந்தருளினார்—எ-று. (கஎஉ)

ஒன்றிய சிந்தை யுருக வுயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்று ணிறைந்தாடு மாணிக்கக் கூத்தரெதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ்

(இ-ள்) ஒன்றியசிந்தையுருக உயர்மேருக்குன்று அனைய பேரம்பல மருங்கு கும்பிட்டு=ஒருப்பட்ட தமது திருவுள்ளம் உருகும்படி உயர்ந்த மேருமலையையொத்த பேரம்பலத்தினைக் கண்டு வணங்கி, மன்றுள்நிறைந்தாடு மாணிக்கக் கூத்தரெதிர் சென்றணைந்து=கனகசபையின்கண்ணே நிறைந்து ஆடியருளிய மாணிக்கம்போன்ற நடேசப்பெருமானது திருமுன்னே சென்றருளி; தாழ்ந்தார் திருக்களிற்றுப்படிக்கீழ்=திருக்களிற்றுப்படிக்கீழேவிழுந்து பணிந்தருளினார்—எ-று (கஎங)

வேறு

ஆடி னாய்நறு நெய்யொடு பாற்றயி ரென்றெடுத்த தார்வத்தாற்
பாடி னார்பின்னு மப்பதி கத்தினிற் பரவிய பாடலொன்றி
னீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக் கண்டவந் நிலையெல்லாங்
கூடு மாறுகோத் தவர்தொழு தேத்துசிற் றம்பல மெனக்கூறி.

(இ-ள்) ஆடினாய நறுநெய்யொடு பால்தயிர் என்றெடுத்த ஆர்வத்தால் பாடினார்=ஆடினாய நறுநெய்யொடு பால்தயிரென அடியெடுத்து அன்போடு திருப்பதிகத்தைப்பாடியருளினார், பின்னும் பதிகத்தினில் பரவியபாடல் ஒன்றில்=பின்னும் அத்திருப்பதிகத்தினுள் கட்டளையிட்டருளிய மூன்றாவதுபாசுரத்தில், நீடுவாழ் தில்லைநான்மறையோர்தமைக்கண்டவந்நிலையெல்லாம் கூடுமாறு கோத்து=செல்வமிக்கதில்லைமூவாயிர மறையவர்களைச் சிவகணநாதராகத்தாம் பார்த்தருளிய அவ்வடையாளங்களையெல்லாம் (நீலத்தாற் கரியமிடற்றார், நல்லநெற்றிமேலுற்ற கண்ணினார், பற்றுச்சூலத்தார், சுடலைப்பொடிநீறணிவார், வார்சடையார்) எனப்பொருந்துமாறு சேர்த்து, அவர் தொழுதேத்து சிற்றம்பலமெனக்கூறி=அச்சீலமுடையார்கள் வணங்கித்துதிக்கும் சிற்றம்பலமென்று திருவாய்மலர்ந்தருளி—எ-று. (கஎச)

திருக்கோயில்-பண்-காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

ஆடி னாய்நறு நெய்யொடு பாற்றயி ரந்தணர்பிரியா தசிற்றம்பல நாடி னாயிட மாநறுங் கொன்றை நயந்தவனே, பாடி னாய்மறையோடு, பல கீதமும் பலசடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள், சூடி னாயரு ளாய் சுருங்க வெம் தொல்வினையே

நாறு பூம்பொழி னண்ணிய காழியு ணான்மறைவல்ல ஞானசம் பந்தன், ஊறுமின்றமி ழாலுயர் தாருறை தில்லைதன்னுள், வேறு 'தொல் புக ழேந்து சிற் றம்பலத்தீச னையிசை யாற்சொன்ன பத திவை, கூறு மாறுவல் லாருயர் ந்தாரொடுங் கூடுவரே.

திருச்சிற்றம்பலம்

இன்ன தன்மையி லின்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப் பேற்றி, மன்னு மானந்த வெள்ளத்திற் றிளைத்தெதிர் வந்துமுன் னின்றும், பின்னு வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப் பிரியாத விடைபெற்றுப், பொன்னி னம்பலஞ் சூழ்ந்துதாழ்ந் தெழுந்து போந் தணைந்தனர் புறமுன்றில்.

(இ-ள்) இன்னதன்மையில் இன்னிசைப்பதிகமும் திருக்கடைக்காப்பே ற்றி=இத்தன்மையால் இனிய இசையையுடைய திருப்பதிகத்தையும் அதில் திருக்கடைக்காப்பையும்பாடியருளி, மன்னுமானந்தவெள்ளத்திற்றிளைத்து எதி ர்வந்து முன்னின்றும்=நிலைபெற்ற பேரானந்த வெள்ளத்திலபடிந்து தமது திருக்கண் காணவந்து எதிரேநின்று ஆனந்தநிருத்தஞ் செய்தருளும், பின் னுவார்சடைக்கூத்தர்பேரருள்பெறப் பிரியாத விடைபெற்று=பின்னிய நீ ண்டசடாமகுடத்தையுடைய நடேசப்பெருமானது மிகத்திருவருளைப்பெற்ற காரணத்தால் அவரினின்றும் பிரியாத விடைபெற்று, பொன்னின் அம்ப லஞ்சூழ்ந்து தாழ்ந்து எழுந்துபோந்து அணைந்தனர்புறமுன்றில்=கனகசபை யைப் பிரதட்சணஞ் செய்து வணங்கியெழுந்து திருமுன்றிலின் பக்கலில் அ டைந்தருளினார்—எ-று (கஎ௬)

அப்பு றத்திடை வணங்கியங் கருளுட னணிமணித் திருவாயிற் பொற்பு றந்தொழு தெழுந்துடன்போதரப் போற்றியபுகழ்ப்பாணர், நற்ப தந்தொழு தடியனேன் பதிமுத னதிநிவாக் கரைமேய, வொப் பிலானங்கள் பணிந்திட வேண்டுமென் றுரைசெய் வதுநேர்வார்.

(இ-ள்) அப்புறத்திடைவணங்கி அங்கு அருளுடன்அணிமணித்திருவா யிற் பொற்புறத் தொழு தெழுந்துடன் போதர=அவ்விடத்து நின்று வணங் கி அங்கே சிவபெருமான் திருவருளோடும் அழகிய மணிகளிழைத்த திருவ ணுக்கன் திருவாயிலை நன்றாக வணங்கியெழுந்து திருநீலகண்ட யாழ்ப்பாண ருடன் கோயிலுள் புறமபே யெழுந்தருள, போற்றிய புகழ்ப்பாணர் நற்பத ந்தொழுது=தம்மை விரும்பிய புகழையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாணா ஆளுடைய பிள்ளையாரது நன்மைமிக்க திருவடிகளைவணங்கி; அடியனேன் பதிமுதல் நதிநிவாக்கரைமேய=அடியேனது ஜனன ஊராகிய திருவெருக்கத் தம்புலியூர் முதலாகநிவாவென்னும் நதியின்கரையிற்பொருந்திய; ஒப்பிலதா னங்கள் பணிந்திடவேண்டுமென்று உரைசெய்து அதுநேர்வார் = ஒப்பில்லாத

திருப்பதிகளை வணஙகவேண்டுமென்று விண்ணபபிகக அதற்கு உடன்பட்ட ஆளுடையபிளளையாா—எ-று.

இககாலததது நிவாவெனபது வடவெளளாறெனறு வழஙகும. (கஎசு)

பொஙகு தெணடிரைப புனிதநீா நிவாககரைக குடதிசைமிசைப போநது, தஙகு நநதையா ருடனபரி சனஙகளுந தவமுனி வருஞ் செலலச, செஙகை யாழ்த திரு நீலகண் டபபெரும பாணரு ருடன சேர, மஙகை யாாபுகழ மதஙகசூ ளாமணி யாருடன வரவநதாா.

(இ-ள) பொஙகுதெணடிரைபபுனிதநீா நிவாககரைக குடதிசைமிசைப போநது=பொங்குகினற தெளளிய அலைகளோடுகூடிய பரிசுததமான நீரையுடைய நிவாவெனனு நதியின கரையினமேறறிசையில எழுநதருளி, தஙகுந நநதையாா உடன பரிசனஙகளும தவமுனிவரும செலல=தம்மைவிடடு நீஙகாத தநதையாராகிய சிவபாத இதயரோடு அடியாா திருககூடடமும தவததையுடைய முனிவா கூடடமுஞ சூழநதுவராநிறக, செஙகையாழ திருநீலகணடபபெருமபாணனாா உடனசேர=சிவநத கையில யாழேநதிய திருநீலகண்ட யாழபபாணரோடுகூட, மஙகையாாபுகழ மதஙகசூளாமணியாருடன் வர=பெணகளபுகழும் மதஙகசூளாமணியாரு முடனவர, வநதாா=எழுநதருளிவநதாா—எ-று

அது நோவாா, எழுநதருளிவநதாரெனககூடடுக. (கஎஎ)

இருநத டஙகளும பழனமுங கடநதுபோ யெருககததம புலியூரின, மருஙகு சென்றுற நீலகண டபபெரும பாணனாா வணஙகிக காா, நெருஙகு சோலைசூ ழிபபதி யடியனேன பதியென நெடிதினபுற, றருஙக லைசசிறு மழவிளங களிறனு ரஙகணைந தருளசெயவாா.

(இ-ள) இருநதடஙகளும பழனமுஙகடநது போய எருககததமபுலியூரினமருஙகுசென்றுற=பெரியவாவிகளையும வயலகளையுங கடநது போயத திருஎருககநதமபுலியூரின பககலிலசென்றருள, நீலகணடபபெருமபாணனாா வணஙகி=திருநீலகணட யாழபபாணா பிளளையாரைவணஙகி, கார்நெருஙகு சோலைசூழிபபதியடியனேனபதியென=மேகமநெருஙகியசோலைசூழநத இத் தலம அடியேனுககு ஜனனஸதலமெனறுகூற, நெடிதுஇனபுறறு அருஙகலைச சிறுமழவிளஙகளிறனாா=மிகமகிழசசி கூாநது அரியவேதமுதலிய கலைகளில வலலசிறிய இளஙகளிறறினை யொதத பிளளையாா, அஙகணைநது அருளசெயவாா=அததலததை அடைநதருளி (திருநீலகணட யாழபபாணரை நோககி) அருளிசசெயவாராயினாா—எ-று. (கஎஅ)

ஐயா நீரவ தரிததிட விபபதி யளவின்மா தவமுனபு, செயத வாறெனச சிறபபுரைத தருளியச செழுமபதி யிடஙகொண்ட, மை கொள கணடாதங கோயிலி னுடபுககு வலங்கொண்டு வணஙகிபபா, ருயய வநதவா செழுநதமிழப பதிகமங கிசையுட னுரைசெயதாா.

(இ-ள்.) ஐயர் நீர் அவதரித்திட இப்பதி அளவில மாதவமுன்புசெய்த வாறெனச் சிறப்புரைத்தருளி=ஐயரே நீர் திரு அவதாரஞ்செய்ய இத்திருப்பதி அளவில்லாத பெரிய தவத்தை முன்பு செய்தவகைமை நன்கிருந்ததென அவரால் அத்தலத்திற காஞ்சிறப் பினைக்கூறியருளி, அச்செழும்பதி இடங் கொண்டமை கொள்கண்டர் தங்கோயிலினுட்புக்கு=அந்தச் செழுமையானதிருப்பதியை இடமாகக் கொண்டருளிய கரியகண்டத்தை யுடைய சிவபிரானது திருக்கோயிலி னுள்ளேபுகுந்து, வலங்கொண்டு வணங்கிப்பாடிய வந்தவா செழுந்தமிழப் பதிக மங்கு இசையுடன் உரைசெய்தார்=பிரதட்சணஞ் செய்து வணங்கி உலகங்களெல்லா மீடேற அவதரித்த பிள்ளையார் வளப்பமிக்க திருப்பதிகத்தை இசையுடன் அருளிச்செய்தார்—எ-று. (களக)

திருஎருக்கத்தம்புலியூர்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

படையார் தருபூதப் பகடார் முரிப்போர்வை
யுடையா னுமையோடு முடனா யிடுகங்கைச்
சடையா னெருக்கத்தம் புலியூர்த் தகுகோயில்
விடையா னடியேத்த மேவா வினைதானே

ஏரா ரெருக்கத்தம் புலியூ ருறைவானைச்
சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்
ஆரா வருந்தமிழ் மாலையிவை வல்லார்
பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - நீலகண்டநாயகர். தேவியார் - நீலமலர்க்கண்ணம்மை.

திருப்பதிகம்—௪

அங்கு நின்றெழுந் தருளிமற் றவருட னம்பொன்மா மலைவல்லி, பங்கர்தாமினி துறையுநற் பதிபல பரிவொடும் பணிந்தேத்தித், துங்க வண்டமிழ்த் தொடைமலர்பாடிப் போயுந் தொல்லை வெங்குருவேந் தர், செங்க ணேற்றவர் திருமுது குன்றினைத் தொழுதுசென் றணை கின்றார்.

(இ-ள்) அங்கு நின்றெழுந்தருளி மற்றவருடன் அம்பொன்மாமலை வல்லிபங்கர்தாம=அத்தலத்தினின்றுமெழுந்தருளித் திருநீலகண்டயாழ்ப்பாணரோடு இமயமலையின் புத்திரியாகிய உமாதேவியை யிடப்பாகத்திலுள்ள சிவபிரானார்; இனிதுறையும் நற்பதி பல பரிவொடும் பணிந்தேத்தி=எழுந்தருளிய திருஎருக்கத்தம்புலியூருக்குத் தென்கிழக்கிலுள்ள கூடலையாற்றூர்முதலிய ஸ்தலங்களை அன்புடனே வணங்கித் துதித்து, துங்கவண்டமிழ்த் தொடைமலர் பாடிப்போய=வண்மை பொருந்திய மேலாகிய தமிழ்ச்சொன மலரால

தொடுத்த பதிகமாலையையவ்விடங்களிற் பாடிச்சென்று; தொலலைவெங் குருவேந்தர்=பழைய சீகாழிக்குத்தலைவராகிய ஆளுடைய பிள்ளையார், செங்கணேற்றவர் திருமுதுகுன்றினைச் சென்று எதிர் அணைகின்றார்=சிவந்த கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்ட பழமலைநாத ரெழுந்தருளிய விருத்தாசலத்தைக்குறித்துச் சென்று அங்கெழுந்தருளுகின்றாராய்—எ-று.

மொய்கொண்மாமணி கொழித்துமுத்தாறுசூழ் முதுகுன்றை யடைவோமென், றெய்துசொன்மலர் மாலைவண்பதிகத்தை யிசையொடும் புனைந்தேத்திச், செய்தவத்திரு முனிவருந் தேவருந் திசையெலாநெருங்கப்புக், கையர்சேவடி பணியுமப் பொருப்பினி லாதரவுடன்சென்றார்.

(இ-ள்) மொய்கொள்மாமணி கொழித்துமுத்தாறுசூழ் முதுகுன்றை யடைவோமென்று=கூட்டமான பெரியமுத்துக்களைக் கொழித்து மணிமுத்தாநதிசூழும் திருமுதுகுன்றை யடைவோமென்று, எய்து சொன்மலர்மாலை வண்பதிகத்தை இசையொடும் புனைந்து=ஏத்தியபொருளமைந்த சொன்மலராலாகிய வளம்பொருந்திய பதிகமாலையை யிசையுடனே பாடித்துதித்து; செய்தவத் திருமுனிவரும் தேவருந் திசையெலாம் நெருங்கப்புக்கு=செய்யுந்தவத்தையுடைய அழகிய முனிவர்களுந் தேவர்களுமெல்லாத் திசைகளிலும் நெருங்கப்புகுந்து, ஐயர் சேவடிபணியும் அப்பொருப்பினில் ஆதரவுடன் சென்றார்=பழமலைநாதரது திருவடிகளை வணங்கும் அத்திருமுதுகுன்றினில் விருப்பத்துடன் சென்றருளினார்—எ-று.

வெங்குருவேந்தர் அணைகின்றாராய்ச் சென்றாரென முடிக்க.

முதுமை=பழமை. முதுகுன்றென்றது பிரளயத்தும் அழியாதுநிற்குங் குன்றெனப்போதரும். இதனை—"மூடிகொண்மூடும் வெள்ளத்துயர்ந்தது முதுகுன்றே" என்னுந் திருக்கடைக்காப்பானுணர்க. (௧௮௧)

திருமுதுகுன்றம்-பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

மத்தா வரைநிறுவிக் கடல்கடைந்த வ்விடமுண்ட
தொத்தார் தருமணிநீண் முடிச்சுடர்வண் ணனதிடமாங்
கொத்தார் மலர்குளிர்சந் தகிலொளிர்குங் குமங்கொண்டு
முத்தா றுவந்தடிவீழ் தருமுதுகுன் றடைவோமே.

தழையார் வடவியவீ தனிற்றவமே புரிசைவ
னிழையா ரிடைமடவா ளொடுமினிதா வுறைவிடமா
மழைவா னிடைமுழவ வெழில்வளைவா ளுகிரெரிகண்
முழைவா ளரிகுமிறு முயர்முதுகுன் றடைவோமே.

முகில்சேர் தருமுதுகுன் றுடையானை மிகுதொல்சீர்
புகலினவர் மறைஞான சம்பந்த னுரைசெய்த
நிகரில்லன தமிழ்மாலை யிசையோடு மிவைவல்லார்
பகருமடி யவர்கட்கு இடர்பாவ மடையாவே.

திருச்சிற்றம்பலம்

வானநாயகர் திருமுதுகுன்றினை வழிபட வலங்கொள்வார்
தூநறுந்தமிழ்ச் சொல்லிருக்குக்குறட் டுணைமலர் மொழிந்தேத்தி
ஞானபோனகர் நம்பர்தங்கோயிலை நணியங் குள்புக்குத்
தேனலம்புதண் கொன்றையார்சேவடி திளைத்த வன்பொடு தாழ்ந்தார்.

(இ-ள்) வானநாயகர் திருமுது குன்றினை வழிபடவலங் கொள்வார் ஞானபோனகர்=விண்ணுலகத்தார்க்கு இறைவராகிய பழமலைநாதரது திருமுதுகுன்றத்தை வழிபடுங் காரணமாயப் பிரதட்சணஞ் செய்வாராகிய ஆளுடைய பிள்ளையார், தூநறுந்தமிழ்ச்சொல் இருக்குக்குறள் துணைமலர் மொழிந்தேத்தி=புனிதமாகிய நல்ல தமிழ்ச்சொல்லாலாகிய திரு இருக்குக்குறளொன்றும் அளவொத்த பதிகமாலையைத் திருவாய் மலர்ந்து துதித்து, நம்பர் தம் கோயிலை நணி அங்கு உள்புக்கு=பழமலை நாதரெழுந்தருளிய ஆலயத்தினுள்ளே சென்றருளி, தேன் அலம்பு தண் கொன்றையார் சேவடி திளைத்த இன்பொடு தாழ்ந்தார்=தேனைத் ததும்புகின்ற குளிர்ந்த கொன்றைப் பூமாலையை யணிந்த பழமலைநாதரது சிவந்த திருவடிக்கீழ்க் கலந்தபேரானந்தத்தோடு பணிந்தருளினார்—எ-று.

வானநாயகர், இனச்சுட்டில்லாப்பண்புகொள் பெயராதலின், விசேடம் பற்றி அவர்க்குத் தலைவரென்பது படநின்றது மண்ணுலகத்தாரை விலக்கி யதன்று (௧௮௨)

திருமுதுகுன்றம்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நின்றுமலர்தூவி யின்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்கட் கென்றுமின்பமே

நின்றுமுதுகுன்றை யன்றுசம்பந்தன்
ஒன்றுமுரைவல்லா ரென்றுமுயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

தாழ்ந்தெழுந்துமுன் முரசதிர்ந்தெழுமெனுந் தண்டமிழ்த் தொடைசாத்தி, வாழ்ந்துபோந்தங்கண் வளம்பதியதனிடை வைகுவாரம ணிவெற்புச், சூழ்ந்ததண்புனல் சுலவுமுத்தாற்றுத் தொடுத்தசொற் றொடைமாலை, வீழ்ந்தகாதலாற் பன்முறைவிளம்பியே மேவினார்சில நாள்கள்

(இ-ள்) முன் தாழ்ந்து எழுந்து முரசதிர்ந்து எழுமெனும்தண்டமிழ்த் தொடைசாத்தி=திருமுன்னே பணிந்தெழுந்து முரசதிர்ந்து எழுமெனனு முதலினையுடைய திருமுககாலெனனும தணணிய தமிழபபதிகமாலையைத் திருவடியில சாததி; வாழ்ந்து போந்து அஙகண வளம்பதியத னிடைவைகுவார=பேரானநத வாழவடைநது ஆலயத்தி னின்றும புறம்பே யெழுநதருளி அழகிய இடத்தையுடைய வளமபொருநதிய திருமுதுகுன்றின்கண எழுநதருளி யிருககும் ஆளுடைய பிள்ளையார், மணிவெறபுச சூழநத தண் புனல சுலவுமுததா றெடுதெடுத்த சொறறொடைமாலைபல=அழகிய திருமுது குனறினை வளைநத குளிர்நத நீரானது அலைவீசுகினற திருமணி முததாற்றியோடு சேரததுப பாடியருளிய சொலலானுய பதிகமாலைகள பலவறறை; வீழநதகாதலால பலமுறை விளமபியே சிலநாளகள மேவினுா=தமஉளளத்தில உணடாய விருபபததினுல் பலமுறையும் திருவாய மலாநது சிலநாள அஙகமாநதருளினுா—எ-று.

மததாவென்னும பதிமுதலிய பதிகஙக ளெலலாவறறினுங கூறிய முத்தாறெனனும விசேடண மடஙகபபலமுறையென்முா (கஅ௬)

திருமுதுகுனறம - திருமுககால-பண-சாதாரி.

திருசசிறறமபலம

முரசதிாநதெழுதிரு முதுகுனறமேவிய
பாசமாபடையுடையீரோ
பாசமாபடையுடை யீருமைபபரவுவா
ாாசாகளுலகிலாவாரோ.

முடியசோலைசூழ முதுகுனறததீசனை
நாடியஞானசமபாநதன
பாடியஞானசெநதமிழு
பாடியவவாபழியிலரே

திருசசிறறமபலம

சுவாமிபெயா-பழமலைநாதா. தேவியாா-பெரியநாயகியமமை.

திருபபதிகம்.—கக.

ஆஙகுநாதனைப பணிநதுபெணணுகட மணைநதரு மறையோசை
யோஙகுதூஙகானை மாடதது ளமாகினற வொருதனிய பரஞ்சோதிப
பாஙகணைநதுமுன் வலஙகொண்டுபணிவுறறுப் பாவுசொறறமிழமாலை
தீஙகுநீஙகுவீா தொழுமின்களெனுமிசைப பதிகமுநதெரிவிததாா.

(இ-ள்) ஆஙகு நாதனைபபணிநது பெணணுகடம அணைநது=அததலத்தில பழமலைநாதனை வணஙகிப் பெணணுகடமெனனும் திருபபதியைச்சோந

து; அருமறையோசை ஓங்கு தூங்கானைமாடத்துள் அமர்கின்ற ஒருதனிபப ரஞ்சோதி பாதங்கண்டு=அரியவேதங்களின ஓசைமிகக திருத்தூங்கானைமா டமென்னும் திருககோயிலில எழுநதருளிய ஒபபிலலாத சுடாக்கொழுந தீச ரது பககத்திலடைநதருளி; வலஙகொணடு முனபணிவுற்று=பிரதடசணஞ் செயது திருமுனனே வணங்கி, நீஙகு நீஙகுவீா தொழுமினகளெனும=குற றம் நீஙகுவீா தொழுஙகள என்னும (இறுதியோடு) பரவுசொறறமிழுமாலை இசைபபதிகமுந தெரிவிததாா=துதிககும் தமிழசசொல்லானுய இசையோடு கூடிய பதிகமாலையையும அருளிசசெயதாா—எ-று- (கஅச)

திருததூஙகானைமாடம-பண-பழநதககராகம.

திருசசிறறமபலம.

ஒடுங்குமபிணிபிறவி கேடெனறிவை யுடைததாயவாழககை யொ ழியததவ, மடஙகுமிடஙகருதி நின்றீரெலலா மடிகளடிநிழற்கீழாளா ம வண்ணங், கிடஙகுமதிலுஞ்சு லாவியெஙகுங கெழுமனைகடொறு மறையினஒலி, தொடஙகுஙகடநதைத தடஙகோயிலசோ தூஙகா னைமாடந தொழுமினகளே.

மண்ணாமுழவதிரு மாடவீதி வயறகாழிஞானசம பநதனலல, பெண்ணாகடததுப பெருஙகோயில பிறையுரிஞ்சுந்தூஙகானை மாட மேயான், கண்ணாகழலபாவு பாடல்பததுங கருததுணாககறறுருங கேடடாருமபோய, விண்ணுருலகதது மேவிவாழும விதியதுவேயா கும வினையுமாயுமே

திருசசிறறமபலம.

சுவாமிபெயா-சுடாகொழுநதீசா. தேவியாா-கடநதைநாயகியமமை

திருபபதிகம—உ.

கருவனாபபிற புகாதவா கைதொழு
மொருவனாத்தொழு துளள முவநதுபோயப
பெருவாததினிற பெறறவா தமமுடன்
றிருவாததுறை சோதுமென றேகுவாா.

(இ-ள்.) கருவனாபபில புகாதவா கைதொழும=பிறபபாகிய எலலைக கண அணுகாத அடியாாகள வணஙகும, ஒருவனைததொழுது உளளமுவந்து போய=ஒபபிலலாத சுடாகொழுந தீசனாவணஙகி மனமகிழநது அஙகுநின றெழுநதருளி, பெருவாததினில பெறறவர் தமமுடன=மிககதவப பயனால தம்மைபபெறற சிவபாத இதயரோடும, திருவாததுறை சோதுமென றேகு வாா= (சிவாககனாயிலிருககின்ற) திருநெல்வாயில அரத்துறையை அடை வோமென்று எழுநதருளுவாராயினா. (கஅரு)

முந்தைநாளகளோ ரோவொரு காலமுது
தந்தையாரபியன மேலிருப் பார்தவிர்ந்
தந்தணுள ரவருகேசெலச
சிந்தைசெயவிருப போடுமுன செனறனர்.

(இ-ள்.) முந்தைநாளகள ஒரோரொருகால முதுதந்தையார் பியன்மேல்இருபபார=முன்நாட்களில ஒவவொருநாள தமது முதியதந்தையாராகிய சிவபாத இதயரது திருததோணமேல எழுந்தருளிச செலவாராகிய பிளளேயார்; தவிர்ந்து அந்தணுளா அவரருகேசெல=அவவா திருததலை நீங்கி வேதியர்கள் தம அருகேசூழநதுவர, சிந்தைசெய விருபபொடு முனசென்றனா=திருவரததுறையைத தரிசிககவேணடுமெனறு கருதிய விருபபததுடன அவாகளுககுமுனனே எழுந்தருளினா—எ-று. (கஅசு)

ஆதியாரதம ரததுறை நோககியே
காதலாலணை வாரகடி தேகிடத
தாதையாரும பரிவுறச சமபநதா
பாததாமரை நொநதனபைபபய

(இ-ள.) ஆதியாரதம அரததுறை நோககியே=முதறகாரணராகிய சிவபிரானது திருவரததுறையை நோககி, காதலால அணைவாா கடிதேகிட=விருபபததோடு அணையுங கருததுடையராய விரைநது எழுநதருள; தாதையாரும பரிவுற=சிவபாத இதயரும திருவடிகள நிலததில தீணடல பொறுதுவருநத, சமபநதா பாததாமரை நொநதன பைபபய=ஆளுடைய பிளளேயாரது திருவடித தாமரைகள சிறிது சிறிது வருததமடைநதன—எ-று. (கஅஎ)

மறையனைததது மொருவடி வாமென
நிறைமதிபபிளளை நீணிலஞ சோநதெனத
துறையலைககஙகை சூடு மாததுறை
யிறைவரைதொழு வானவிரைநதேகினா

(இ-ள) மறையனைததது மொருவடிவாமென=வேதங்களெலலாந திரணடு ஒருதிருவுருககொணடு வநதாறபோலவும; நிறைமதிபபிளளை நீணிலஞ் சோநதென=நிறைநதகலைகளோடுகூடிய இளஞசநதிரன நீணட நிலவுலகின் கண சோநததுபோலவும; துறையலைககஙகைசூடுமஅரததுறைஇறைவரை=துறையினகண அலைகளை வீசுங கஙகாநதியைசசூடிய அரததுறை நாதனை; தொழுவான விரைந தேகினா=தொழும பொருடடு விரைநது எழுநதருளினா—எ-று. (கஅஅ)

பாசமறறில ராயினும பாரமிசை
யாசைசஙகரற் காயின தனமையாற
றேசுமிகக திருவுரு வானவ
ரீசனைததொழு தேதொழு தேகினா.

(இ-ள்.) பாரமிசைப் பாசமற்றிலராயினும் = உலகின்கண் (அறம்பொருள் இன்பங்களாகிய) பற்றுப்பிறிதொன்றிலராயினும்; ஆசைச்சங்கரற்காயின தன்மையால் = சிவபிரானிடத்து ஆசையாகிய பற்றுஒன்று உண்டாய தன்மையால்; தேசுமிக்க திருவுருவானவர் = ஒளிமிக்க திருவுருவத்தையுடைய ஆளுடைய பிள்ளையார், ஈசனைத்தொழுதே தொழுதேகினார்—சிவபெருமானை இடைவிடாமல் வணங்கிக்கொண் டெழுந்தருளினார்—எ-று.

அமிக்கு நீங்காமைமேற்று. அது வழிவருத்தத்தின் சலியாமையை விளக்கியது. எனவே, ஆக்கங்கேடுகளினுஞ் சலியாது நிலைபெற்றோங்கிய பிள்ளையாரது பத்திமையைப் புலப்படுத்தினாராயிற்று. (கஅக)

இந்தமாநிலத் தினனிரு ணீங்கிட
வந்தவைதிக மாமணி யானவர்
சிந்தையாரமு தாகிய செஞ்சடைத்
தந்தையார்கழ றொழுதெழுந்தேகினார்

(இ-ள்) இந்தமாநிலத்தின் இருள்நீங்கிட = இந்நிலவுலகின்கணுள்ள மானிடரது அஞ்ஞானவிருள் நீங்கும்படி, வந்தவைதிக மாமணியானவர் = அவதரித்தவைதிக சூளாமணியாகிய ஆளுடைய பிள்ளையார், சிந்தை ஆரமுதாகிய செஞ்சடைத் தந்தையார் கழல்தாழ்ந்தெழுந்தேகினார் = தமதுள்ளத்தின்கண் நிறைந்த அமுதமாகிய சிவந்த சடையையுடைய சிவபிரானது திருவடிகளை வணங்கிக்கொண்டு எழுந்தருளினார்—எ-று. (ககய)

மாறன்பாடி யெனும்பதி வந்துற
வாறுசெல்வருத் தத்தி னசைவினால்
வேறுசெல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறுமஞ்செழுத் தோதியங் கெய்திட.

(இ-ள்.) மாறன்பாடி எனும்பதிவந்துற = அப்பொழுது மாறன்பாடியென்னும் பதியினைவந்தடைய, ஆறுசெல் வருத்தத்தின் அசைவினால் = அங்குவழியிற்செல்லும் வருத்தத்தினாலாய தளர்ச்சியினால், வேறுசெல்பவர்வெய்துற = தம்மோடுசூழ்ந்து வரும்திருக்கூட்டங்களுந் துன்பப்படைய, பிள்ளையார்ஏறும் அஞ்செழுத்துஓதி அங்குஎய்திட = அதனால் ஆளுடைய பிள்ளையாரும் மேம்பட்ட திருஅஞ்செழுத்தையோதி யருளி அங்கே சென்றருள—எ-று. (ககக)

உய்யவந்தச்சம் பந்த ருடன்வந்தார்க்
கெய்துவெம்மை யிளைப்பஞ்சி னைப்போலக்
கைக்களாயிரம் வாங்கிக் காந்துபோய்
வெய்யவன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன்.

(இ-ள்.) உய்யவந்த சம்பந்தன் உடன்வந்தார்க்கு = உலகத்தார் உய்யும்பொருட்டு அவதரித்த ஆளுடைய பிள்ளையாருடன் வந்ததிருக்கூட்டத்தார்க்கு; எய்தும் வெம்மை இளைப்பஞ்சினைப்போல = தன்னுடைய கிரணஉஷ்ணத்தாலாய

இளைப்பினைக்கண்டு பயந்தவனைப்போல கைகள் ஆயிரம் வாங்கிக்கரந்து போய=ஆயிரங்கைகளையுஞ் சுருக்கிமறைந்துபோய ; வெய்யவன் சென்று மேலகடல வீழ்ந்தனன=சூரியன்மேல கடலிற்சென்று வீழ்ந்தான—எ-று. ()

அற்றைநாளிர வப்பதி யின்னிடைச்
சுற்றுநீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்ற மூர்ந்தபி ரான்கழல் பேணுவார்
வெற்றிமாதவத் தோருடன் மேவினார்.

(இ-ள்) அற்றைநாளிரவப்பதியின்னிடை=அந்நாளிரவில் அம்மாறன்பாடி யென்னுந் தலத்தினிடத்தில் ; சுற்றுநீடிய தொண்டர்கள் போற்றிட=தம்மைச்சூழ்ந்து நெருங்கியிருக்கின்ற திருத்தொண்டர் கூட்டங்களதுதிக்க ; பெற்றமூர்ந்தபிரான் கழல்பேணுவார்=இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரானது திருவடியை வழிபாடுசெய்யும் ஆளுடைய பிள்ளையார் , வெற்றிமாதவத்தோருடன் மேவினார்=வெற்றிபொருந்திய தவமுனிவருடன் எழுந்தருளியிருந்தார்—எ-று. (ககங)

இந்நிலைக்க ணெழில்வளர் பூந்தராய்
மன்னனார்தம் வழிவருத் தந்தினை
யன்னமாடுந் துறைநீ ரரத்துறைச்
சென்னியாற்றர் திருவுளஞ் செய்தனர்

(இ-ள்.) இந்நிலைக்கண் எழில்வளர் பூந்தராய் மன்னனார்தம்வழிவருத்தத்தினை=இவ்வாறு நிகழுங்கால் அழகின்மிக்க சீகாழியில் அவதரித்த ஆளுடைய பிள்ளையாரது வழிநடந்த வருத்தத்தை, அன்னமாடுந் துறைநீர் அரத்துறை=அன்னங்கள் குடைந்தாடும் நிவாநதியின் நீர்த்துறை சூழ்ந்த திருநெல்வாயில் அரத்துறையி லெழுந்தருளிய , சென்னியாற்றர் திருவுளஞ்செய்தனர்=சிரசின்கண் கங்காநதியைத்தரித்த அரத்துறை நாதர் தமது திருவுளத்திற் கொண்டருளினார்—எ-று. (ககச)

ஏறுதற்குச் சிவிகை யிடக்குடை
கூறியூதக் குலவுபொற் சின்னங்கள்
மாறின்முத்தின் படியினான் மன்னிய
நீறுவந்த நிமல ரருளுவார்.

(இ-ள்) ஏறுதற்குச்சிவிகை இடக்குடை=எழுந்தருளுதற்கு முத்துச்சிவிகையும் பிடித்தருள முத்துக்குடையும் , கூறியூதக்குலவு பொற் சின்னங்கள்=தமது திருநாமத்தை யாவருமறியக்கூறி ஊதுதற்குவிளங்குகின்ற பொன்னாலாய திருச்சின்னங்களும் , மாறின்முத்தின்படியினால் மன்னியநீறுவந்த நிமலர் அருளுவார்=ஒன்றற்கொன்று மாறுபடாதமுத்தின் வகையினாலாகிய அவைகளை விபூதியையுவந்த திருவரத்துறைநாதர் அருளுவாராய—எ-று.

நீடுவாழ்பதி யாகுநெல் வாயிலின்
மாடமாமனை தோறு மறையோர்க்குக்
கூடுகங்குற் கனவிற் குலமறை
தேடுசேவடி தோன்றமுன் சென்றுபின்

(இ-ள்.) நீடுவாழ்பதியாகும் நெல்வாயிலின் மாடமாமனை தோறுமறையோர்க்கு = தொன்றுதொட்டு மறையோர்வாழும் பதியாகிய திருவரத்துறையில் மேன்மாடங்களோங்கூடிய மாளிகைமனைகள் தோறுமுள்ள பிராமணர்களுக்கு; கங்குல்கூடு கனவிற் குல மறைதேடு சேவடிதோன்ற முன்சென்று பின் = அன்றிரவில் உண்டாகும் சொற்பன அவத்தையில் நான்குவேதங்களுந் தேடுகின்ற தமது சிவந்த திருவடிகள் காணவர அவர்முன்சென்று பின்பு—()

ஞானசம்பந்த னம்பா லணைகின்றான்
மானமுத்தின் சிவிகை மணிக்குடை
யானசின்னநம் பாற்கொண் டருங்கலைக்
கோனவன்பா லணைந்து கொடுமென

(இ-ள்) ஞானசம்பந்தன்நம்பால்அணைகின்றான் = திருஞானசம்பந்தன் நம்மிடத்துவருகின்றான், மானமுத்தின் சிவிகை மணிக்குடையான சின்னம் நம்பாற்கொண்டு = பெரியமுத்துச் சிவிகையையும் முத்துக்குடையையும் முத்துச் சின்னத்தையும் நம் ஆலயத்தினின்றெடுத்துக்கொண்டு, அருங்கலைக் கோனவன்பால் அணைந்துகொடுமென = அரிய (வேதமுதலிய) கலைஞானங்கட்கு அதிபனாகிய அத்திருஞான சம்பந்தனிடத்திற் கொடுமென்று—எ-று

நம்பாலென்றது = ஆலயத்திற்கானமையின் இலக்கணையெனக் (ககூஎ)

அந்தணாளர்க் குரைத்தவப் போழ்தினில்
வந்துகூடி மகிழ்ந்தற் புதமுறுஞ்
சிந்தையோடுஞ் செழுநீ ரரத்துறை
யிந்துசேகரர் கோயில்வந் தெய்தினார்.

அந்தணாளர்க்குஉரைத்தஅப்போழ்தினில் = அம்மறையவர்களுக்குச்சிவபிரான் திருவாய் மலர்ந்தருளிய சமயத்தில் அவரெல்லாம்; வந்துகூடிமகிழ்ந்து அற்புதமுறுஞ்சிந்தையோடு = ஒருங்குதிரண்டுமகிழ்ச்சியடைந்து அதிசயமிக்க மனதோடும், செழுநீர் அரத்துறை இந்து சேகரர் கோயில்வந்தெய்தினார் = செழுமைமிக்க நீர்வளம் பொருந்திய திருவரத்துறையி லெழுந்தருளியசந்திரசேகரராகிய திருவரத்துறை நாதரது திருக்கோயிலை வந்தடைந்தார்கள் —எ-று. (ககூஅ)

ஆங்குமற்ற வருளடி யார்தொ
ழோங்குகோயிலு ளார்க்குமுண் டாயிட
வீங்கிதென்ன வதிசய மென்பவர்
தாங்களம்மறை யோர்க்குமுன் சாற்றினார்

அங்கு மறறவருள அடியாருடன ஒஙகுகோயில உள்ளார்க்கு முண்டா யிட=அச்சொறபன ரூபமான திருவருள் அங்கிருக்கும் அடியாருடன் திருக் கோயிலில உள்ள அகத்தொண்டாகளுக்கும் உண்டாக ; ஈங்கிதென்ன வதிச யமெனபவா தாங்கள அம்மறையோாககு முன்சாறறினா=இவவிடத்து இ து, கணடறியாத அதிசயமென்று கூறுமவாகளாய அவாகளும அங்குவந்து கூடியபிராமணாகளுக்கு முனனே தெரிவித்தாாகள்—எ-று.

ாணடு அகததொணடா எனபது ஆதிசைவரை எனக. (கககூ)

சாலமிககவி யபபுறு தனமையின
பாலராதலும பளளி யெழுசசியின
காலமெயதிடக காதல வழிபபடுஞ
சீலமிககாா திருககாபபு நீககினாா.

(இ-ள) சாலமிகக வியபபுறு தனமையின பாலராதலும=இவவாறு அஙகுசோநத யாவருமமிகச்சிறநத அதிசயமுறறதனமையின பததியாராத லும, பளளியெழுசசியினகாலம எயதிட=திருபபளளி யெழுசசிக குரிய வைககறைக காலமவர, காதலவழிபபடுஞ சீலமிககாாதிருககாப்புநீககினாா= பததிவழிபபடட நலலொழுககமிகக அவவநதணாகள திருவாயிலின திருக காபபினைநீககினாாகள—எ-று (உா)

திஙசணீாமைச செழுநதிரண முததினற
றுஙகவெணகுடை தூய சிவிகையும
பொஙகலூதும பொருவருஞ சினனமு
மஙகணா ரருளினற கணடனா.

(இ-ள) திங்கள நீாமைசசெழுநதிரண முததினால=சநதிரன்போலும தணணியவொளியமைநதசெழுமைபொருநதியதிரணடமுத்தினாலாகிய;துஙக வெணகுடைதூயசிவிகையும=உயாநதவெளளியதிருககுடையும்பரிசுத்தமான முததுசசிவிகையும் ; பொஙகலூதும் பொருவருஞ் சினனமும=பொலிவோடூ துகினற ஒபபிலலாத திருச்சினனமும ; அஙகண நாதா அருளினால் கண்ட னா=சிவபிரானது திருவருளினால உணடாயிருந தமையை அவவிடத்து அ வாகளகண்டாாகள—எ-று. (உாக)

கணடபின்னவா கைததலை மேறகுவித
தெண்டிசைக்கும் விளககிவை யாமெனத்
தொண்டரோடு மறையவா சூழ்ந்தெழுந
தண்டர்நாடு மறிவுற வார்த்தனர்.

(இ-ள.) கண்டபின் அவாகைததலைமேற்குவித்து=அவ்வாறுகண்டபினபு அவ்வந்தணர்களதமதுகைகளைத் தலையின்மேறகூபபி ; எண்டிசைககும் விளக் கிவையாமென=எட்டுத்திக்குகளுககும் இவைவிளக்காமென்று துதிக்க ; தொ

ண்டரோடு மறையவர் சூழ்ந்தெழுந்து=அடியார்களோடுமற்றைப் பிராமணர்களும் ஒருங்குதிரண்டெழுந்து ; அண்டர்மேல் அறிவுறவார்த்தனர்=மண்ணுலகன்றித்தேவருலகமும் அறியும்படி ஆரவாரித்தார்கள்—எ-று. (உஉஉ)

சங்குதுந்துபி தாரை பேரிமுதற்
பொங்குபல்லிய நாதம் பொலிந்தெழ
வங்கணனரு ளாலவை கொண்டுடன்
பொங்குகாத லெதிர்கொளப் போதுவார்

(இ-ள்) சங்குதுந்துபி தாரை பேரிமுதல்பொங்குபல்லியநாதம்பொலிந்தெழ=சங்கமும் துந்துபியும்தாரையும்பேரிகையுமுதலியசிறந்தபலவகைவாத்தியங்களினோசை அதிகரித்து எழாநிற்க , அங்கணன் அருளால் அவைகொண்டு உடன்=சிவபிரானது திருவருளால் அவைகளை யுடன்கொண்டு , பொங்கு காதல் எதிர்கொளப் போதுவார்=அதிகரித்த விருப்பத்தோடு பிள்ளையாரை எதிர்கொள்ளும்படி போகின்றவராய—எ-று.

பொங்குகாதல் எதிர்கொள என்னுங் கால் தாமணுகி யெதிர் கொள்ளுமுன் தமதுகாதல் விரைந்து எதிர் கொள்ள என்னு மமையும். இது அவாநுசிவநேச மிகுதியைப் புலப்படுத்தியது. (உஉரு)

மாசில்வாய்மைநெல் வாயின் மறையவ
ராசில்சீர்ச்சண்பை யாண்டகை யார்கெதிர்
தேசுடைச்சிவி கைமுத லாயின
வீசரின்னரு ளாற்றாங்கி யேகினார்

(இ-ள்) மாசில்வாய்மைநெல்வாயின்மறையவர்=குற்றமற்றமெய்ப்பத்தியையுடையநெல்வாயிலஅரத்துறையிலவசிக்குமஅந்தணர்கள்,ஆசில்சீர்ச்சண்பை ஆண்டகையார்கெதிர்=குற்றமற்ற சிறப்பினையுடைய சீகாழியில் அவதரித்த ஆளுடைய பிள்ளையார்க்கெதிராக , தேசுடைச் சிவிகை முதலாயின=பிரகாசத்தை யுடைய முத்துச் சிவிகை முதலாயினவற்றை , ஈசர் இன்னருளால் தாங்கியேகினார்=சிவபிரானது இனிய திருவருளால் எடுத்துக்கொண்டு சென்றார்கள்—எ-று.

போதுவாராய நெல்வாயில் மறையவர் ஏகினாரெனக் கூட்டுக. (உஉச)

இத்தலையிவ ரின்னண மேகின
ரத்தலைச்சண்பை நாதர்க்கு மவ்விரா
முத்தநற்சிவி கைமுத லாயின
வுய்த்தளிக்கும் படிமுன் னுணர்த்துவார்.

(இ-ள்.) இத்தலை இவர் இன்னணமேகினர்=இவ்விடத்துப்பிராமணர் முதலியநெல்வாயிலின் கணுள்ளஅடியார்கள் இவ்வாறுசென்றார்கள் , அத்தலைச் சண்பை நாதர்க்கும் அவ்விரா=மாறன் பாடியாகிய அவ்விடத்தில் எழுந்தரு

ளிய சீகாழித்தலைவராகிய பிள்ளையாாகளும அவ்விராப்போதில்;முத்தாற சிவி கை முதலாயின=நலல திருமுத்துச்சிவிகை முதலாயினவற்றை ; உய்த்து அளிக்கும படிமுன உணாததுவார்=ஏறிச்செலுத்தும் வண்ணம் அவர்க்கு முன அறிவிபபவராய—எ-று. (௨௱௫)

அள்ளனீாவயல சூழு மாதததுறை
வளளலாாா மகிழநதளிககு மவை
கொளளலாகுஙகொண் டுயதத்லசெய வாயென
வுள்ளவாறருள செயய வுணாநதபின.

(இ-ள) அளளல நீாவயலசூழுமஅரததுறைவளளலாா=சேறுபொருந தியநீாவளமிகககவயலசூழநத திருவரததுறையிலெழுநதருளிய வளளலாகிய திருவரததுறைநாதா, நாமமகிழநது அளிககுமஅவைகொளளலாகும=நாமஉ ளமகிழநது கொடுககு மவைகளை கைககொளளுதல பொருநதும (அதனால) ; கொணடு உயததலசெயவாயென உளளவாறு அருளசெயய உணாநதபின்= அவைகளை அங்கீகரிததுககொணடு சிவிகையை யேறிசசெலுததுவா யெனறு திருவரததுறையில அருளியவகையை யுளளவணணம அருளிச்செயயபபிள் ளையாா துயிலநீஙகிந திருககண விழிததபின்பு—எ-று.

உணாதது வாராகிய அரததுறைவளளல அருளசெயயளனககூட்டுக (௨௱௬)

சண்பையாளியாா தாஙகண்ட மெயயருட
பண்புதநதையாா தமமுடன் பாஙகமா
தொண்டருககருள் செயது தொழாமுனம
விண்புலபபட வீஙகிரு ணீஙகலும.

(இ-ள.) சணபை யாளியாா தாஙகணட மெயயருடபணபு=சீகாழியில அவதரிதத ஆளுடைய பிள்ளையாா தாம அன்று கணடதிருவருளாகிய பண பினை; தநதையாா தமமுடன பாஙகமா தொணடருககருள செயது தொழா முனம்=தநதையாருடனபககததிறசூழநத அடியாாகளுககும அருளிச்செயது திருவருளை வணங்குமுனனமே ; விணபுலபபட வீஙகுஇருளநீஙகலும்=ஆகா யம்தன்களுககுப புலபபட அதிகரித்த இருளானது நீங்கவும்—எ-று.

ஆகாயம கட்புலனுகா வெனபாரை மறுத்து ஆகாயத்திறபருந்துதோன் றுகிறது என்னும நியாயத்தால புலப்படுமென்பார் விண்புலபபட வெனறுா இருள ஒளியினது அபாவமென்றும் ஓாபொருளென்றும கூறுவாருமுளா.

மாலையாமம புலாவுறும வைகறை
வேலைசெயவினை முறறிவெண் ணீறணி
கோலமேனிய ராயககை மலாகுவித
தேலவஞ்செழுத தோதி யெழுநதனா.



(இ-ள்) மாலையாமம் புலரவும் வைகறைவேலை=மாலைப் பொழுதோடு கூடிய இராக்காலம் நீங்கும் விடியற்காலத்தில், செய்வினைமுற்றி வெண்ணீறணி கோலமேனியராய கைம்மலர்குவித்து=சந்தியாவந்தன மல்லாத ஸ்நானமுதலிய நித்தியகடன்களை முடித்து வெளிய விபூதிதரித்த அழகிய திருமேனியை யுடையவராய்க் கரகமலங்களை கூப்பி, ஏல அஞ்செழுத்து ஓதியெழுந்தனர்=பொருந்த (திருவரத்துறையைக்கருதிச்) செல்லும்பட்டு திருவஞ்செழுத்தை உச்சரித்துக்கொண்டெழுந்தருளினார்—எ-று.

பிள்ளையாரக்ககாலத்து உபநயன மின்மையிற் சந்தியாவந்தனம் விலக்கப்பட்டது. (உ௱அ)

போதஞானப் புகலிப் புனிதரைச்
சீதமுத்தின் சிவிகைமே லேற்றிடக்
காதல்செய்பவன் போலக் கருங்கடன்
மீதுதேரினவந் தெய்தினன் வெய்யவன்

(இ-ள்.) போதஞானப் புகலிப்புனிதரை=உண்மை ஞானத்தையுடைய சீகாழியில் அவதரித்த ஆளுடைய பிள்ளையாரை, சீதமுத்தின் சிவிகைமேலேற்றிடக்காதல் செய்பவன்போல=குளிர்ந்த முத்துச் சிவிகையின்மே லேற்ற விருப்ப முற்றூன்போல, கருங்கடன் மீது தேரினவந் தெய்தினன் வெய்யவன்=கரியகடலினிடத்துப் பொற்றேரின்மேல் சூரியனுதித்தான்—எ-று. ()

ஆயபோழ்தி னரவெனு மாரப்பு ன்
றூயமுத்தின் சிவிகை சுடர்க்குடை
மேயசின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ
டேயவந்தணர் தாமெதிர் தோன்றினார்.

(இ-ள்.) ஆயபோழ் தினரவெனும் ஆரப்புடன்=அதுசமயத்து அரவென்னும ஓசையோடு; தூயமுத்தின் சிவிகை சுடர்க்குடை மேயசின்னங்கள் கொண்டு=களங்கமில்லாத முத்துச் சிவிகையையும் ஒளியையுடைய குடையையும் பொருந்திய திருச்சின்னங்களையும எடுத்துக்கொண்டு, மெய்யன்பரோடேய வந்தணர் தாமெதிர் தோன்றினார்=மெய்யப்பத்தியையுடைய அடியார்களோடு பொருந்த அந்தத்திருவரத்துறையிலுள்ள வாழும பிராமணர்களும் பிள்ளையார் சந்நிதியில் வந்தார்கள்—எ-று. (உ௱௰)

வந்துதோன்றிய வந்தணர் மாதவர்
கந்தவார்பொழிற் காழிநன் னாடர்முன்
னந்தமிலசீ ரரத்துறை யாதியார்
தந்தபேரரு டாங்குவீ ரென்றனர்.

(இ-ள்.) வந்து தோன்றிய அந்தணர் மாதவர்=வந்து பிள்ளையாரது திருமுன்னே தோன்றிய பிராமணர்களும் தவத்தையுடைய அடியார்களும்;

கந்தவார் பொழிற்காழி நன்னாடர்முன்=வாசனையுடைய நீண்டசோலைகள் சூழ்ந்த சீகாழியென்னும் நல்ல திருநாட்டையுடைய பிள்ளையார் திருமுன் னின்று, அந்த மிலசீரரத்துறை யாதியார் தந்தபோ அருள் தாங்குவீர் என்ற னர்=அளவில்லாத சிறப்பினையுடைய அரத்துறைநாதர் தந்தருளிய பெரிய திருவருளாகிய இவைகளைக் கைக்கொள்வீரென்று வணங்கிக்கூறினர்—எ-று.

காரியத்தைக்காரணமாக உபசரித்துப்பேரருளென்றார். (௨௧௧)

என்றுதங்களுக்கீச ரருள்செய்த
தொன்றுமங்கொழி யாமையுரைத்துமுன்
னின்றுபோற்றித் தொழுதிட நேர்ந்தது
மன்றுளாரரு ளென்று வணங்கினார்.

(இ-ள்.) என்று தங்களுக்கீசரருள் செய்தது=இவ்வாறு தங்களுக்குத் திருவரத்துறை நாதர் அருளிச்செய்தது, ஒன்றுமங் கொழியாமை யுரைத்து முன்னின்று போற்றித்தொழுதிட= ஒன்றையும் பிள்ளையாரிடத்து ஒழியாது கூறித்திருமுன்னின்று துதித்துவணங்க, நேர்ந்தது மன்றுளார் அருளென்று வணங்கினார்=இவ்வாறு நிகழ்ந்தது நடேசப்பெருமானது திருவருளேயென்று பிள்ளையார் பணிந்தருளினார்—எ-று.

நேர்ந்ததென்றதனால், சிவபிரான் சொப்பனம் நிகழ்த்தியதும் யானமுதலியன அளித்ததும் குறிப்பித்ததுணர்க. (௨௧௨)

எந்தையீச னெனவெடுத் திவ்வருள்
வந்தவாறுமற் றிவ்வண மோவென்று
சிந்தைசெய்யுந் திருப்பதி கத்திசை
புந்தியாரப் புகன்றெதிர் போற்றுவார்.

(இ-ள்) எந்தை யீசனெனஎடுத்து=எந்தையீசனென அடியெடுத்து; இவ்வருள் வந்தவாறுமற்று இவ்வண்ணமோவென்று=இவ்வருள் வந்தவழிஇத் திருவருள் வந்தவாறு (வழிவருத்தத்தில் சிவபிரானைச் சிந்தித்துவந்த) வண்ணமோவென்று, சிந்தைசெய்யும் திருப்பதிகத்து=தாம் கருதிய பொருளையுடைய திருப்பதிகத்தின் கண், இசைபுந்தியாரப் புகன்றெதிர் போற்றுவார்= இசையோடு திருவுளம் பொருந்த திருவாய் மலர்ந்தருளி ஆலயத்தின் எதிரே நின்று துதிக்கும் ஆளுடைய பிள்ளையார்—எ-று. (௨௧௩)

மெய்ம்மைபோற்றி விடாத விருப்பினாற்
றம்மையுன்னும் பரிசுதந் தாள்பவர்
செம்மைநித்தில யானச் சிறப்பரு
ளெம்மைபாலுவப் பானின் றளித்ததே.

(இ-ள்.) மெய்ம்மைபோற்றி விடாதவிருப்பினால்=உண்மையை யோம்பி நீங்காதபத்தியினால், தம்மையுன்னும்பரிசுதந்தாள்பவர்=தம்மையெக்காலத்

தும் இடைவிடாது சிந்திக்கும் பெரும்பேறான பரிசினை எமக்குத் தந்து ஆளுஞ்சிவபிரானலே, செம்மை நித்தில யானச்சிறப்பருள்=அழகிய முத்துச்சிவிகையாகிய சிறப்பினை யருளுந் திருவருள்; எம்மை யாளுவப்பா னின்றளித்தது=எம்மையாளாக உவக்கும்பொருட்டு இன்று அளிக்கப்பட்டது—எ-று.

எம்மை யாட்கொள்ளும் பொருட்டு நித்திலயானச் சிறப்பருள் அளித்ததெனக் கூட்டுக. அளித்ததெனச் செயப்படு பொருளை வினைமுதலாகவைத்து அதன்மேல் வினைமுதல்வினை ஏற்றப்பட்டது. (௨௧௪)



திருநெல்வாயில் - திருஅரத்துறை- பண்-பியந்தைக்காந்தாரம்
திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமா னேறமர்கடவு ளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லாற் சென்றுகைகூடுவ தன்றால்
கந்தமாமலருந்திக் கடும்புனனிவா மல்கு கரைமே
லந்தண்சோலைநெல்வாயி லரத்துறையடிகட மருளே.

ஈர்வார்சடைதன்மே லிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச் சித்தாகடொழுசெல்வந்தன்றால்
வாரிமாமலருந்தி வருபுனனிவா மல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயி லரத்துறையடிகட மருளே.

பிணிகலந்தபுன்சடைமேற் பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாத பாவிகடொழுசெல்வந்தன்றால்
மணிகலந்துபொன்னுந்தி வருபுனனிவா மல்குகரைமே
லணிகலந்தநெல்வாயி லரத்துறையடிகட மருளே.

துன்னவாடையொன்றுடுத்துத் தூயவெண்ணீற்றினராகி
யுன்னிநைபவர்க்கல்லா லொன்றுங்கைகூடுவதன்றால்
பொன்னுமாமணியுந்திப் பொருபுனனிவா மல்குகரைமே
லன்னமாருநெல்வாயி லரத்துறையடிகட மருளே.

வெருகுரிஞ்சுவெங்காட்டி லாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லா லொன்றுங்கைகூடுவதன்றால்
முருகுரிஞ்சுபூஞ்சோலை மொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயி லரத்துறையடிகட மருளே

உரவுநீர்சடைக்கரந்த வொருவனென்றுளங்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற் பரிந்துகைகூடுவதன்றால்
குரவநீடியசோலைக் குளிர்புனனிவா மல்குகரைமே
லரவமாருநெல்வாயி லரத்துறையடிகட மருளே.

நீலமாமணிமிடறறு நீறணிசிவனெனபபேணுஞ்
சீலமாநதாகடகலலாற செனறுகைகூடுவதனறாற
கோலமாமலருநதிக குளிர்புனனிவாமலகுகரைமே
லாலுஞ்சோலைநெலவாயி லரததுறையடிகடம்மருளே.

செழுந்தணமாலவரையெடுதத செருவலியிராவணனலற
வழுநதலுனறியவிரலான போறறியென்பாககலலதருளான
கொழுஙகனிசுமநதுநதிக குளிரபுனனிவாமலகுகரைமே
லழுநதுஞசோலைநெலவாயி லரததுறையடிகடமமருளே.

நுணங்குநூலயனமாலு மிருவருநோககரியானை
வணஙகிநைபவாககலலால வநதுகைகூடுவதனறன
மணஙகமழநதுபொனனுநதி வருபுனனிவாமலகுகரைமே
லணஙகுஞசோலைநெலவாயி லரததுறையடிகடமமருளே.

சாககியபபடுவாருஞ சமணபடுவாாகளுமறறும
பாககியபபட டிலலாப பாவிகடொழுசசெலவதனறாற
பூககமழநதுபொனனுநதிப பொருபுனனிவாமலகுகரைமே
லாாகுஞசோலைநெலவாயி லரததுறையடிகடமமருளே.

கரையினாாபொழிலசூழநத காழியுணஞானசமபநத
னறையுமபூமபுனலபாநத வரததுறையடிகடமமருளை
முறைமையாறசொனனபாடன மொழியுமாநதாதமவினைபோயப
பறையுமையுறவிலலைப பாடடிவைபததுமவலலாாககே

திருசசிறறமபலம.

சுவாமிபெயா-அரததுறைநாதா தேவியாா-ஆநநதநாயகியமமை.



பொடியணிநத புராண னரததுறை
யடிகடமமரு ளேயிது வாமெனப
படியிலாதசொன மாலைகள பாடியே
நெடிதுபோறறிப பதிக நிரபபினாா

(இ-ள்.) பொடியணிநத புராணனரததுறை யடிகடமமருளே யிதுவாமென=விபூதியணிநத திருமேனியையுடைய பழையோனாய திருவரததுறையிலெழுநதருளிய இறைவன திருவருள (சிநதை செயபவாககனறி கைகூடுதலில தென்னும) இததன்மையதேயாமெனறு, படியிலாத சொனமாலைகள பாடி=ஒபபிலலாத செநதமிழச சொலலாலாகிய செயயுணமாலை களைபபாடியருளி ; நெடிதுபோறறிப் பதிகம நிரபபினாா=அச்செயயுளகளை தோறும் அப்

யொருளமைத்துத் துதித்துத் திருக்கடைக் காப்பையும் அருளிப்பதிகத்தை நிரப்பினார்—எ-று.

போற்றுவார் எந்தை யீசனென்னவெடுத்து அடிக்கடம அருளினவாமெனப் பாடிப் போற்றிப பதிகத்தை நிரப்பினாரென்முடிக்க. (௨௧௫)

சோதிமுத்தின் சிவிகைசூழ வந்துபார்
மீதுதாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றாதியாரரு ளாதலி னஞ்செழுத்
தோதியேறினா ருய்ய வுலகெலாம்

(இ-ள். சோதிமுத்தின் சிவிகைசூழவந்து=ஒளிபொருந்திய முத்தாலாய சிவிகையினைப்பிரதட்சணஞ்செய்து, பார்மீது தாழ்ந்து=பூமியின்மேல் திருமேனிதோயப்பணிந்து, வெண்ணீற்றொளிபோற்றி நின்று=வெள்ளிய விபூதியின் ஒளிபோன்ற வொளியினுடைய முத்துச்சிவிகையின் ஒளியைத்துதித்துநின்று, ஆதியாரருளாதலி னஞ்செழுத் தோதியேறினா ருய்யவுலகெலாம்= அத்திருமுத்தின் சிவிகை ஆதத்துறைநாதர் திருவருள் வடிவாதலால் திருவஞ்செழுத்தை யோதியருளி எல்லாவுலகமும் ஈடேற அதில் எழுந்தருளினார்—எ-று.

பிள்ளையார் சூழவந்து தாழ்ந்து போற்றி நின்று அஞ்செழுத்தோதி ஏறினாரென்முடிக்க.

"உலகெலாம்" என்றது இறைவனெடுத்த மங்கலமொழியாதலின் முதற்கணணும், "நிலவி உலகெலாம்" என இறுதிக்கணணும், வைத்தவாறுபோல, இடையிலும், "உய்ய உலகெலாம்" என வைத்தாரென்றல் ஆன்றோர் வழக்கு. (௨௧௬)

வேறு

தொண்டர்ஆர்த்தனர் சுருதிகளார்த்தன தொல்லை
யண்டர்ஆர்த்தன ரகிலமுமார்ப்புட னெய்தக்
கொண்டலார்த்தன முழவமுமார்த்தன குழூஉமி
வண்டருப்பொலி மலர்மழையார்த்தது வானம்

(இ-ள்) தொண்டர்ஆர்த்தனர்=அடியார்கள் அரவென ஆரவாரித்தனர், சுருதிகளார்த்தன=வேதங்கள் ஆரவாரித்தன, தொல்லையண்டர்ஆர்த்தனர்= பழையவிண்ணுலகின் கணவாழும் தேவர்களும் ஆரவாரித்தனர், அகிலமுமார்ப்புட னெய்தக்கொண்டலார்த்தன=எல்லாபொருள்களுமஆரவாரத்தாலாய ஒலியைப்பொருந்தும்படி மேகங்களும் ஆரவாரித்தன; குழூஉமிழவமுமார்த்தன=நெருங்கிய தேவதுந்துபியும் ஆரவாரித்தன; வண்டருப்பொலி மலர் மழையார்த்தது வானம்=வண்டுகளாரிங்காரப் பொலிவையுடைய பூமழையும் வானத்தின்கண் ஆரவாரித்தது—எ-று.



ஜகதீசனளிதத - சிவிகைமீதாரோகணிதது திருவாததுளாஆலயததின செலலல்

எல்லாப்பொருளும் ஆரப்புடனெய்தலாவது, மேகத்தொலி பேரொலி யாதலின், அது கம்பமுண்டாக, மூர்த்தப்பொருளோடியைத்தலாம்; ஒலியானது விபுகுணம், அதுமூர்த்தகுணம் அமூர்த்தகுணம் என இருவகையாதலின

வளையுமார்த்தன வயிர்களுமார்த்தன மறையின்
கிளையுமார்த்தன கிளைஞருமார்த்தனர் கெழுவுங்
களைகணாரத்தோர் கருணையினாற்றன் முத்து
விளையுமாக்கதிர் வெண்குடையார்த்தது மிசையே.

(இ-ள்) வளையுமார்த்தன=சங்குகளும் ஒலித்தன, வயிர்களுமார்த்தன கொம்புகளும் ஒலித்தன, மறையின் கிளையுமார்த்தன=வேதங்களின் சாகைகளும் ஆரவாரித்தன, கிளைஞருமார்த்தனர்=உறவினர்களாகிய வேதியர்களும ஆரவாரித்தனர், கெழுவுங்களைகணாத்தோர் கருணையினாற்றன=ஆன்மாக்களிடங்கூடி உயிர்க்குயிராய் நின்ற சிவபிரானது கிருபையினால், முத்து விளையுமாக்கதிர் வெண்குடையார்த்தது மிசையே=முத்தினாலாகிய பெரியகிரணத்தையுடைய வெள்ளிய குடையும் மேலே (கவிக்கப்பட்டு) ஆரவாரித்தது—எ-று

கருணையினாற்றன எனபுழி ஆர்த்தல = கட்டுதல ரண்டு இயைபினால பிணித்தல மேற்று ஓர்=அசைநிலை களைகணார்து என்றது, களைகணாத்த தென்விகாரமாயிற்று. (௨௧௮)

பலகுவெண்கதிர்ப் பந்திசோதிநதிலச் சிவிகை
புலகுநீற்றொளி யுடன்பொலிபுகலிகா வலனு
ரலகுவெள்வளை யலைந்தெழுமணிநிரைத் தரங்க
மலகுபாற்கடல வளர்மதியுதித்தென வந்தார்.

(இ-ள்) பலகுவெண்கதிர் பந்திசோதிநதிலச்சிவிகை=நிறைந்த வெள்ளிய கிரணத்தையுடைய முத்துக்களின் பத்திசோந்த சிவிகையில், புலகு நீற்றொளியுடன பொலிபுகலி காவலனார்=நீங்காத திருநீற்று ஒளியோடு விளங்கும் சீகாழிக்குத் தலைவராகிய ஆளுடைய பிள்ளையார், அலகுவெள்வளை யலைந்தெழுமணிநிரைத் தரங்கமலகு=பொருந்திய வெள்ளிய சங்குகளை அலைத்தெழாநின்ற அழகிய வரிசையான அலைகள் நிறைந்த; பாற்கடல வளர் மதியுதித்தெனவந்தார்=பாற்கடலில் வளர்கின்ற இளம்பிறை உதித்தாற்போல எழுந்தருளி வந்தார்—எ-று (௨௧௯)

நீடுதொண்டர்கண் மறையவரோனையோர் நெருங்கி
மாடுகொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கைமேற் குவித்தே
யாடுகின்றன ரயர்ந்தன ரன்பிலா னந்தங்
கூடுகின்றகண் பொழிபுனல்வெள்ளத்திற் குளித்தார்.

(இ-ள்.) நீடுதொண்டர்கண் மறையவர் ஏனையோர் நெருங்கி = பத்தியிற் சிறந்த அடியார்களும் வேதியர்களும் அவர் ஒழிந்த ஏனையோரும் இடமின்றி நெருங்கி (அத்திருப்பொலிவை நோக்கி), மாடுகொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கை மேற்குவித்தே = தமது (மனத்தினிடத்து) இடங்கொண்டு நிகழாநின்ற மகிழ்ச்சியினாலே மலர்போலும் கைகளைச் சிரசின்மேற் கூப்பி, ஆடுகின்றன ராயாத்தன ரளவிலானந்தம் = ஆனந்தக்கூத்து ஆடுகின்றவராயும் அதனாற் பரவசம் அடைந்தவராயும் அளவுபடாத ஆனந்தத்தால், கூடுகின்ற கண்பொழி புனல் வெள்ளத்திற் குளித்தார் = கண்களினின்றும் பொழியும் ஆனந்தபாஷ்பமாகிய வெள்ளத்தில் மூழ்கினார் — எ-று. (௨௨௰)

செய்யபொன்புனை வெண்டரளத் தணிசிறக்கச்
சைவமாமறைத் தலைவர்பாற்பெறுந் தனிக்காளம்
வையமேழுடன் மறைகளு நிறைதவத் தோரு
முய்யஞானசம் பந்தன்வந்தானென வூத.

(இ-ள்.) செய்யபொன்புனை வெண்டரளத் தணிசிறக்க = சிவந்தபொன்னாலே புனைந்து வெள்ளியமுத்துக்களினாலே அழகுபெற, சைவமாமறைத் தலைவர்பாற் பெறுந்தனிக்காளம் = பெரிய சைவவைதிகர்களுக்குத் தலைவராகிய அரத்துறைநாதரிடத்துப் பெற்ற ஒப்பில்லாத திருமுத்துக் காளமானது, வையமேழுடன் மறைகளு நிறைதவத்தோரும் உய்ய = ஏழுலகங்களோடு வேதங்களும் நிறைந்த தவத்தினரும் ஈடேற, ஞானசம்பந்தன் வந்தானென வூத = திருஞானசம்பந்தப் பிள்ளையார் வந்தாரென்று திருமுன் ஊதா நிற்பவும் — எ-று. (௨௨௧)

சுற்றுமாமறைச் சுருதியின் பெருங்கொலி நடுவே
தெற்றினார்புர மெரித்தவர் தருதிருச் சின்ன
முற்றுமானவண் ஞானமே முலைசுரந் தூட்டப்
பெற்றபாலறா வாயன்வந்தானெனப் பிடிக்க.

(இ-ள்.) சுற்றுமாமறைச் சுருதியின் பெருங்கொலி நடுவே = பிள்ளையாரைச் சூழ்ந்த பெரிய வேதங்களின் மிக்க ஆரவாரத்தினிடையே, தெற்றினார் புரமெரித்தவர் தருதிருச்சின்னம் = மாறுபட்ட பகைவரது திரிபுரங்களைப் புன்னகை செய்து எரித்த அரத்துறைநாதர் தந்தருளிய திருச்சின்னம், முற்றுமானவண் ஞானமே முலைசுரந் தூட்டப்பெற்ற = (சித்தும் சடமுமாய பொருள்) முழுவதும் நிறைந்தவளாகிய உமாதேவியார் ஞானத்தையே திருமுலைசுரந்து உண்பிக்கப்பெற்ற, பாலறாவாயன் வந்தானெனப் பிடிக்க = பாலமணம் விட்டு நீங்காத திருவாயர் எழுந்தருளினாரென்று ஊதவும் — எ-று. (௨௨௨)

புணர்ந்தமெய்த்தவக் குழாத்தொடும் போதுவார் முன்னே
யிணைந்தநித்திலத் திலங்கொளி நலங்கிளர் தாரை
யணைந்தமாமறை முற்றக்கலையகிலமு மோதா
துணர்ந்தமுத்தமிழ் விரகன்வந்தானென் றூத.

(இ-ள்.) புணர்ந்த மெய்த்தவக் குழாத்தொடும் போதுவார்முன்னே = தம்மோடு உடன்சென்ற மெய்த் தவத்தையுடைய அடியார் கூட்டங்களுடன் எழுந்தருளும் பிள்ளையார் திருமுன் ; இணைந்த நித்தில் லத்திலங்கொளி நலங்கிளர்தாரை = தம் முள்மாறுபடாத முத்துக்களால் விளங்கும் ஒளியினலமிக்க முத்தின்தாரை , அணைந்தமாமறை முதற்கலை யகிலமும் ஓதாதுணர்ந்த = தம்மையடையப் பெரிய வேதமுதலிய எல்லாநூல்களையும் ஓதாது உணர்ந்த, முத்தமிழ் விரகன்வந்தா னென்னூத = முத்தமிழ் விரகன்வந்தானென்று ஒலியாநிற்பவும் — எ-று.

முன்னர் நூலாசிரியர், பொங்கலூதும பொருவருஞ்சின்னமும் அங்கணுதரருளின்ற கண்டனர் என்றதனால் ஈண்டு - காளம், தாரை, என்பன பரியாயங்களாய முத்தின் சின்ன மென்றனையே குறித்ததெனின் —

ஞானசம்பந்தன், பாலறுவாயன், முத்தமிழ் விரகன், என்னும் மூன்று திருநாமங்களையும் ஒருங்கு கூறிச்சின்னம் பிடிக்கவென முடித்தலைமையும், அவ்வாறு கூறுது அந்நாமங்கண் மூன்றையு முறையே விதந்து கூறிச்சைவ மாமறைத்தலைவர் பாற் பெறுந்தனிக்காள மூதவெனவும், தெற்றினார் புரமெரித்தவர் தருதிருச்சின்னம் பிடிக்கவெனவும், நலங்கிளர் தாரையூதவெனவும், வெவ்வேறு செய்யுட் கூறுதலானும் பின்னும் சின்னம், தனிக்காளம், தாரை, சிரபுரத்தாண்டகை வந்தானென்னுந் தகைமைவிளம்ப ஏற்ற திருப்பெயர் சாற்ற வெனக் கூறுதலானும்,மூன்றுமேபெற்றனவென்பது, கருத்தாகக்கூறினவென்பது கொள்ளக்கிடத்தலின், அதுபொருந்தாதெனக. (௨௨௩)

தெருளுமெய்க்கலை விளங்கவும்பாருளோர் சிந்தை
யிருளுநீங்கவு மெழுதுசொன்மறையளிப் பவர்தாம்
பொருளுஞானமும் போகமும்போற்றியென் பார்க்க
கருளுமங்கணர் திருவரத்துறையைவந் தணைந்தார்.

(இ-ள்.) தெருளுமெய்க்கலைவிளங்கவும் பாருளோர்சிந்தையிருளுமநீங்கவும் = தெளிவுடையச்செய்யும் மெய்ந்நூல்களாகிய வேதாகமநூல்கள் உலகினகண் நிலைபெறவும் அதனால் உலகினகண் உள்ளாரது மனத்திருளாகிய அஞ்ஞானம் நீங்கவும் , எழுதுசொன்மறை யளிப்பவர்தாம் = எழுதுமதமிழச் சொல்லாகிய வேதத்தை அருளித்தருளும் பிள்ளையார் , பொருளும் ஞானமும் போகமும் போற்றியென்பார்க்க கருளும் = பொருளினையும் ஞானத்தினையும் போகத்தினையும் இம்மைக்கண் துதிக்கும் அடியார்களுக்குக்கொடுக்கும் , அங்கணர் திருவரத்துறையை வந்தணைந்தார் = காருண்ணியத்தை யுடைய சிவபெருமானது திருவரத்துறையைவந்து அடைந்தருளினார் — எ-று.

இருளுமென்ற உம்மையால் கன்மமாயைகளுங்கொள்க.

அடியார்க்கு மறுமையென்னும் புண்ணிய வுலகடையும் இசையின்மையின் இம்மைக்கண்ணே ஞானமும் போகமும் சிவபெருமானருளவொன

கூறப்பட்டது. அவ்வாறுதல் பிள்ளையார் முதலியோரது சரித்திரத்தில் ஞான மளித்தலும் பொருளளித்தலும் சிவிகைமுதலிய போகமளித்தலும் போந்த வாறுணர்க. (உஉச)

வந்துகோபுர மணிநெடுவாயில்சேய்த் தாகச்
சந்தநித்திலச் சிவிகைநின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தையார்வமு மகிழ்ச்சியும் பொங்கிமுன் செல்ல
வந்திணண்மதி யணிந்தவர்கோயிலுள் ளடைந்தார்

(இ-ள்.) கோபுரமணி நெடுவாயில் சேய்த்தாகவந்து=திருக்கோபுரத்தி னது மணிகள் அழுத்திய நெடிய திருவாயிலுக்குச் சிறிதுதூரத்தே வந்தருளி, சந்தநித்திலச்சிவிகை நின்றிழிந்து தாழ்ந்தெழுந்து=அழகுள்ள முத்துச்சிவி கையினின்றும் பூமியிலிழிந்தருளி அத்தூலலிங்கமாகிய கோபுரத்தை வணங் கி யெழுந்து, சிந்தையார்வமும் மகிழ்ச்சியும் பொங்கிமுன்செல்ல=திருவு ளத்தில் சிவநேசமும் அதனால் மகிழ்ச்சியும் அதிகரித்து முன்செல்ல, அந்தி நண்மதி யணிந்தவர்கோயிலுள் ளடைந்தார்=அந்திப்போதில் தோன்றும் இளம்பிறையை யணிந்த இறைவரது திருக்கோயிலுள்ளாரும் அடைந்தரு ளினார்—எ-று. (உஉரு)

மன்னுகோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னியிற்கரங் குவித்துவீழ்ந்தன்பொடு திளைப்பா
ரென்னையும்பொரு ளாகவின்னருள்புரிந் தருளும்
பொன்னடித்தலத் தாமரைபோற்றியென் றெழுந்தார்

(இ-ள்) மன்னுகோயிலை வலங்கொண்டு திருமுன்புவந்து=நிலைபெற்ற திருக்கோயிலைப் பிரதட்சணஞ்செய்து ஸ்வாமி சந்நிதியில்வந்து, சென்னி யிற் கரங்குவித்து வீழ்ந் தன்பொடு திளைப்பார்=தமது சிரத்தில் திருக்கரங் களைக்கூப்பி நிலத்தில் வீழ்ந்து அன்பில் மூழ்கியபிள்ளையார், என்னையும்பொ ருளாக வின்னருள் புரிந்தருளும்=அடியேனையும் ஒருபொருளாகக் கருதி இனிய திருவருளைச்செய்தருளும், பொன்னடித் தலத்தாமரைபோற்றியென் றெழுந்தார்=பொன்போலும் திருவடித்தாமரைமலர்களுக்கு நமஸ்காரமென் று எழுந்தார்—எ-று (உஉசு)

வேறு.

சூடினார்கர கமலங்கள்சொரிந்திழி கண்ணீ
ராடினார்திரு மேனியிலரத்துறை விரும்பி
நீடினார்திரு வருட்பெருங் கருணையே நிகழப்
பாடினார்திருப் பதிகமேழிசையொடும் பயில.

(இ-ள்.) சூடினார் கரகமலங்கள்=கரங்களாகிய தாமரைமலர்களை மேற் கூப்பி, திருமேனியிற் சொரிந்திழிகண்ணீ ராடினார்=தமது திருமேனிமுழுதும்

கணைகளினின்றும (இடைவிடாது) சிந்தும் ஆனந்தபாஷ்பவெள்ளத்தில மூழ கினார் ; அரத்துறைவிரும்பி நீடினார திருவரு—பெருங கருணையேநிகழ=திரு வரத்துறையை விரும்பி நிலைபெற்று எழுந்தருளிய சிவபிரானது திருவருளா கிய பெருங்கருணையையேபொருந்துமபடி ,பாடினார்திருப்பதிகமேழிசையொ டும்பயில=குரலமுதலிய ஏழிசைகளும அமைய்ந் திருப்பதிகம பாடியருளி னார்—எ-று (உஉஎ)

இசைவிளங்கிட வியலபினிறபாடிநின றேத்தி
மிசைவிளங்குநீர வேணியாரருளினன் மீண்டு
திசைவிளங்கிடத திருவருளபெற்றவா சிலநா
ளசைவில்சீர்த்தொண்டா தமமுடனப்பதி யமாந்தாா.

(இ-ள) இசைவிளங்கிட வியலபினிறபாடி நினறேத்தி=ஏழிசைகளும் விளங்கமுறைப்படித் திருப்பதிகத்தைப் பாடிநின்று துதித்து , மிசைவிளங் குநீா வேணியா ரருளினை மீண்டு=வானத்தினகண் விளங்கிய கஙகையை யணிந்த சடாமகுடத்தையுடைய அரத்துறைநாதா திருவருளினால ஆலயத்தி னினறும மீண்டு , திசைவிளங்கிடத் திருவருள பெற்றவா=எத்திசையிலுள ளோருஞ் சிவஞானத்தால விளங்குமபடித் திருவருளைபபெற்ற பிளளையாா ; அசைவில சீர்த்தொண்டா தமமுடன சிலநாள அப்பதியமாந்தாா=சலியாத பகதிச்சிறப்பினையுடைய அடியாரோடு அரத்துறையெனனுந் திருப்பதியில சி லநாள வீறறிருந்தருளினா—எ-று.

அசைவில சீர்த்தொண்டா எனபது=ஆக்கம கேடுகளான்வரும் துன்ப மினபஙகளில வசப்படாமை

“பூதமைநது நிலையிற கலஙகினும மாறொாபாகா மலாததாள மறபி லாா”எனறதனுலுமுணாக (உஉஅ)

தேவாதமபிரான றிருவரத்துறையினி லிறைஞ்சி
மேவுநாளகளில விமலனாநெல்வெணணெய முதலாத்
தாவிலனபாக டமமுடன றொழுதுபின சணபைக
காவலாாருள பெற்றுடன கலந்துமீண டணைந்தாா.

(இ-ள) தேவாதமபிரான றிருவரத்துறையினி லிறைஞ்சி=தேவாபெ ருமானாகிய பரமசிவத்தின திருவரத்துறையை வணஙகி , மேவுநாட்களிலவி மலனாா நெல்வெணணெயமுதலா=அமாந்தருளி யிருந்தகாலத்தில வெண ணெயப்பரது திருநெல வெணணெயமுதலியதிருப்பதிகளை , தாவிலனபர்கள தமமுடன றொழுது=புனிதராகிய அடியாாகளுடன வணங்கி விடைகொண டு , பினசணபைக காவலாாருள பெற்றுடன கலந்து மீணடணைந்தாா=பின பு சீகாழிப்பிளளையாா திருஅருளபெற்றுத் திருககூட்டத்தோடு சோந்துமீ ளவும் அரத்துறையை அடைநதருளினா—எ-று. (உஉகூ)

விளங்குவேணு புரத்திருத்தோணி வீற்றிருந்த
களங்கொள்கண்டர்தங் காதலியாருடன் கூட
வுளங்கொளப்புகுந் துணர்வினில் வெளிப்பட வுருகி
வளங்கொள்பூம்புனற் புகலி மேற்செல்மனம் வைத்தார்.

(இ-ள்.) விளங்குவேணு புரத்திருத்தோணிவீற்றிருந்த களங்கொள்கண்டர்=செல்வங்களால் விளங்காநின்ற சீகாழியில் திருத்தோணி யென்னும் ஆலயத்தில் எழுந்தருளிய விஷத்தைத்தரித்த கண்டத்தையுடைய தோணியப்பர், தங்காதலி யாருடன்கூட=தமது பிராட்டியாராகிய பெரியநாயகியாரோடு, உளங்கொளப் புகுந்துணர்வினில்வெளிப்பட=தமது திருவுள்ளத்தில் பொருந்தும்படி எழுந்தருளி அறிவின்கண் விளங்க, உருகி வளங்கொள் பூம்புனற் புகலிமேற் செல்மனம் வைத்தார்=அதனால் மனம் உருகிப்பல வளங்கள் பொருந்திய பொருளினை யுடைய நீர்மிக்க சீகாழிக்குச் செல்லத்திருவுள்ளங் கொண்டார்—எ-று. (உ௯௰)

அண்ணலார்திரு வரத்துறையடிகளை வணங்கி
நண்ணுபேரரு ளால்விடைகொண்டுபோய் நடங்கொண்
டுண்ணிறைந்தபூங் கழலினையுச்சிமேற் கொண்டே
வெண்ணிலாமலர் நித்திலச்சிவிகைமேற் கொண்டார்

(இ-ள்) அண்ணலார் திருவரத்துறை யடிகளைவணங்கி=பெருமையிற் சிறந்த அரத்துறை நாதனைவணங்கி, நண்ணுபேரருளால் விடைகொண்டு போய் நடங்கொண்டு=நிலைபெற்ற அவரது பெரிய திருவருளால்விடைபெற்றுச்சென்று மீண்டு ஆனந்தக் கூத்தாடி, உண்ணிறைந்த பூங்கழலினை உச்சி மேற்கொண்டு=தமது திருவுள்ள முழுதும் நிறைந்த பொலிவினையுடைய திருவடிகளைச் சிரசின்மேற்கொண்டு, வெண்ணிலாமலர் நித்திலச்சிவிகை மேற் கொண்டார்=வெள்ளியகிரணம் விரிந்த திருமுத்துச்சிவிகையின்மேற்கொண்டருளினார்—எ-று.

எவ்வயிற் பெயரும் வெளிப்படத்தோன்றி அவ்வயின் நிலையல் செவ்வி தென்ப என்றதனால் இச்செய்யுட்கள் தோன்று எழுவாயுடையன இவ்வாறு வந்துழி யெல்லாம் கொள்க. (உ௯௧)

சிவிகைமுத்தினிற் பெருகொளிதிசையெலாம் விரிக்கக்
கவிகைவெண்மதிக் குளிரொளிகதிர்செய்வான் கலப்பக்
குவிகைமேற்கொண்டு மறையவர்குணலையிட் டாடப்
புவிகைமாறின்றிப் போற்றவந்தருளினார் போந்தார்

(இ-ள்) சிவிகை முத்தினிற் பெருகொளி திசையெலாம் விரிக்க=திருமுத்துச் சிவிகையின் முத்துக்களாலாய பெருகிய ஒளியானது திக்குகள்தோறும் விரியா நிற்கவும்; கவிகைவெண் மதிக்குளிரொளி கதிர்செய்வான் கலப்ப=முத்துக் குடையாகிய வெள்ளிய சந்திரனது குளிர்ந்த ஒளியானது சூரிய

(இ-ள்.) அன்புநீடிய வருவிக்கண் பொழியுமாறாவதனால் = அன்பு காரணமாக ஊற்றெடுக்கும் ஆனந்தக்கண்ணீர் கண்ணினின்றும் சொரிந்ததக்க விருப்புடன், முன்புபோற்றியே புறம்பணைமுத்தமிழ்விரகர் = மாசிலாமணியீசரைத் திருமுன்புவணங்கி ஆலயத்தின் புறம்பே எழுந்தருளும் ஆளுடையபிள்ளையார், துன்புபோமனத் திருத்தொண்டர் தம்முடன் தொழுது = துன்பலேசமும் தம்மிடத்திலல்லாத மனத்தையுடைய அடியார் திருக்கூட்டத்துடன் கலந்து வணங்கி, இன்பமேவியப் பதியினில் இனிதமர்ந்திருந்தார் = பேரின்பமடைந்து அத்திருப்பதியில் இனிதாக எழுந்தருளியிருந்தார்—எ-று.

அகமும் புறம்புமாய உடம்பு, பொருள், முதலியவற்றாலாய எப்பற்றும் அற்று இறைவன்பற்றொன்றையே கைப்பட்டாராதலின் துன்புபோ மனத்திருத்தொண்டர் என்றார், எனவே துன்ப நீக்கத்தின்கண் ஆனந்தப்பேறு உடையரென்பது போந்தவாறு காண்க. (௬௨௧)

மேவியங்குறை நாளினில் வேள்விசெய் வதற்குக்
காவதாகிய காலம்வந் தணைவுற வணைந்து
நாவிலச்சணையார் தலைவர்க்குந் தாதையார் தாமும்
போவதற்கரும் பொருள்பெற வேண்டினர் புகன்றார்

(இ-ள்.) மேவியங்குறை நாளினில் = அத்திருவாவடுதுறையென்னுந் திருப்பதியில் பொருந்தி எழுந்தருளியிருக்குங்காலத்தில், வேள்விசெய்வதற்குக் காவதாகிய காலம்வந்தணைவுற = யாகஞ்செய்தற்குத் தக்ககாலம்வர, நாவிலச்சணையார் தலைவராந் தாதையார் தாமும் அணைந்து = குற்றமற்ற சோத்திரியுள்ளார் தலைவராகிய ஆளுடைய பிள்ளையார் தந்தையாராகிய சிவபாத இருதயரும் அப்பிள்ளையாரை அணைந்து, போவதற்கரும் பொருள் பெற வேண்டினர் புகன்றார் = யாகநிமித்தம் சோத்திரியை யடையும்படி அரியபொன்னைப் பெறுதற்குப் பிள்ளையார் திருமுன்னே விண்ணப்பமொழிந்தார்—எ-று.

சிரௌதகன்மம் நித்தியமென்றும் நைமித்திகமென்றும் காமியமென்றும் மூவகைப்படும். சாயங்காலம் உதயகாலம் இவைகளில் நியமமாகச் செய்யத்தக்கதாக விதிக்கப்படும் அக்கினிகோத்திரம் முதலியன நித்தியங்கள், அக்கினிகோத்திரம் தெரிசபூரணமாசம் முதலியன வழுவுங்கால் அவை செய்யாமையால் வருந் தாழ்விற் குற்றம் போம்படி செய்யும் பதிக்கிருக்கிட்டி முதலியன நைமித்திகங்கள். இம்மையிற் பலிப்பனவும் மறுமையிற் பலிப்பனவுமாகிய பயன்களை விரும்பிச்செய்யும் இட்டிகள் காமியம் எனப்படும். இம்மையிற் பலிப்பன மழைமுதலியன விரும்பிச்செய்யுங் காரீயமுதலிய யாகங்கள் மறுமையிற் பலிப்பன சொர்க்கபலனை விரும்பிச்செய்யும் சோதிட்டோம முதலியன; இவைகளுள் நித்தியமாய தெரிசபூரணமாசம் மாசங்கடோறும் அமாவாசை பூரணைகளில் செய்யத்தக்கன, இவைசெய்பவர் நிருடபசுபந்தம் முதலியன வருடமுடிவில் காலகாலத்திற் செய்தற்குரியன வாதலின் ஆனியாடியாகிய முதுவேனில்நீங்கி ஆவணிபுரட்டாசியாகிய கார்ப்பருவம் வருதலின்

வேள்விசெய்வதனுக்காவதாகிய காலம் வந்தணைவுற என்றார். காராகாலத்திற் பூரணையிலாவது அமாவாசியிலாவது பசுவேட்கவென ஆபஸ்தம்பத்தும் கூறப்படும். (சஉஉ)

தந்தையார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தைநாளிலே மொழிந்ததமை நினைந்தருண் முன்னி
யந்தமில்பொரு ளாவன வாவடு துறையு
ளெந்தையாரடித் தலங்களன் றேயென வெழுந்தார்.

(இ-ள்.) தந்தையார் மொழிகேட்டலும் புகலியார்தலைவர்=தமது தந்தையாராகிய சிவபாத இருதயர் கூறிய சொல்லைக்கேட்டபொழுது சீகாழியினை உள்ளூராகக்கொண்ட தலைவராகிய ஆளுடைய பிள்ளையார், முந்தைநாளிலே மொழிந்ததமை நினைந்தருள் முன்னி=முன்னாள் முழுதும் யாகஞ்செய்யக்கருதிப் புறப்படுங்காலத்தில் அவர் தம்முடன் யாகஞ் செய்யவேண்டுமென்று கூறியதையும் திருவுள்ளத்திற்கருதிச் சிவபெருமானது திருவருளைச்சிந்தித்து; அந்தமில்பொருளாவன=அழிவில்லாத பொருளாய் எமக்குள்ளன, ஆவடுதுறையுள் எந்தையாரடித்தலங்களன்றேயென வெழுந்தார்=திருவாவடுதுறையின்கண் எழுந்தருளிய எமதுபிரானாகிய மாசிலாமணியீசரது திருவடிகளன்றோ என்று அங்கு எழுந்தருளினார்—எ-று. (சஉ௩)

சென்றுதேவர்தம் பிரான்மகிழ் கோயின்முன் பெய்தி
நின்றுபோற்றுவார் நீணிதி வேண்டினார்க் கீவ
தொன்றுமற்றிலே னுன்னடி யல்லதொன் றறியே
னென்றுபேரருள் வினவிய செந்தமி ழெடுத்தார்.

(இ-ள்.) சென்றுதேவர்தம்பிரான்மகிழ்கோயின்முன்பெய்தி=அடியார் திருக்கூட்டத்தோடுசென்று மாசிலாமணியீசரெழுந்தருளிய திருக்கோயிலின் முன் அடைந்தருளி, நின்றுபோற்றுவார்=திருமுன்னின்று துதிக்கும் ஆளுடையபிள்ளையார்; நீணிதிவேண்டினார்க்கீவதொன்றுமற்றிலேன்=மிக்கபொருளை விரும்பி எம்மைவந்தடைந்தார்க்குக் கொடுக்குஞ் செல்வப்பொருள் பிறிதொன்றுமில்லேன், உன்னடியல்லதொன்றறியேனென்று=உனது திருவடிகளை அல்லது பிறிதொன்றையுமறியேன் என்று, பேரருள் வினவிய செந்தமிழெடுத்தார்=அச்சிவபிரான் திருவருளினை (பொருள்கருதி) வினவிய "இடரினுந் தளரினு" மென்னும் முதலையுடைய திருப்பதிகத்தை எடுத்தருளினார்—எ-று. ()

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை-நாலடிமேல்வைப்பு - பண்-காந்தாரபஞ்சமம்.

---

இடரினுந் தளரினுமெனதுறுநோய் தொடரினுமுனகழ றொழுதெழுவேன், கடல்தனிலமுதொடு கலந்தநஞ்சை மிடற்றினி லடக்கியவேதியனே, யிதுவோவெமையாளுமா றீவ தொன்றெமக்கில் லையேல், அதுவோவுனதின்னரு ளாவடுதுறையரனே. (க)

வாழினுஞ்சாவினுமவருந்தினும்போய வீழினுமுனகழல்விடுவே னல்லேன், றாழிளநதடமபுனறயஙகுசெனனி போழிளமதிவைதத புண்ணியனே, யிதுவோவெமையாளுமாறீவ தொனறெமககிலலையே, லதுவோவுனதின்னரு ளாவடுதுறையானே. (உ)

நனவிலுஙகனவிலுநமபாவுனனை மனதிலுமவழிபடன மறவேனமமான, புனலவிரிநறுஙகொனறைப போதணிநத கனலெரியனலபுலகுகையவனே, யிதுவோவெமையாளுமாறீவ தொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே (ஙு)

துமமலோடருநதுயரதோனறிடினு மமமலரடியலா லரறறுதென்னுக, கைமலகுவரிசிலைககணைபொனறினை முமமதிலெரியெழுமுனிநதவனே, யிதுவோவெமையாளுமாறீவதொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே. (ச)

கையதுவீழினுஙகழிவுறினுஞ செயகழலடியலாற சிநதைசெயயேன், கொயயணிநறுமலர குலாயசெனனிமையணி மிடறுடைமறையவனே, யிதுவோவெமையாளுமாறீவதொனறெமககிலலையே, லதுவோவுனதின்னரு ளாவடுதுறையானே (ரு)

வெநதுயாதோனறியோாவெருவுறினுமெந்தாயுனனடியலாலேததாதெனனு, வைநதலையரவுகொணடொடசைநத சநதவெணபொடியணிசஙகரனே, யிதுவோவெமையாளுமாறீவ தொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே (சா)

வெபபொடுவிரவியோாவினைவரினு மபபாவுனனடியலாலரறறுதெனனு, வொபபுடையொருவனையுருவழிய வபபடியழலெழவிழிததவனே, யிதுவோவெமையாளுமாறீவதொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே (எ)

பேரிடாபெருகியோா பிணிவரினுஞ்சீருடை நகழலலாற சிநதைசெயயே, னேருடைமணிமுடியிராவணனையாரிடாபட வரையாாததவனே, யிதுவோவெமையாளுமாறீவதொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே. (அ)

உண்ணினுமபசிபபினுமுறஙகினுமின ளுணமலரடியலாலுரையாதெனனுக, கணணனுநகடிகமழதாமரைமே லணணலுமளபபரிதாயவனே, யிதுவோவெமையாளுமாறீவ தொனறெமககிலலையே, லதுவோவுனதினனரு ளாவடுதுறையானே. (கூ)

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும் மத்தவுன்னடியலாலரற்றுதெ-னறுப், புத்தருஞ்சமணரும் புறனுரைக்கப் பத்தர்கட்கருள்செய்துப-யின்றவனே, யிதுவோவெம்மையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல-துவோவுனதின்னருளாவடுதுறையானே. (௰)

அலைபுனலாவடுதுறையமர்ந்த விலைநுனை வேற்படையெம்மிறை-யை, நலமிகுஞானசம்பந்தன் சொன்ன விலையுடையருந்தமிழ்மாலைவல்-லார், வினையாயின நீங்கிப்போய் விண்ணவர்வியனுலகம், நிலையாகமுன்-னேறுவர் நிலமிசைநிலையிலரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - மாசிலாமணியீசர்.

தேவியார் - ஒப்பிலாமுலையம்மை

எடுத்தவண் டமிழ்ப் பதிகநா லடியின்மே லிருசீர்
தொடுத்தவைப் பொடு தொடர்ந்தவின் னிசையினுந் துதிப்பார்,
மடுத்தகா தலின் வளரொளி யாரடி யிணைவழுத்தி
யடுத்தசிந்தையா லாதரித் தருட்செவி யளித்தார்

(இ-ள்) எடுத்தவண்டமிழ்ப்பதிகம் = அவர் எடுத்தருளிய வண்மையையுடைய தமிழ்ப்பதிகத்தை, நாலடியின்மேலிருசீர் தொடுத்தவைப்பொடு = நாலடியின்மேல் இருசீர் தொடுத்த ஈரடி வைப்போடு, தொடர்ந்தவின்னிசையின் துதிப்பார் = தொடர்ந்துபட்ட இனிய இசையுடன் பாடியருளும் பிள்ளையார், மடுத்தகாதலின் வளரொளியாரடியிணை வழுத்தி = தமதுள்ளத்து நிறைந்த விருப்பத்தால் மாசிலாமணியீசரது இரண்டு திருவடிகளையும் துதித்து, அடுத்த சிந்தையாலாதரித்தருட்செவியளித்தார் = அவரிடத்து நீங்காது தொடர்ந்த மனக்கருத்தால் விரும்பிச் செவிதந்து வணங்கினார்—எ-று (௪௨௫)

நச்சியின்றமிழ் பாடிய ஞானசம்பந்த
ரிச்சையே புரிந்தருளிய விறைவரி னருளா
லச்சிறப்பருள் பூதமுன் விரைந்தகன் பீடத்
துச்சிவைத்தது பசும்பொ னாயிரக்கிழி யொன்று.

(இ-ள்) நச்சியின்றமிழ்பாடியஞானசம்பந்தர் = தந்தையாருக்குப் பொருளீதல்விரும்பி இனியதிருப்பதிகம்பாடிய ஆளுடையபிள்ளையாரது, இச்சையேபுரிந்தருளிய விறைவரினருளால் = மனக்கருத்தின்படியே கொடுத்தருளிய மாசிலாமணியீசரது இனிய திருவருளினால், அச்சிறப்பருள்பூதம் = அவர்விரும்பிய அப்பொருட்பேற்றை அருளும்படி ஓர்சிவபூதமானது ; முன்

விரைந்து பசும்பொன்னாயிரக்கிழியொன்று அகன்பீடத்துச்சிவைத்தது=பிள்ளையார் முன்னேவிரைந்துவந்து பசிய ஆயிரம் பொன்முடிந்த முடிப்பொன்றை இடமகன்ற பலிபீடத்துச்சியின்மேல் வைத்தது—எ-று. (சஉசு)

வைத்தபூதமங் கணைந்துமுன் னின்றுநல் வாக்கா
லுய்த்தவிக்கிழி பொன்னுல வாக்கிழி யுமக்கு
நித்தனாருள் செய்ததென் றுரைக்கநேர் தொழுதே
யத்தனார்திரு வருணினைந் தவனிமேற் பணிந்தார்

(இ-ள்.) வைத்தபூதமங்கணைந்து முன்னின்று நல்வாக்கால்=பலிபீடத்தின்மேல் பொன்முடிப்பை வைத்தபூதமானது பிள்ளையார் திருமுன்னே கிட்டிநின்று இனிய சொல்லினால், உய்த்தவிக்கிழி பொன்னுலவாக்கிழி=நான் வைத்த இம்முடிப்பு பொன்னையெடுக்குந்தோறும் குறையாத உலவாக்கிழியாம்; உமக்கு நித்தனாருள்செய்ததென்றுரைக்க=உமக்கு மாசிலாமணியீசர் அருளிச்செய்ததென்று கூற, நேர்தொழுது அத்தனார் திருவருணினைந்து அவனிமேற்பணிந்தார்=பூதத்தின்நேரில் கைகூப்பிவணங்கி அச்சிவபெருமானது திருவருளை நினைந்து நிலத்தின்மேல் திருமேனிதோயவணங்கினார்—எ-று. ()

பணிந்தெழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப்பீடந்
தணைந்தவாடகக் கிழிதலைக் கொண்டரு மறைக
ளணிந்தவான் பொருட்டரும்பொரு டூயவாய் மையினுற்
றணிந்தசிந்தைய தந்தையார்க் களித்தருள் செய்வார்.

(இ-ள்.) பணிந்தெழுந்து கைதொழுது=பூமியில் அட்டாங்கவிதிப்படி வணங்கி எழுந்து கைகூப்பி அஞ்சலிசெய்து, முன்பனிமலர்ப்பீடத் தணைந்த வாடகக் கிழிதலைக்கொண்டு=தம் திருமுன்புகுளிர்ந்த தாமரைமலர்போலும் பத்திரபீடத்தின்கண் இருக்கின்றபொற்கிழியைச் சிரமேற்சூடிக்கொண்டு, அருமறைகளணிந்த வான்பொருள்தரும்பொருள்=அரியவேதங்களால் நிச்சயிக்கப்பட்ட பெரிய மெய்ப்பொருளாகிய மாசிலாமணியீசர் அருளிய ஆயிரம் பொன்னையும், தூயவாய்மையினுற் றணிந்தசிந்தை யத்தந்தையார்க்களித்தருள்செய்வார்=பரிசுத்தமான மெய்யுணர்ச்சியால் சாந்தமடைந்த உள்ளத்தையுடைய தமது தந்தையாராகிய சிவபாத இருதயருக்குக்கொடுத்து அவர்க்குத் திருவாய்மலர்ந்தருளுவாராயினார்—எ-று. (சஉஅ)

ஆதிமாமறை விதியினா லாறுசூழ் வேணி
நாதனைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீதுநீங்கச் செய்யவுந் திருக்கழுமலத்து
வேதவேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்.

(இ-ள்.) ஆதிமாமறை விதியினால்=முதன்மையான பெரியவேதங்கள் விதித்தமுறைமையினால், ஆறுசூழ் வேணிநாதனை முன்னாகவே புரியுநல் வேள்வி=கங்காநதிபாய்கின்ற சடையையுடைய சிவபெருமானை முதல்வ



திருவாவடுதுறை

ஞானசம்பந்தர் பொற்பீடத்தில்வைத்தஉலவாக்கிழியைச்சிரமேற்றுக்
ஆநந்தித்துத்தந்தைகையிலளித்தது.

ராக்கொண்டு செய்கின்றநல்லயாகத்தை ; தீதுநீங்க நீர்செய்யவும்=குற்றமற நீர்செய்யவும், திருக்கழுமலத்துவேதவேதியர்யாவருஞ் செய்யவும்மிகும்=சீகாழியின்கண் உள்ள வேதங்களையுணர்ந்த மறையவரெல்லோரும் செய்யவும் (இப்பொருள் நாடோறும் குறைவின்றி) மிகவிருக்கும்—எ-று.

யாகவுருவர் திருமாலும் யாகமுதல்வர் சிவபெருமானும் ஆகலின் நாதனை முன்னாகவேபுரியும் வேள்வி என்றும், யாகத்திற்குரிய நெய்முதலிய ஓமப்பொருள்களின் குறைவும் அந்தணர் மறையவருண்டிமுதலிய பொருளாலாய குறைவும் நீங்க என்பார் தீதுநீங்க என்றுங்கூறினார். (௬௨௯)

என்றுகூறியங் கவர்தமமை விடுத்தபின்னவரு
நன்றுமின்புறு மனத்தொடும் புகலியே னண்ண
வென்றிஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றலாவடு துறையினின் மகிழ்ந்தினி திருந்தார்

(இ-ள்) என்றுகூறியங்கவர்தமமைவிடுத்தபின்=இவ்வாறு கூறியருளி அச்சிவபாதஇருதயரை ஊர்க்குச்செல்ல அநுமதிகொடுத்து விடுத்தபின்பு, அவருநன்றுமின்புறுமனத்தொடும் புகலியேனண்ண=அச்சிவபாதஇருதயரும் நன்மையும் இன்பமும் கூடிய மனத்துடன் சீகாழிக்கணசெல்ல, வென்றிஞானசம்பந்தரும் விருப்பொடுவணங்கி=வெற்றியையுடைய ஆளுடையபிள்ளையாரும் விருப்பத்தோடு மாசிலாமணி யீசரைவணங்கி, மன்றலாவடுதுறையினின் மகிழ்ந்தினிதிருந்தார்=மலர்மணங்கமழும் திருவாவடுதுறை என்னும் திருப்பதியில் மகிழ்ச்சியடைந்து இனிதாக எழுந்தருளியிருந்தார்—எ-று.

அண்ணலார்திரு வாவடு துறையமர்ந் தாரை
யுண்ணிலாவிய காதலி னுறப்பணிந் துறைந்து
மண்ணெலாமுய வந்தவர் போந்தவர் சடைமேற்
றெண்ணிலாவணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார்.

(இ-ள்) அண்ணலார் திருவாவடுதுறையமர்ந்தாரை=பெருமையிற் சிறந்தோராகிய திருவாவடுதுறையின்கண் எழுந்தருளிய மாசிலாமணி யீசரை, உண்ணிலாவிய காதலினுறப் பணிந்துறைந்து=தமதுள்ளத்தின்கண் ணிறைந்த விருப்பத்தினால் வணங்கி வாசஞ்செய்து, மண்ணெலாமுய்யவந்தவர்போந்து=நிலவுலகத்தாருய்ய அவதரித்த ஆளுடையபிள்ளையார் அங்குநின்றுமெழுந்தருளி, வார்சடைமேல் தெண்ணிலாவணிவார்திருக்கோழம்பஞ்சேர்ந்தார்=நீண்டசடையின்மேல் தெளிந்தகிரணத்தையுடைய சந்திரனைஅணிந்த இறைவரது திருக்கோழம்பமென்னுந்திருப்பதியையடைந்தருளினார்—எ-று. ()

கொன்றைவார்சடை முடியரைக் கோழம்பத் திறைஞ்சி
யென்றுநீடிய வின்னிசைப் பதிகமுன் னியம்பி
மன்றுளாரமகிழ் வைகன்மா டக்கோயின் மருங்கு
சென்றுசார்ந்தனர் திருவளர் சிரபுரச் செல்வர்.

(இ-ள்.) கொன்றைவார் சடைமுடியாரைக் கோழம்பத்திறைஞ்சி=கொன்றைப்பூமாலையையணிந்த நீண்ட சடாமகுடத்தையுடைய கோகிலேசரைத் திருக்கோழம்பத்தின்கண் வணங்கி, என்று நீடிய வின்னிசைப்பதிகமுனியம்பி=எக்காலமும் நிலைபெற்ற இனிய இசையையுடைய திருப்பதிகத்தைத் திருமுன்னின்றுபாடி, மன்றுளார்மகிழ்வைகன்மாடக்கோயின்மருங்குசென்று சார்ந்தனர்=பொன்னம்பலத்தின்கண் நடித்தருளியவர்களுந்தேசாமகிழ்ந்து வீற்றிருக்கின்ற திருவைகல் மாடக்கோயிலின் பக்கலிற் சென்றடைந்தருளினார், திருவளர் சிரபுரச்செல்வர்=செல்வமிக்க சீகாழியிலவதரித்த ஆளுடையபிள்ளையார்—எ-று. (௫௯௨)

திருக்கோழம்பம் - பண்- இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீற்றானை நீள்சடை மேனிறை வுள்ளதோ
ராற்றானை யழகமர் மென்முலை யாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய
வேற்றானை யேத்துமி னும்மிட ரேகவே.

தண்புன லோங்கு தண் ணந்தராய மாநகர்
நண்புடை ஞானசம் பந்தனம் பானுறை
விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-கோகிலேசர் தேவியார்-சௌந்தரநாயகியம்மை

---

வைகனீடுமா டக்கோயின் மன்னிய மருந்தைக்
கைகளஞ்சலி கொண்டுதாழ்ந் தெழுந்துகண் ணருவி
செய்யவின்னிசைச் செந்தமிழ் மாலைகண் மொழிந்து
நையுமுள்ளத்த ராயத்திரு நல்லத்தி னண்ணி.

(இ-ள்) வைகல் நீடுமாடக்கோயின் மன்னியமருந்தை=வைகலின்கணுள்ள மாடக்கோயிலில் எழுந்தருளிய மருந்துபோல்வாரை, கைகளஞ்சலிகொண்டு தாழ்ந்தெழுந்து=திருக்கரங்களை அஞ்சலியாகக் குவித்துவணங்கி எழுந்து, கண்ணருவிசெய்ய வின்னிசைச் செந்தமிழ் மாலைகண்மொழிந்து=கண்களினின்றும் ஆனந்த அருவி சொரியாநிற்க இனிய இசையோடு கூடிய செந்தமிழ்ப் பதிகமாலையைப்பாடியருளி, நையுமுள்ளத்தராய்த் திருநல்லத்தின் நண்ணி=கசிந்துருகும் திருவுள்ளமுடையராய்த் திருநல்லமென்னும் திருப்பதியை யடைந்தருளி—எ-று. (௫௯௩)

திருவைகலமாடக்கோயில-பண-காநதாரபஞ்சமம.

திருசசிறறமபலம.

துளமதி யுடைமறி தோனறு கையின
ரிளமதி யணிசடை யெநதை யாரிட
முளமதி யுடையவா வைக லோஙகிய
வளமதி தடவிய மாடக கோயிலே.

மைநதன திடமவைகன மாடக கோயிலைச
சநதமா பொழிலணி சணபைஞானசம
பநதன தமிழகெழு பாடல பததிவை
சிநதைசெய பவாசிவ லோகஞ சோவரே

திருசசிறறமபலம

சுவாமிபெயா - கொமபிளஙகோதைநாதா.
தேவியாா - கொமபிளஙகோதைநாயகியமமை.

---

நிலவுமாளிகைத திருநலல நீடுமா மணியை
யிலகுசேவடி யிறைஞசியின றமிழகொடு துதிததுப
பலவுமீசாதந திருபபதி பணிநதுசெல பவாதா
மலைபுனறறிரு வழுநதூாமா டககோயி லடைநதாா

(இ-ள) நிலவுமாளிகைத திருநலல நீடுமாமணியை=விளஙகுகின்ற மாளிகைகளையுடைய திருநலலமெனனும திருபபதியி லெழுநதருளியிருககினற மாணிககததையொதத உமாமகேசனை, இலகுசேவடி யிறைஞசியின றமிழ கொடுதுதிதது=விளஙகுகினற சிவநததிருவடிகளை வணஙகி இனிய தமிழப பதிகததாறறுதிதது, ஈசாதந்திருபபதிபலவும பணிநதுசெலபவா=சிவபிரான எழுநதருளிய திருபபதிகள பலவறறையும வணஙகிசசெலலும பிளளையாா, அலைபுனற றிருவழுநதூா மாடககோயிலடைநதாா=அலைகினற நீாசூழநத திருஅழுநதூரினகண உளளதிருமாடககோயிலை அடைநதருளினாா—எ-று ()

தாம=அசை.

திருநலலம - பண-குறிஞசி.

திருசசிறறமபலம.

கலலா னிழனமேய கறைசோ கண்டாவெண
றெலலா மொழியாலு மிமையோா தொழுதேதத
விலலான் மூன்றும வெநது விழவெயத
நலலா னமையாளவா னல்லந் நகரானே.

நலமார் தருமறையோர் வாழ்நல்லூர் நகர்மேய
கொலைசேர் மழுவாளைக்* கொச்சையமர்ந் தோர்நகரு
நலமார் தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-உமாமகேசர். தேவியார்-மங்களநாயகியம்மை.

---

மன்னுமாமட மகிழ்ந்தவான் பொருளினை வணங்கிப்
பன்னுபாடலிற் பதிகமின் னிசைகொடு பரவிப்
பொன்னிமாநதிக் கரையினின் மீண்டுபோந் தணைந்து
சொன்னவாறறி வார்தமைத் துருத்தியிற் றொழுதார்

(இ-ள்) மன்னுமாமடமகிழ்ந்தவான் பொருளினைவணங்கி=நிலைபெற்ற மாடக்கோயிலின்கண் எழுந்தருளிய மெய்ப்பொருளாகிய வேதபுரீசரைப் பணிந்து, பன்னுபாடலிற் பதிகமின்னிசைக் கொடுபரவி=துதிக்கத்தக்க பாடலினாலாகிய திருப்பதிகத்தை இனிய இசையொடு துதித்து, பொன்னிமாநதிக்கரையினின் மீண்டுபோந்தணைந்து=பெரிய காவேரிநதியின் கரையில் மீளவும் வந்தடைந்தருளி, சொன்னவாறறிவார் தமைத் துருத்தியிற்றொழுதார்= சொன்னவாறு அறியும் மூர்த்தாவதேசரைத் திருத்துருத்தியில் வணங்கியருளினார்—என்க.

முற்செய்யுளில் மாடக்கோயிலடைந்து [illegible] மாமாடம் என்றது மாமடம் என மருவிற்றெனக் கொள்க. சொன்னவாறறிவார் என்பது அடியார் கூறியவற்றை அறிவாரென்று பொருள். (சசுரு)

திருஅழுந்தூர் - பண்-இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தொழுமாறு வல்லார் துயர்தீர நினைந்
தெழுமாறு வல்லா ரிசைபாட விம்மி
யழுமாறு வல்லா ரழுந்தை மறையோர்
வழிபாடு செய்மா மடமன் னினையே

அருஞானம் வல்லா ரழுந்தைம் மறையோர்
பெருஞான முடைப் பெருமா னவனைத்
திருஞான சம்பந்தன் செந்தமிழ்கள்
ஒருஞான முண்டா முணர்ந்தார் தமக்கே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வேதபுரீசர். தேவியார்-சௌந்தரநாயகியம்மை.

திரைத்தடம்புனற பொன்னிசூழ திருததுருத தியினில்
வரைததலைப்பசும் பொனனெனும வண்டமிழப் பதிக
முரைதது மெயயுறப பணிநதுபோந துலவுமந நதியின
கரைக்கண்மூவலூராக கணணுத லாரகழல பணிநதார

(இ-ள்.) திரைத்தடம்புனறபொன்னிசூழ திருததுருததியினில்=அலை யையுடைய மிக்க நீரமயமாகிய காவிரிசூழநத திருததுருத்தியெனனும திரு பபதியில, வரைததலைபபசுமபொனனெனும வணடமிழப பதிகமுரைதது= வரைததலைபபசுமபொனனெனனும முதலையுடைய வளமபொருநதிய தமிழா ஞப திருபபதிகததைபபாடியருளி, மெயயுறபபணிநதுபோநது=திருமேனி பூமியிறபொருநத வணஙகி அஙகுநினறெழுநதருளி, உலவுமநநதியினகரை க்கண மூவலூராக கணணுதலார கழல பணிநதார=பெருகுகினற அககாவிரியி னகரையிலுளள மூவலூரில எழுநதருளிய நெறறிசகணணையுடைய வழிதது ணைாதரது திருவடிகளை வணஙகியருளினார—எ-று. (சஙசு)

திருநதுருததி-திருவிராகம-பண-நடடராகம

திருசசிறறமபலம

வரைததலைப் பசுமபொனோ டருஙகலஙக ளுநதிவந
திரைததலைச சுமநதுகொண டெறிநதிலஙகு காவிரிக
கரைததலைத துருததிபுக கிருபபதே கருததினு
யுரைததலைப பொலிநதுனக குணாததுமாறு வலலமே.
கறறுமுறறி ஞாதொழுங கழுமலந தருநதமிழ
சுறறுமுறறு மாயினை வனபகாநத சொறகளாற
பெறறமொன றுயாநதவன பெருநதுருததி பேணவே
குறறமுறறு மிமமையிற குணஙகளவநது கூடுமே

திருசசிறறமபலம

சுவாமிபெயா-முததாவநேசா தேவியாா-அமிாதமுகிழாமபிகை.

மூவலூருறை முதலவரைப பரவிய மொழியான்
மேவுகாதலி லேததியே விருபபொடும போநது
பூவலமபுதண் புனறபணைப புகலியா தலைவா
வாவிசூழதிரு மயிலாடு துறையினில வநதார.

(இ-ள்.) மூவலூருறை முதலவரைபபரவிய மொழியால=திருமூவலூ ரிலெழுநதருளிய வழிததுணைாதரைாததுதிககின்றதிருபபதிகததினுல்; மேவு காதலினேததி=திருவுளளத்திணிறைநத விருபபத்தோடுதுதிததருளி, விருப பொடும்போநது=அஙகு நினறு விருப்பத்தோடும் எழுநதருளி ; பூவலம்பு

தணப்புணர்ப்பணைப் புகலியார்தலைவர்=பூக்களோடு ததும்புகின்ற குளிர்ந்த நீர்களையுடைய வயல்சூழ்ந்த சீகாழியின்கண்ணுள்ளார் தலைவராகியஆளுடைய பிள்ளையார், வாவிசூழ்திருமயிலாடுதுறையினில்வந்தார்=புனற்றடஞ்சூழ்ந்த திருமயிலாடுதுறையென்னுந்திருப்பதியில் எழுந்தருளிவந்தார்—எ-று. (௬௩௭)

மலர்த்தடஞ்சோலை மயிலாடு துறையினின் மருவுஞ்
செல்வவேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லைமானமறிக் கையரைக் கோயில்புக் கிறைஞ்சி
யெல்லையில்லதோ ரின்பமுன் பெருகிட வெழுந்தார்

(இ-ள்.) மலர்த்தடஞ்சோலை மயிலாடுதுறையினின் மருவும் = நெருங்கிய சோலைசூழ்ந்ததிருமயிலாடுதுறையில்வாழும், செல்வவேதியர் தொண்டரோ டெதிர்கொளச்சென்று=செல்வத்தையுடைய மறையவர் அடியார் திருக்கூட்டத்தோடு எதிர்கொண்டுவர அங்கடைந்தருளி, கொல்லைமானமறிக்கையரைக் கோயில் புக்கிறைஞ்சி=தினைக்கொல்லையில் வாழும் மானகன்றையேந்திய திருக்கரத்தையுடைய மாயூரநாதரைக் கோயிலினகண்சென்றுவணங்கி, எல்லையில்லதோ ரின்பமுன்பெருகிடவெழுந்தார்=அளவில்லாதபேரின்பம் முற்பட்டதிகரிக்க எழுந்தார்—எ-று.

வணங்கி யெழுந்தாரெனக்கூட்டுக. (௬௩௮)

உள்ளமின்புற வுணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந்தாங்கிய சடையரை விளங்குசொற் பதிகத்
தெள்ளுமின்னிசைத் திளைப்பொடும் புறத்தணைந் தருளி
வள்ளலாருமற் றுள்பதி மருவுதல் மகிழ்ந்தார்

(இ-ள்.) உள்ளமின்புறவுணர் வுறும்பரிவு கொண்டுருகி=தமது திருவுள்ளத்தில் இன்பம் மேம்பட்மாயூரநாதரைச்சிந்திக்கும் பேரன்பாலகனிந்து, வெள்ளந் தாங்கியசடையரை=கங்கா நதியையணிந்த சடையையுடைய அம்மாயூரநாதரை, விளங்குசொற்பதிகத்தெள்ளு மினனிசைத்திளைப்பொடும் புறத்தணைந்தருளி=விளங்குகின்ற சொல்லானாய திருப்பதிகத்துத் தெளிந்த இனிய இசையைப்பாடுதலோடும் ஆலயத்தின் புறத்து வந்தருளி, வள்ளலாருமற்றுள பதிமருவுதல் மகிழ்ந்தார்=ஆளுடைய பிள்ளையாரும் (அதன் பக்கத்துள்ள) பிறதிருப்பதிகளையும் அடைதலைவிரும்பியருளினார்—எ-று. (௬௩௯)

திருமயிலாடுதுறை-பண்-தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

கரவின்றிநன் மாமலர்கொண்
டிரவும்பக லுந்தொழுவார்கள்
சிரமொன்றிய செஞ்சடையான்வாழ்
வரமாமயி லாடுதுறையே.

நயர்காழியுண் ஞானசம்பந்தன்
மயறீர்மயி லாடுதுறைமேற்
செயலாலுரை செய்தனபத்து
முயர்வாமிவை யுற்றுணர்வார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாயூரேசர். தேவியார்-அஞ்சலநாயகியம்மை.

---

அத்திருப்பதி யகன்றுபோ யணிகிளர் சூலக்
கைத்தலைப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்தகாதலில் விளங்கா விடையவர் பாதம்
பத்தர்தம்முடன் பணிந்திசைப் பதிகமுன் பகர்ந்தார்.

(இ-ள்) அத்திருப்பதி யகன்றுபோய=அத்திருப்பதிகளை நீங்கிச்சென்றருளி, அணிகிளர் சூலக்கைத்தலைப் படைவீரர்செம்பொன் பள்ளிகருதி=அழகுவிளங்குஞ் சூலமாகியகையிலேந்திய ஆயுதத்தையுடைய சொர்ணபுரீசரது திருச்செம்பொன் பள்ளியைக் கருதிச் சென்றருளி, மெய்த்தகாதலில் விளங்கா விடையவர்பாதம்=மெய்ம்மைத்தன்மையுடைய பெருவிருப்பால் திருவிளநகரிலெழுந்தருளிய இடபவாகனத்தையுடைய பதஞ்சலிமனோகரரது திருவடிகளை, பத்தர்தம் முடன்பணிந்திசைப் பதிகமுன்பகர்ந்தார்=அடியார் திருக்கூட்டத்தோடு வணங்கி யிசையையுடைய திருப்பதிகத்தைத் திருமுன்னின்று பாடியருளினார்—எ-று. (கூசய)

---

திருச்செம்பொன்பள்ளி-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேல் மன்னும் பாவமே.

நறவார் புகலி ஞான சம்பந்தன்
செறுவார் செம்பொன் பள்ளிமே யானைப்
பெறுமா றிசையாற் பாடலிவை பத்து
முறுமா றுசொல்ல வோங்கி வாழ்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சொர்ணபுரீசர். தேவியார்-சுகந்தவனநாயகியம்மை.

திருவிளமர்-திருவிராகம்-பண-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மத்தக மணிபெற மலர்வதோர் மதிபுரை நுதலகர
மொத்தக நகமணி மிளிர்வதோ ரரவின ரொளிகிள
ரத்தக வடிதொழ வருள்பெறு கணமொடு முமையவள
வித்தக ருறைவது விரிபொழில வளநகர் விளமரே.

வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தனைச
சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை கெழுவிய
வந்தணர் புகலியு ளழகம ரருமறை ஞானசம
பந்தன மொழியிவை யுரைசெயு மவர்வினை பறையுமே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - பதஞ்சலிமனோகரர்
தேவியார் - யாழினுமென்மொழியம்மை.

---

பாடும்பப்தி பணிந்துபோயப் பறியலூர் மேவுந்
தோடிலாமல ரிதழியுந் தும்பையு மட்டமபுந்
காடுகொண்டசெஞ் சடைமுடிக் கடவுளார் கருந்து
நீடுவீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர்

(இ-ள்) பாடும்பப்தி பணிந்துபோய=தாமபாடுகின்ற அத்திருவிளநக ரென்னும் திருப்பதியை வணங்கிச் சென்று, பறியலூர்மேவும்=திருப்பறிய லூரின் கண்ணுள்ள, தோடிலா மலரிதழியுந் தும்பையும் அட்டமபும்=இதழபொ ருந்திய மலராத கொன்றைப்பூவும் தும்பைப்பூவும் அட்டமபம்பூவும், காடு கொண்ட செஞ்சடை முடிக்கடவுளார் கருதும்=நிறைந்திருக்கின்ற சிவந்த ச டைமுடியையுடைய வீரட்டேசர் விரும்பி எழுந்தருளிய, நீடுவீரட்டம் நி றைமறைவேந்தர் பணிந்தனர்=நிறைந்த மறைஞானத்தையுடைய ஆளுடைய பிள்ளையார் பெருமைபொருந்திய திருவீரட்டத்தைவணங்கியருளினார்—எ-று.

---

திருப்பறியலூர்-பண மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கருத்தன கடவுள் கனலேந்தி யாடு
நிருத்தன சடைமே னிரம்பா மதியன
திருத்தம முடையார் திருப்பறிய லூரில
விருத்த னெனனத் தகுமவீரட் டத்தானே.

நறுநீரு குங்காழி ஞானசம பநதன்
வெறிநீாத திருபபறியல வீரடடத தானைப்
பொறிநீ டரவண•புனைபாடல வலலாாக்
கறுநீ டவலம பிறபபுத தானே

திருசசிறறமபலம.

சுவாமிபெயா-வீரடடேசா தேவியாா- இளஙகொமபமமை.

---

பரமாதநதிருப பறியலூா வீரடடம பரவி
விரவுகாதலின வேலையின களையினை மேவி
யரவணிநதவா பதிபல வணைநதுமுன வணஙகிச
சிரபுரதநதவா திருநதொணட ரெதிாகொளச செலவாா.

(இ-ள்) பரமாதநதிருபபறியலூா வீரடடம பரவி=வீரடடேசரெழுநத ருளிய திருபபறியலூா வீரடடான மெனவரு திருபபதியை வணஙகி, விரவு காதலின வேலையினகளையினைமேவி=நிறைநத விருபபததோடு கிழசசமுத திரககரையை யடைநது, அரவணிநதவா பதிபல வணைநது முனவணஙகி= அஙகுளள சறபாபரணததை யணிநதசிவபெருமான எழுநதருளிய பலதிருப பதிகளையுஞ சென்றுவணஙகி, சிரபுரததவா திருததொணட ரெதிாகொளச செலவாா=ஆளுடைய பிளளையாா அடியாாகள தமமை எதிாகொளளுமபடி செலவாராயினா—எ-று (௪௪௨)

வேறு

அடியவாகளகளிசிறபபத திருவேடடக குடிபணிநதஙகலைவாய பபோகிக, கடிகமழு மலாபபழனக கழனிநாட டகனபதிகள கலநது நீஙகிக, கொடிமதிலசூழ தருமபுரங குறுகினா குணடாசாக கியாதஙக கொளகை, படியறியப பழுதெனறே மொழிநதுயயு நெறிகாட டும பவளவாயா

(இ-ள்.) குணடாசாககியாதஙக கொளகைபடியறியபபழுதென்றே மொ ழிநதுயயுநெறி காடடும பவளவாயா=அருகருமபௌததருமாகிய இவாக ளது கொளகையுலகிலுளள யாவரும அறியககுறறமெனறுகூறி உயயும் நெ றியாகியவைதிகசைவ நெறிகளையே மெயநநெறியெனறுணாததி யருளிய ப வளம போலும திருவாயையுடைய ஆளுடைய பிளளையாா, அடியவாகள க ளிசிறபபத திருவேடடக குடிபணிநதஙகலைவாயபோகி=திருவேட்டககுடியி ன்கண் எதிாகொணடுவநத அவவடியவர்களமனமகிழசசியடையத திருவேட டக்குடியென்னுந திருபபதியை வணஙகி அஙகுநினறு கடறகரைவழியேசெ ன்று; கடிகமழுமலாபபழனககழனி நாடடகனபதிகள கலநதுநீஙகி=வாச னைகமழும் மலாகளையுடைய வயலசூழநத சோழநாடடில், இடமகன்றதிருப

பதிகங்களையடைந்து அதனினின்றும் நீங்கி ; கொடிமதில்சூழ்தருமபுரஞ்சூழ்கின்றார்=கொடிகள் கட்டியமதில் சூழ்ந்த திருத்தருமபுரமென்னுந் திருப்பதியை அடைந்தருளினார்—எ-று. (௪௪௫)

## திருவேட்டக்குடி - பண் பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வண்டிரைக்கு மலர்க்கொன்றை விரிசடைமேல் வரியரவங், கண்டிரைக்கும் பிறைச்சென்னிக் காவாலி கழல்கழங்க, டொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத் துளங்கொளிநீர்ச் சுடராப்பவளந், தெண்டிரைகள் கொணர்ந்தெறியுந் திருவேட்டக் குடியாரே

தெண்டிரைசேர் வயலுடுத்த திருவேட்டக் குடியானைத், தண்டலைசூழ் கலிக்காழித் தமிழ்ஞான சம்பந்தன், ஒண்டமிழ்நூ லிவைபத்து முணர்ந்தேத்த வல்லார்போய், உண்டுபோ யிலவானவரோ டுயர்வானத் திருப்பாரே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-திருமேனியழகர் தேவியார்-சுகந்தநாயகியம்மை

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமா மதனாற்சார், வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கி வாழ்த்தக்கண்டு, பெருமையுடைப் பெரும்பாணர் வாக்குரைப்பார் பிள்ளையாரருளிச்செய்த, வருமையுடைப் பதிகந்தாம் யாழின்றைப் பயிற்றும்பேறருளிச்செய்தார்

(இ-ள்.) தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமாம்=தருமபுரமென்னுந்திருப்பதி திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருத்தாயாருக்கு ஜனனபூமியாம், அதனால் சாரவருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கிவாழ்த்தக்கண்டு=அக்காரணத்தால் பிள்ளையாரைச் சார்ந்துவருகின்ற அத்திருநீலகண்ட யாழ்ப்பாணரது தாய்வழிச்சுற்றத்தார் ஆங்குவந்து பிள்ளையாரை எதிர்கொண்டு திருவடிகளில்வணங்கிப் பெரும்பாணரையுந்துதிக்க, பிள்ளையார் தாம் அருளிச்செய்த அருமையுடைப்பதிகம் யாழின்றைப்பயிற்றும்பேறருளிச்செய்தார்=ஆளுடையபிள்ளையார் தாம் அருளிச்செய்த அருமை பொருந்திய திருப்பதிகத்தை யாழிலேற்றிய பாடும் பேற்றினை அடியேனுக்கு அருளிச்செய்தாரென்று, பெருமையுடைய பெரும்பாணர்வாக்குரைப்பார்=பெருமையையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாணர் அச்சுற்றத்தாருக்குக் கூறுவாராயினர்—எ-று

பிள்ளையார் பெரும்பேற்றை அருளிச்செய்தாரென்று பெரும்பாணர் உரைப்பாராயினரென்கூட்டுக. (௪௪௬)

இளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்தி னிளாந்த
வோசை, யளவுபெறக் கருவியினி ரமைத்தியற்று மதனாலே யகிலமெல்
லாம், வளரவிசை நிகழுவதென விளம்புதலும் வளம்புகலி மன்னா
பாத, முளநடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாண ருணாத்
துகின்றார்.

(இ-ள்) இளைஞருமற்றது கேட்டு=சுற்றத்தாரும் அதனைக்கேட்டு; கெழுவுதிருப்பதிகத்திற் கிளாந்த வோசை=பெருமைபொருந்திய திருப்பதிகத்தில் விளங்கிய இனிய ஓசையை, அளவுபெறக்கருவியி னீரமைத்தியற்றுமதனாலே=எடுத்தல் முதலிய காலஅளவுகள் பொருந்தயாழில் நீஅமைத்துப்பாடுங் காரணத்தால், அகிலமெல்லாம் இசைவளர நிகழுவதென விளம்புதலும்=எல்லாவுலகங்களிலும் புகழ்மிக ஓங்குமென்று புகழ்ந்து கூறவும், வளம்புகலிமன்னா பாதம்=வளம்பொருந்திய சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையாரது திருவடிகளை, உளநடுங்கிப் பணிந்து திருநீலகண்டப் பெரும்பாணருணாத்துகின்றார்=மனநடுக்குற்று வணங்கித் திருநீலகண்டப் பெரும்பாணா அவருக்கு விண்ணப்பஞ் செய்கின்றார்—எ-று

மற்று - அசைநிலை. (௪௫௫)

அலகில்திருப் பதிகவிசை யளவுபடா வகையிவாக ளன்றியேயு,
முலகிலுளோ ருந்தெரிந்தங் குணமையினை யறிந்துய்ய வுணாந்தும் ப
ண்பாற், பலர்புகழுந் திருப்பதிகம் பாடியருள் பெற்றாற் பண்புநீடி,
யிலகுமிசை யாழினகண் டடங்காமை யான்காட்டப் பெறுவனென்றார்.

(இ-ள்) அலகில் திருப்பதிக இசைஅளவுபடாவகை=அளவிடப்படாத திருப்பதிகத்தின் இசையானது யாழில் அடங்காத வண்ணத்தை, இவர்களன்றியேயு முலகிலுளோருந் தெரிந்து அங்குணமையினை யறிந்துய்ய=இச்சுற்றத்தாரே யன்றி உலகத்தாரும் அறிந்து அதனகத்துள்ள உண்மையைக்கண்டு உய்யும்பொருட்டு, உணர்ந்தும் பண்பால்=தெரிவிக்கு நிமித்தம், பலர்புகழுந் திருப்பதிகம் பாடியருள் பெற்றால்=பலராலும் புகழத்தக்க ஓர்திருப்பதிகத்தைப்பாடியருள் அடியேன் பெற்றுக்கொண்டால், பண்புநீடியிலகுமிசையாழினகண் அடங்காமையான் காட்டப்பெறுவனென்றார்=குணமிக்குவிளங்கும் இனிய இசையானது யாழினகண் அடங்காமையை யான் அவர்களுக்குக் காட்டப்பெறுவேன் என்றுகூறினார்—எ-று (௪௫௬)

வேதநெறி வளர்ப்பவரும் விடையவாமுன் றொழுதுதிருப் பதி
கத்துண்மை, பூதலத்தோர் கண்டதுங் கலத்தினிலு நிலத்துநூல
புகன்றவேத, நாதவிசை முயற்சிகளா லடங்காத வகைகாட்ட நாட
டுகின்றார், மாதர்மடப் பிடிபாடி வணங்கினா வான்வரும் வணங்கி
யேத்த.

(இ-ள்.) வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன்தொழுது=வைதிக மார்க்கத்தை வளர்க்கும் ஆளுடையபிள்ளையாரும் இடபத்தை வாகனமாக வுடைய அச்சிவபிரானது திருமுன்னே நின்றுவணங்கி, திருப்பதிகத்தின் மை=திருப்பதிகத்தினகணுள்ள இசையின்தன்மை, பூதலத்தோர்கண்டத் துங் கலத்தினிலும்=இவ்வுலகத்தாரது மிடற்றிலும் யாழிலும், நிலத்த வே தநூல் புகன்ற நாதவிசைமுயற்சிகளால் அடங்காத வகைகாட்ட நாட்டுகின் றார்=இவ்வுலகத்தின்கண் காந்தருவ வேதநூலிற்கூறிய நாதத்துக்குரிய இ சையை வேறுபடுத்தும் யத்தனங்களினால் அடங்காத வண்ணத்தைக் காட்டு மபடிச் செய்கின்றாராய், வானவரும் வணங்கியேத்த மாதர்மடப் பிடிபாடி வணங்கினார்=தேவர்களும் வணங்கித் துதிக்கும்படி மாதர்மடப்பிடி என்றுமு தலையுடைய திருப்பதிகத்தைப்பாடிப் பணிந்தருளினார்—எ-று

வேதநெறிவளர்ப்பவர், நாட்டுகின்றாராய்ப் பாடிவணங்கினார் எனக்கூ ட்டுக. (சுசுஎ)

இதுகாறும் பாடாவியலபு கண்டுமகிழ்ந்தென்பார் வானவரும் வணங்கி யேத்தவென்றார் வானவருமென்றவும்மை மண்ணுலகத்தாரையுந் தழுவிநின் எதிரதுதழீஇ நின்றது

திருத்தருமபுரம் - பண்-யாழ்மூரி

திருச்சிற்றம்பலம்

மாதர்மடப்பிடியு மட வன்னமுமன்னதோர் நடையுடைமலை மகடுணையெனமகிழ்வர், பூதவினப்படைநின் றிசை பாடவுமாடுவ ரவர்படர்சடைநெடு முடியதோர்புனலர், வேதமொடே ழிசைபா டுவ ராழ்கடல்வெண்டிரை யிரைந்நுரைகரைபொருது விம்மிநின்றயலே, தாதவிழ்புன்னைதயங்கு மலர்ச்சிறைவண்டறை பெழில்பொழில்கு யில்பயில் தருமபுரம்பதியே. (க)

பொங்குநடைப்புகலில் விடை யாமவரூர்திவெண் பொடியணி தடங்கொண்மார்பு பூணநூலபுரள, மங்குலிடைத்தவழு மதி சூடுவ ராடுவர் வளங்கிளர்புனலரவம் வைகியசடையர், சங்குகடற்றிரையா லுதையுண்டுசரிந்திரிந் தொசிந்தசைந்திசைந்துசேரும் வெண்மண றகுவைமேற், றங்குகதிர்மமணிநித் தில மெல்லிருளொலகநின் றில குகொளிக் கலங்கெழிற் றருமபுரம்பதியே (உ)

விண்ணுறுமால்வரைபோல விடை யேறுவர்ாறுசூ டுவர்விரிசுரி யொளிகொள தோடுநின்றிலங்கக, கண்ணுறநின்றொளிருங் கதிர் வெ ண்மதிக்கண்ணியர் கழிந்தவரழிந்திடு முடை நலைகலனாப், பெண்ணு

வார்மலிமென்முலைமா தொரு பாகமதாகுவா வளங்கிளாமதிய வம வைகியசடையா, கூாமலிசூலமுமவெண் மழு வுமமவாவெலட டை குனிசிலைதனிமலைய கேநதியகுழகா, ஆாமலி யாழிகொளசெல வனு மல விகொடாமனாம மிசையவனடிமமுடி யளவுதாமறியாா, தா ர்மலி கொனறையலங கலு கநதவாநங்கிடந தடஙகடலலிடுநதுறைத தருமபுரமபதியே. (சு

புததாகடநதுவாமொயத துறி புலகியகையாபொய மொழிநத ழிவிலபெறறியுறற நறறவாபுலவோா, பகநாகளதழவமெயப பய ஞ கவுகநதவா நிகழநதவாசவநதவா சடலைபபொடியணிவா, முநதன வெணணகையொண மலை மாதுமைபொனனணி புணாமுலையிணைது ணை யணைவதுமபிரியாா, தகதருவிததிரளுந திய மாலகடலோதமவந தடாநதிடுநதடமபொழிற றருமபுரமபதியே (க0)

பொன்னெடுநனமணிமா ளிகை சூழவிழவமமலி பொருபுனல திருவமா புகலியெனறுலகிற, றனனெடுநோபிறவில பதி ஞானசம பநதனஃ துசெநதமிழநதடஙகடற றருமபுரமபதியைப, பினனெடு வாாசடையிற பிறை யுமமாவுமமூறை யவனபிணைதுணைகழலகள பே ணுதலுரியா, ரினனெடுநனனுலகெய துவ ரெயதியபோகமு முறு வாகளிடாபிணி துயரணைவிலரே (கக)

திருசசிறறமபலம.

சுவாமிபெயா-யாழமூரிநாதேசா தேவியாா-சதாமதுராமபிகை

---

வணபுகலி வேதியனாா மாதாமடப பிடியெடுதது வனபபிறபா டிப, பணபயிலுந திருககடைககாபபுசசாதத வணைநதுபெரும பாண னாதா, நணபுடையாழக கருவியினின முனபுபோற கைககொணடு நடததபபுககாாக, கெணபெருகுமபபதிகத திசைநரமபி லிடவடங்கி றறிலலையனறே.

(இ-ள்.) வணபுகலி வேதியனாமாதா மடபபிடி எடுததுவனபபிறபா டி=வளமபொருநதிய சீகாழிககண அவதரிதத மறையவராகியபிளளையாா மாதாமடபபிடியென முதலெடுததுச சிறபபோடுபாடி, பணபயிலுந திருக கடைக் காபபுசசாதத=இசைபொருநதிய திருககடைக காபபைசசாததியரு ள ; அணைநதுபெரும் பாணனாதாம=திருநீலகணட யாழபபாணரும பிளளை யாரை அடைநது ; நணபுடையாழக கருவியினின முனபுபோறகைக் கொண டெடுததப் புக்கார்க்கு=நரம்பு இயைநதயாழககருவியின முன்போலக கையா

லமைத்துப பாடப்புகுந்த அவர்கரு, எண்பெருகு மபபதிகத்திசை நரம்பி லிட வடங்கிறதில்லை=பெருமைமிக்க அத்திருப்பதிகத்தின் பண்யாழ்நரம்பி லமைத்துப்பாட அடங்காதாயிற்று—எ-று

தாம, அன்று, ஏ, அசைநிலைகள் பிள்ளையார்க்கு அவ்விராகமும் தாளமும அப்பதிகத்திற்கமைதலின, வன்பிறபாடி என்றார் (சசஅ)

அப்பொழுது திருநீல கண்டவிசைப பெரும்பாண ரதனைவிட்டு, மெய்ப்பயமும பரிவுமுறப பிள்ளையார் கழலிணைவீழ்ந் தெழுந்து நோக்கி, யிப்பெரியோ ரருள்செய்த திருப்பதிகத் திசையாழி லேற பேனெனனச, செப்பியதிக்கருவியை நானெறுடுதலினன்றே வென றுதெளிந்துசெயவார்

(இ-ள) அப்பொழுது திருநீலகண்டவிசைப்பெரும்பாணர் அதனைவிட்டு=அச்சமயத்தில இசைநூலவல்ல திருநீலகண்ட யாழ்ப்பாணர அவ்வியாழினைப பூமியிலவைத்து, மெய்ப்பயமும பரிவுமுறப பிள்ளையார் கழலிணைவீழ்ந்தெழுந்து நோக்கி=தமது உடமபினகண அச்சமும பிள்ளையாரிடத்து நேயமும பொருந்த அவரது உபயபாதங்களில வணங்கி எழுந்து அவரைப்பார்த்து, இப்பெரியோ ரருள்செய்த திருப்பதிகத்திசை யாழிலேறபேனெனனச செப்பியது=இந்தப்பெரியவ ரருளிச்செய்த திருப்பதிகத்தின கண்ணுள்ள இசையை யாழிலமைத்துப்பாடுவேனென்று முன்யானகூறியது, இக்கருவியை நானெறுடுதலினன்றேவென்று தெளிந்துசெய்வார்=இவ்வியாழக கோலநான தொடுங்காரணத்தால அன்றே என்று தமமுள ஆராய்ந்து இவவாறுசெய்வாராயினார்—எ-று

சுறறத்தாருடன பதிகத்தையாழிலமைத்துப பாடுகினறே னெனக்கூறிய குறறத்தாறபயமும, ஆளுடையபிள்ளையாரது தெய்வத்தன்மை விளங்குதலின மகிழவும தோனறவென்பார், மெய்ப்பயமுமபரிவுமுறவென்றார்.(சசகூ)

வீக்குநரம புடையாழி னுலவிளைந்த திதுவென்றங்கதனைப்போக்க, வோக்குதலுந் தடுத்தருளி யையரே யுறறவிசை யளவினுனி, ராக்கியவிக் கருவியினைத் தாருமென வாங்கிக்கொண்டவனிசெய்த, பாக்கியத்தின மெய்வடிவாம பாலறு வாயாபணித் தருளுகின்றார்.

(இ-ள.) இது வீக்குநரமபுடையாழினுல விளைந்தது என்று=இக்குறறம் பிணித்த நரம்பினையுடையயாழைக்கைக்கொண்டகாரணத்தால நேர்ந்ததென்று, அங்கதனைபபோக்க வோக்குதலும=அவ்வியாழைக கெடுக்கக்கருதி ஓங்குதலும்; அவனிசெய்த பாக்கியத்தின மெய்வடிவாம பாலறுவாயாதடுத்தருளி=மண்ணுலகத்தார செய்தத்தவமாகிய செலவத்தின பயனபிரசைடனன ஆளுடையபிள்ளையார அதனைத்தவிர்த்தருளி; ஐயரோ உறறவிசை அளவினல்

நீராக்கிய இக்கருவியினைத் தாருமென வாங்கிக்கொண்டு=ஐயரே! பொருந்திய இசையினளவாக நீர்செய்த இந்தயாழ்க்கருவியைத் தாருமென்று தமது திருக்கரத்தில் வாங்கிக்கொண்டு; பணித்தருளுகின்றார்=அவரோடு கூறியருளுவாராயினார்—எ-று. (௪௫௰)

ஐயாநீ யாழிதனை முரிக்குமதெ னாளுடையா னுடனேகூடச்,
செய்யசடை யாரளித்த திருவருளின் பெருமையெலாந் தெரியநம்பால்,
லெய்தியவிக் கருவியினி லளவுபடு மோநந்த மியல்புக்கேற்ப, வைய
கத்தோ ரறிவுறவிக் கருவியள வையினியற்றல் வழக்கே யென்றார்.

(இ-ள்.) ஐயா நீயாழிதனை முரிக்குமதென=ஐயரே! நீர் இந்தயாழை முரிப்பது யாதுகருதி, ஆளுடையானுடனே கூடச்செய்ய சடையாரளித்த திருவருளின் பெருமையெலாந்தெரிய=பெரியநாயகி பாகருடனேகூட எழுந்தருளிச் சிவந்தசடையையுடைய தோணியப்பர் அருளியதிருவருளின் பெருமைமுழுதும் உணர, நம்பாலெய்திய விக்கருவியினில் அளவுபடுமோ=நம்மிடத்து இருந்த இந்தயாழில் அளவுபடுத்த அமையுமோ (அமையாமையில்), நந்தமியல்புக்கேற்ப வையகத்தோரறிவுறவிக் கருவியளவையினியற்றல் வழக்கே யென்றார்=நமதகுதிக்குப் பொருந்த உலகிலுள்ளோர் அறிய இவ்வியாழ்க்கருவியின் அளவிற்குப்பாடுதல் முறைமைதான் என்று அருளிச்செய்தார்—எ-று.

ஈண்டு உலகியலுக்கடங்காது தாமருளிய திருப்பதிகமேயன்றி முன்னுலகியலுக்கமையப்பாடிய திருப்பதிகங்களும் அமைதற்குக்கருவியாதலின், நம்பாலெய்திய இக்கருவியென்றும், உலகியலமையச் சிறக்கப்பாடுதலிற் பெரும்பாணர் சிறந்தாரென்பது தோன்ற, அவராயும் அளப்பரிதத நந்தம் இயல்புக்கேற்ப என்றும் கூறினார் என்க. (௪௫௧)

சிந்தையா லளவுபடா விசைப்பெருமை செயலளவி லெய்து
மோநீ, யிந்தயா ழினைக்கொண்டே யிறைவர்திருப் பதிகவிசை யித
னிலெய்த, வந்தவா றேபாடி வாசிப்பீ ரெனக்கொடுப்பப் புகலிமன்
னர், தந்தயா ழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமே
ற்கொண்டார்.

(இ-ள்.) சிந்தையா லளவுபடாவிசைப் பெருமைசெய லளவிலெய்துமோ=மனத்தால் அளவுபடுத்தற்கரிய இசையின்பெருமை காயமும் கருவியுமாகிய இவற்றின்செயலால் அளவுபடுத்தற்கு அமையுமோ (அமையாமையின்); நீ இந்த யாழினைக்கொண்டு=நீர் இந்தயாழைக் கைக்கொண்டு; இறைவர்திருப்பதிகவிசை இதனிலெய்தவந்தவாறே பாடிவாசிப்பீரெனக்கொடுப்ப=சிவபெருமான் திருவருளானாகிய திருப்பதிகத்தின் இசையை இந்தயாழிற் பொருந்தவந்தவண்ணமே பதிகத்திலமைத்துப்பாடிவாசிப்பீரென்று கொடுத்த



திருத்தருமபுரம்.



திருஞானசம்பந்தர் ஓதியபதிகம் யாழிலமையாமையால் பாணர் யாழை மாத பிள்ளையார் அதை யாழிலமைத்துவாசிக்க வணங்கி கடாக்ஷித்தல்.

தருள ; புகலிமனனா தநதயாழினைப் பெரும்பாணர் தொழுதுகைக்கொண்டு தலைமேற்கொணடாா=ஆளுடையபிளளையாா கொடுததருளிய யாழ்க்கோலைத் திருநீலகணடயாழபபாணர் தொழுதுவாஙகிச சிரசினமேற சூடினார்—எ-று

காடசிககுரியனவும அலலனவுமாய பொருளகள்யாவையும, சிந்தையா லளததறகுரியன, இபபதிகததிசை அதனுலும அளததலகூடாமையின், காய முயறசியும கருவிமுயறசியுமாகிய செயலாலடஙகாதெனபாா, செயலளவிலெ யதுமோ வெனறுா.

காயமுயறசி=எடுததல, படுததல, நலிதல், உழுபபல முதலியன. கருவி முயறகி=வாாதல, வடிததல, உறழதல, முதலியன (சுகுஉ)

அணைவுறுமக கிளைஞருடன பெருமபாண ராளுடைய பிள்ளை யாாதந, துணைமலாச சேவடிபணிநது துதிநதருளத தோணிபுரத தோனறலாருமை, இணையிலபெருஞ சிறபபருளித தொண்டருட னப பதியி லினிதுமேவிப, பணைநெடுஙகை மதயானை யுரிததவாதம பதி பிறவும பணியசசெலவாா.

அணைவுறு மககிளைஞருடன பெருமபாணா=தமமையடைநத அநததகா யவழிச சுறறததாரோடு பெரியதிருநீலகணட யாழபபாணா, ஆளுடைய பி ளளையாா தநதுணைமலாச சேவடிபணிநது துதிததருள=ஆளுடைய பிளளை யாரது தாமரைமலாபோனற இரணடு சிவநததிருவடிகளை வணஙகிததுதிகக, தோணிபுரத தோனறலாரும இணையில பெருஞசிறபபருளி=சீகாழி யிலவதரி தத ஆளுடைய பிளளையாரும ஒபபிலலாத மிககதிருவருடசிறபபினை அவாக குசசெயது, தொணடருட னபபதியிலினிதுமேவி=அடியாா திருககூடடத தோடு அததிருபபதியில இனிதாக எழுநதருளி, பணைநெடுஙகை மதயானையு ரிததவா தமபதிபிறவும பணியசசெலவாா=பருதத நீணடது திககையினையு டைய மததயானையையுரிதத சிவபெருமான எழுநதருளிய மறறததிருபபதி களையும வணஙகசசெலவாராயினா—எ-று (சுகூ)

பஙகயபபா சடைததடஞ்சூழ பழனநாட டகனபதிகள பலவு நண்ணி, மஙகையொரு பாகததாா மகிழகோயி லெனைபபலவும வ ணஙகிபபோறறித தஙகிசையாழப பெருமபாண ருடனமறையோா தலைவனாா சென்றுசாாநதாா, செஙகைமானமழுவேநதுஞ சினவிடை யா ரமாநதருளுந திருநளளாறு.

(இ-ள.) பாசடைப்பஙகயத தடஞ்சூழபழன நாடடகனபதிகள் பலவு நண்ணி=பசியஇலைகளையுடைய தாமரைவாவிகள சூழ்நதவயலகளையுடைய சோழநாட்டில் உள்ள இடமகனறபலதிருபபதிகளையும் அடைந்து ; மஙகை யொருபாகததாா மகிழகோயிலெனைப்பலவும் வணஙகிப்போறறி=உமாதேவி பாகாகிய சிவபிரான் எழுந்தருளும் திருககோயிலகள் வேறுபலவற்றையும்

பணிந்துதுதித்தனர்; தங்கிசையாழ்ப்பெரும்பாணருடன் மறையோர்தலைவனார் சென்று சார்ந்தார்=இசைபொருந்திய திருநீலகண்டப்பெரும்பாணருடன் மறையவர்தலைவராகிய ஆளுடையபிள்ளையார் சென்றடைந்தருளினார், செங்கைமான்மழுவேந்துஞ் சினவிடையாரமர்ந்தருளும் திருநள்ளாறு=சிவந்த திருக்கரத்தில் மானகன்றையும் மழுவையும் ஏந்தியருளிய கோபத்தையுடைய இடபத்தைவாகனமாகக்கொண்ட தேற்பாரணணியேசர் எழுந்தருளிய திருநள்ளாறென்னுந் திருப்பதியை—எ-று

மறையோர்தலைவனார் திருநள்ளாற்றைச்சென்றடைந்தாரெனக்கூட்டுக.

நள்ளாற்றி லெழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழா நயந்து சென்று, கொள்ளாற்றி லெதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக்கங்கைத், தெள்ளாற்று வேணியார் திருவார்கோ புரமிறைஞ்சிச் செல்வக்கோயி, லுள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தாருணர்வின் மிக்கார்.

(இ-ள்) நள்ளாற்றிலெழுந்தருள நம்பர் திருத்தொண்டர்குழா நயந்து சென்று=திருநள்ளாறென்னுந் திருப்பதியு ளெழுந்தருளுங்கால் சிவபிரானடியார் திருக்கூட்டங்கள் விரும்பிச்சென்று, கொள்ளாற்றிலெதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகி=எதிர்கொள்ளும் முறைமையால் அவரை எதிர்கொண்டு மகிழ்ச்சியடைந்து தம்முடன் சூழ்ந்துவர அங்கெழுந்தருளி, கங்கைத்தெள்ளாற்றுவேணியார் திருவார்கோபுரமிறைஞ்சி=கங்கையென்னுந் தெளிந்த நதியையணிந்த சடாமுடியையுடைய தேற்பாரணணியேசரது செல்வமிக்க திருக்கோபுரத்தை வணங்கி, செல்வக்கோயில் உள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தாருணர்வின் மிக்கார்=செல்வமநிறைந்த திருக்கோயிலினுள் மிகவும் பிரதக்ஷணஞ்செய்து திருமுன்னின்று வணங்கி எழுந்தார் அறிவின்மிக்க ஆளுடையபிள்ளையார்—எ-று

உணர்வின்மிக்கார் அணையக்குறுகி இறைஞ்சி தாழ்ந்தெழுந்தாரெனக்கூட்டுக. முக்கால வலஞ்செய்தமைதோன்ற ஆற்றவலங்கொண்டென்றார் ()

உருகியவன் புறுகாத லுள்ளுருகி நனையீரம் பெற்றாற்போல, மருவு திருமேனியெலா முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்குநீரா, யருவிசொரி திருநயனத் தானந்த வெள்ளமிழிந் தலையநின்று, பொருவிலபதி கம்போக மார்த்தபூண் முலையாளென் றெடுத்துப்போற்றி.

(இ-ள்) உருகியவன்புறு காதலுள்ளுருகி நனையீரம்பெற்றாற்போல=நெக்குருகுதற்குக் காரணமான அன்பாலாய பெருவிருப்பும் உள்ளத்தை உருகச்செய்தலால் உடம்பை நனைக்கும் ஈரத்தைத் தாம்பெற்றாற்போல; திருமேனியெலாம்மருவு முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்குநீராய=திருமேனி முழுதும்பொருந்தி முகுளித்தெழுந்த ரோமாஞ்சிதமென்னும்பைங்கூழை வளர்க்குங் குணமுடைத்தாய; அருவிசொரி திருநயனத் தானந்தவெள்ளமிழிந

தலையினின்று = அருவிபோலத் துளிக்கின்ற திருநயனங்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் வெள்ளமானது பெருகி அலையாகிறக, பொருவில் பதிகம் போகமார்த்த பூண்முலையாளென்றெடுத்துப்போற்றி = ஒப்பில்லாத திருப்பதிகத்தைப் போகமார்த்த பூண்முலையாளென்றடியெடுத்துத் துதித்து—எ-று.

உள்ளமுருகுதற்கு அன்புகாரணமாதலா லுருகிய அன்பென்றும், அதனால் பெருவிருப்புறுதலி னுறுகாதலென்றும், அதனால் உள்ளுருகி நனைந்த ஈரம் வெளிப்பட்டாற்போறலின் பெற்றாற்போல என்றும், அவ்வன்புகாரணமாய மயிர்ப்புளகம் அங்குரித்தெழுதலில் அதனை வயிரசகும் நீர்மை உடைத்தாயென்றும், அருவிபோலத் துளிக்கின்ற துளிகளின் மிகுதிதோன்ற அருவிபொழி திருநயனத் தானந்தவெள்ளமென்றுங் கூறினார் (௪௫௯)

திருநள்ளாறு - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மே
னாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கியதாழ் சடைய
னண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்தும் பாடல்பத்து மிவைவல்லா
ருண்புநீங்கி வானவரோ டுலகிலுறை வாரே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - தர்ப்பாரண்ணியேசர்

தேவியார் - போகமார்த்தபூண்முலைநாயகியம்மை

---

யாணரம்பி லாரவிய லிசைகூட்டப் பாடியே யெண்ணில்கற்பச்,
சேணளவு பட்டோங்குந் திருக்கடைக்காப் புச்சாத்திச் செங்கணுகப்,
பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறந்தணைந்து புவனமேத்
தும், பாணனார் யாழிலிட்டப் பாலறா வாயரருள் பணித்தபோது.

(இ-ள்) யாணரம்பிலாரவியலிசைகூட்டப்பாடி = (திருநீலகண்ட யாழ்ப்பாணரது) யாழினரம்பிற்கிசைய இயற்றமிழும் இசைத்தமிழும் பொருந்தப்பாடியருளி, யெண்ணில்கற்பச் சேணளவுபட் டோங்குந் திருக்கடைக்காப்புச்சாத்தி = அளவிறந்த கற்பவரையும் விண்ணுலகளவு அழியாது நிலைபெறவிளங்கும் திருக்கடைக்காப்பினைச் சாத்தியருளி, செங்கணாகப்பூண் அகலத்தவர் பாதம்போற்றிசைத்து = சிவந்தகண்ணையுடைய சர்ப்பத்தை ஆபரணமாகவணிந்த திருமார்பையுடைய தர்ப்பாரண்ணியேசர் திருவடிக

ளைத்துதித்து, புறத்தணைந்து=ஆலயத்தின்புறம்பே எழுந்தருளி; புவனமேத்துமபாணனார் யாழிலிடப் பாலறாவாயர் அருள்பணித்தபோது=உலகத்தார் துதிக்கும் திருநீலகண்டயாழ்ப்பாணர் அத்திருப்பதிகத்தை யாழிலமைத்துப் பாட ஆளுடையபிள்ளையார் திருவருள்செய்த காலத்து—எ-று. (௪௫௭)

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாணனார் தாந், தெள்ளமுத வின்னிசையின் றேம்பொழிந்த திரியாழைச் சிறக்க வீக்கிக், கொள்ளவிடும் பொழுதினகட் குவலயத்தோர் களிகூரக் குலவுசண்பை, வள்ளலார் திருவுள்ள மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங்காலை

(இ-ள்) பிள்ளையார் திருத்தாளங்கொடுபாடப் பின்புபெரும்பாணனார் தாந்=ஆளுடையபிள்ளையார் திருப்பொற்றாளத்தை திருக்கரத்திற்றாங்கி அத் திருப்பதிகத்தைப்பாடுங்கால் பின்பு திருநீலகண்டயாழ்ப்பாணர், தெள்ளமுதவின்னிசையின் றேம்பொழிந்ததிரியாழைச்சிறக்கவீக்கிக் கொள்ளவிடும் பொழுதினகண்=தெளிந்த அமுதம்போன்ற இனிய இசைத்தேன்பொழிகின்ற நரம்பினையுடையயாழைப்பண்ணிறுக்கமையக்கட்டி அவ்வியாழில் அமைய அப்பதிகத்தை அமைத்துப்பாடுங்கால், குவலயத்தோர்களிகூர= உலகிலுள்ளார் களிப்படைய, குலவுசண்பைவள்ளலார் திருவுளமகிழ்ந்து திருத்தொண்டருடன் மருவுங்காலை=விளங்குகின்ற சீகாழியிலவதரித்த ஆளுடையபிள்ளையார் திருவுள்ளம் மகிழ்ந்து அடியார் திருக்கூட்டத்தோடு எழுந்தருளி இருக்குங்காலத்து—எ-று. (௪௫௮)

மன்னுதிருநள்ளாறு மருந்தைவணங் கிப்போந்து வாசநன்னீ ரப், பொன்னிவளந் தருநாட்டுப் புறம்பணைசூழ் திருப்பதிகள் பலவு மபோற்றிச், செந்நெல்வயற் செங்கமல முகமலருந் திருச்சாத்த மங்கைமூதூர், தன்னிலெழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர்சூழ.

(இ-ள்) மன்னுதிருநள்ளாறு மருந்தை வணங்கிப்போந்து=நிலைபெற்ற திருநள்ளாற்றில் எழுந்தருளிய பிறவிநோய் நீக்கும் மருந்தாகிய அச் சிவபிரானைவணங்கி அத்திருப்பதியினின்றுஞ் சென்றருளி, வாசநன்னீர்ப் பொன்னிவளந் தருநாட்டுப்புறம்பணைசூழ்திருப்பதிகள் பலவும்போற்றிச= வாசனைபொருந்திய நல்லநீரையுடைய காவிரிநதியானது பலவளங்களையுங் கொடுக்கும் சோழநாட்டில் வயல்சூழ்ந்த பலதிருப்பதிகளையுந் துதித்து; செந்நெல்வயற்செங்கமலமுகமலருந்திருச்சாத்தமங்கை மூதூர்தன்னில்=சிவந்த நெற்பயிர்கள்பொருந்திய வயல்களில்செந்தாமரைமலர்கள்மகளிர்முகம்போல மலர்கின்றபழமைபொருந்திய திருச்சாத்தமங்கையென்னுந் திருப்பதியில்; சைவசிகாமணியார் மெய்த்தவத்தோர்சூழ எழுந்தருளினார்=சைவசிகாமணியாகிய ஆளுடையபிள்ளையார் மெய்யடியார்கள் சூழும்படி எழுந்தருளினார்—எ-று.

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினி னீலநக்கர் தாமுஞ்சைவ, மறையவனா ரெழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளக்கியெங்குந், துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந்தூப தீபமாக்கி, முறைமையினில் வந்தெதிர்கொள் ளுடனணைந்து முதல்வனார் கோயில்சார்ந்தார்.

(இ-ள்) நிறைசெல்வத் திருச்சாத்தமங்கையினினீலநக்கரும் = நிறைந்த செல்வத்தையுடைய திருச்சாத்தமங்கை என்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்ற திருநீலநக்க நாயனாரும், சைவமறையவனாரெழுந்தருளும்படி கேட்டுவாழ்ந்து = சைவவேதியராகிய ஆளுடையபிள்ளையார் எழுந்தருளும் முறைமையைத் தாம்கேட்டு (அதனால் இன்புற்று,) வழிவிளக்கி யெங்குந் துறைமலிதோரணங் கதலிகமுகுநிறைகுடந் தூபதீபமாக்கி = பிள்ளையார் எழுந்தருளும் வழியைச் செப்பஞ்செய்து எவ்விடங்களினும் இடை இடையே நெருங்கிய தோரணங்களையும் வாழைகளையும் கமுகுகளையும் அவ்விடங்களிற் பூரணகும்பங்களையும் தூபதீபங்களையும் வைத்து, முறைமையில் வந்தெதிர்கொள் ளுடனணைந்து முதல்வனார்கோயில்சார்ந்தார் = எதிர்கொள்ளும் முறைப்படி சென்று எதிர்கொள்ள அவரோடு எழுந்தருளி அயவந்தீசரது திருக்கோயிலை அடைந்தருளினார்—எ-று. (௪௯௰)

அயவந்தி யமர்ந்தருளு மங்கணார்தங் கோயின்மருங்கணைந்துவானோ, ருயவந்தித் தெழுமுன்றிற் புடைவலங்கொண் டுட்புக்கா ரொழுகுஞ்செக்கர், மயவந்தி மதிச்சடையார் முன்றாழ்ந்து மாதவமிவ் வையமெல்லாஞ், செய்வந்த வந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன்னின்றார்.

(இ-ள்) அயவந்தியமர்ந்தருளும் அங்கணார்தங்கோயின்மருங்கு அணைந்து = அயவந்தி என்னுந் திருப்பதியி லெழுந்தருளிய அயவந்தீசரது ஆலயத்தின்கண் அடைந்து, வானோருயவந்தித் தெழுமுன்றிற் புடைவலங் கொண்டு உட்புக்கார் = தேவர்கள் வாழும்பொருட்டு எழாநின்ற திருமுற்றத்தின்கண் வலமாகவந்து உள்ளேபுகுந்தவராய், ஒழுகுஞ்செக்கர் மயவந்தி மதிச்சடையார் முன்றாழ்ந்து = ஒழுகுகின்ற செவ்வானம்போலும் அந்திப் பிறையணிந்த சடைமுடியையுடைய அச்சிவபிரானது திருமுன்புவணங்கி; இவ்வையமெல்லாம் மாதவஞ்செய்வந்த அந்தணனார் = இந்த நிலவுலகத்தார் அனைவரும் பெரியதவஞ்செய்த காரணத்தால் அவதரித்த ஆளுடையபிள்ளையார் = செங்கைமேற்குவித்து எழுந்து திருமுன்னின்றார் = சிவந்த திருக்கரங்களைச் சிரசின்மேற்குவித்து வணங்கி எழுந்துதிருமுன்புநின்றருளினார்—எ-று.

அந்தணனார் உட்புக்காராய்க் குவித்தெழுந்து நின்றாரெனக் கூட்டுக.

ஒழுகுஞ்செக்கர் மயச்சடை எனவியையும், ஓர் அவசரத்துச்சடைகள் பின்றூங்கும் ஆதலின் ஒழுகுஞ்செக்கர் மயச்சடையெனக்கூறினார். (௪௯௧)

போற்றிசைக்கும் பாடலின்ற பொங்கியெழு மாதரவு பொழிந்துவிம்மி, ஏற்றின்மிசை யிருப்பவர்தம் மெதிர்நின்று திளைத்துப்போந் தெல்லையிலா, நீற்றுநெறி மறையவர்தா நீலநக்கர் மனையிலெழுந் தருளியன்பர், லாற்றுமவிருந் தவரமைப்ப வன்பருட னின்புற்றங் கமுதுசெய்தார்.

(இ-ள்.) போற்றிசைக்கும் பாடலின்றபொங்கி எழும் ஆதரவுபொழிந்துவிம்மி=துதிக்கும் திருப்பதிகத்தால் அதிகரித்து எழுகின்ற ஆனந்தக் கண்ணீர்சொரிந்து விம்முதல்செய்து, ஏற்றின்மிசையிருப்பவர்தம் எதிர்நின்று=இடபத்தின்மேல் எழுந்தருளுபவராகிய அச்சிவபிரானது சந்நிதிக்கண் நின்று, திளைத்துப்போந்து=பேரானந்தத்திலமுழுகி அங்குநின்றுஞ்சென்றருளி, எல்லையிலாநீற்றுநெறி மறையவர்தாநீலநக்கர் மனையிலெழுந்தருளி=அளவுபடாத சைவமார்க்கத்தைவளர்க்கும் ஆளுடையபிள்ளையார் திருநீலநக்கநாயனார் திருமனையிலெழுந்தருளி, அவர் அன்பால் ஆற்றுமவிருந்து அமைப்ப அன்பருடன் இன்புற்று அங்கு அமுதுசெய்வார் = அத்திருநீலநக்கநாயனார் அன்பாற்செய்தவிருந்தினை அமைப்பிக்க அடியார்திருக்கூட்டத்தோடுவிரும்பி அவ்விடத்துத் திருவமுதுசெய்தார்—எ-று.

ஈங்கு விருந்தென்றது உண்டிமுதலியனவற்றின் மேற்று ஆதரவாலாய கண்ணீர் ஆதரவென்றலுபசாரம் (சசூஉ)

நீடுதிருநீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்துநீர்மைப், பாடுமியாழ்ப் பெரும்பாண ருந்தங்கவங்கிரவு பள்ளிமேவி, யாடும வ ரயவந்தி பணிவதனுக் கன்பருட னணைந்து சென்று, நாடியநண் புடைநீல நக்கடிக ளுடனுந்தா கழலிறைஞ்சிறைஞ்சிறைந்து.

(இ-ள்.) நீடுதிரு நீலநக்கர் நெடுமனையில் விருந்தமுதுசெய்து=அன்பு மிக்க திருநீலநக்கரது பெருமைபொருந்திய திருமனையில் விருந்தின்பொருட்டு அமைத்த திருவமுதை அமுதுசெய்தருளி, நீர்மைபாடும் யாழ்ப்பெரும் பாணருந்தங்க அங்கு இரவுபள்ளிமேவி=பண்ணீர்மையோடும் பாடும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அத்திருமனையிலவசிக்கத் தாமும் அவ்விடத்து இரவில் துயில்கூர்ந்தருளி, ஆடுமவர் அயவந்தி பணிவதனுக்கு அன்பருடன் அணைந்து சென்று=நிருத்தஞ்செய்தருளும் அச்சிவபிரானது அயவந்தியென்னுந் தலத்தை வணங்க அடியார் திருக்கூட்டத்தோடு எழுந்தருளிச்சென்று, நாடியநண்புடைநீலநக்கடிகளுடன் நாதாகழலிறைஞ்சிறைஞ்சிந்து=யாவராலும் விரும்பத்தக்க நட்பினையுடைய திருநீலநக்கநாயனாரோடு அயவந்திநாதர் திருவடிகளை வணங்கி—எ-று.

பாடும் யாழ்ப்பாணருந் தங்கவென்றது, முன் திருநீலநக்க நாயனார்க்கு நீலகண்டப் பெரும்பாணர் தங்கவுறையுள் கொடுத்தருளவென்பப் பிள்ளையார் கட்டளையிட அவர் தம்மனையில் ஔபாசனவேதியில் இடங்கொடுத்தமை குறித்துநின்றது. (சசூரு)

கோதிலா வாரமுதைக் கோமளக்கொம் புடன்கூடக் கும்பிட்
டேத்தி, யாதியா மறைப்பொருளா லருந்தமிழின் றிருப்பதிக மருளி
ச்செய்வார், நீதியாய் நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழ்வைத்
துப், பூதிசா தனர்பரவும் புனிதவிய லிசைப்பதிகம் போற்றிசெய்தார்.

(இ-ள்) கோதிலா வாரமுதைக் கோமளக்கொம்புடன்கூடக் கும்பிட்டேத்தி = குற்றமில்லாத அரிய அமுதுபோலும் அயவந்தீசரை அழகிய பூங்கொம்புபோன்ற இருமலர்க் கண்ணம்மையோடுகூட வணங்கித்துதித்து, ஆதியாமறைப்பொருளா லருந்தமிழின் திருப்பதிகம் அருளிச்செய்தார் = எல்லா நூற்கு முதனூலாகிய வேதப்பொருளோடு அரியதமிழ்த்திருப்பதிகத்தை அருளிச்செய்வாராய், நீதியாய் நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழ்வைத்து = சைவ நெறிவழி ஒழுகுகின்ற திருநீலநக்கநாயனாரது பெரிய கீர்த்தியை "நிறையினார்நீலநக்கனெடுமாநகரென்று தொண்டர்உறையுமூர் சாத்தமங்கை" யென்று திருக்கடைக்காப்பிற்சிறப்பித்து, பூதிசாதனர் பரவும் புனிதவியலிசைப்பதிகம் போற்றிசெய்தார் = பூதிருத்திராக்கமென்னுஞ் சைவசாதனத்தை விளக்குகின்ற ஆளுடையபிள்ளையார் பரிசுத்தமான இயலிசைகளமைந்த திருப்பதிகத்தைத் துதிசெய்தார்—எ-று.

பூதிசாதனர் மறைப்பொருளோடு திருப்பதிகம் அருளிச்செய்வாராய் நீலநக்கர் சீர்நிகழ்வைத்துப் போற்றிசெய்தாரெனக் கூட்டுக. (௪௯௮)

திருச்சாத்தமங்கை - பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

திருமலர்க் கொன்றைமாலை திளைக்கு மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணிதன்னோ டுடனாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ்சும்பெருஞ் சாத்தமங்கை
அருமல ராதிமூர்த்தி யயவந்தி யமர்ந்தவனே.

மறையினார் மல்குகாழித் தமிழ்ஞானசம் பந்தன்மன்னு
நிறையினார் நீலநக்கன் னெடுமாநக ரென்றுதொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை யயவந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லா ரிமையோரிலு முந்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அயவந்தீசர். தேவியார்-இருமலர்க்கண்ணம்மை.

---

பரவியகாதலிறபணிநது பாலரு வாயாபுறத் தணைந்துபண்பு, விரவியநண் புடையடிகள விருபபுறுகா தலிறறங்கி மேவுநாளி, லர வணிநதார பதிபிறவும பணியவெழு மாதரவா லணைநதுசெலவா, ரு ரவுமனக் கருதமதொனரு முளளமுடை யவாககுவிடை யுவநதுநலகி.

(இ-ள) பரவியகாதலிறபணிநது பாலருவாயா புறததணைநது=ஆளு டைய பிள்ளையாா மிககவிருபயாலவணஙகிததிருககோயிலின புறததுச்சென றருளி; பணபுவிரவிய நணபுடையடிகள விருபபுறு காதலிறறங்கி மேவுநா ளில=குணததொடு கலநதநடபினையுடைய திருநீலநககநாயனாரது விருமபத தகக பேரன்பின்மிதமிததம அவரது திருமடததில எழுநதருளி இருககும நா ளில, அரவணிநதாா பதிபிறவும் பணியவெழுமாதரவாலணைநதுசெலவாா= சறபாபரணததையணிநத சிவபிரான எழுநதருளிய பிறதிருபபதிகளையும வ ணஙகுமபொருட்டு எழுநத அனபினால அஙகுநினறு எழுநதருளும பிளளை யாா, உரவுமனககருதமதொனரு முளளமுடையவாககு விடையுவநதுநலகி= உணர்வு அமைநத மனககருதது ஒருஙகிய உளளததையுடைய திருநீலநகக நாயனாருககு மகிழநது விடைகொடுததருளி—எ-று (சகூரு)

வேறு.

மறறவாதம பெருஙகேணமை மகிழாதுகொணடு மாலயனுக கரியபிரான மருவுதானம, பறபலவுஞ் செனறுபணிந தேததிபபாடிப பரமாதிருத தொணடாகுழாம பாஙகினெயதக, கறறவாவாழ கடனு கைக காரோணததுக கணணுநலைக கைதொழுது கலநதவோசைச, சொறறமிழமா லைகளபாடிச் சிலநாளவைகித தொழுதகனறாா தோ ணிபுரத தோனறலாா தாம.

(இ-ள) மறறவாதம பெருஙகேணமை மகிழநதுகொணடு=அததிருநீல நககனாரது பெரியநணபை மகிழகூாநதருளி, மாலயனுககரியபிரான ம ருவு தானமபறபலவுஞ்சென்று பணிநதேததிபபாடி=திருமால பிரமன கா ணுதறகரிய சிவபிரான எழுநதருளிய திருபபதிகளபலவறறையும அடைநது வணஙகி துதிதது திருபபதிகமபாடி, பரமாதிருததொணடாகுழாம பாஙகி னெயத=சிவபிரானது திருவடியாாகூட்டம தமதுமருஙகில சூழநதுவர, கறறவாவாழகடனுகைக காரோணததுககணணு தலைககைதொழுது=கலவி யுடையாாவாழும கடறகரைசகண உளள திருநாகைககாரோணமெனனும் திரு ப்பதியிலெழுநதருளிய திருககாரோணரைககைகுவிததுவணஙகி, கலநதவோ சைச சொறறமிழமாலைகளபாடிச் சிலநாளவைகி=இசைபொருநதிய சொல லாலாகிய திருபபதிகமாலையைப பாடியருளி அஙகுச்சிலநாள எழுநதருளி இருநது; தோணிபுரததோன்றலார் தொழுதகனறாா=ஆளுடையபிளளையார் வணங்கி அததிருப்பதியினின்றும நீஙகியருளினா—எ-று.

தாம்=அசை. (குகூகூ)

திருநாகைக்காரோணம்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

கூனற்றிங்கட் குறுங்கண்ணிகான்ற நெடுவெண்ணிலா
வேனற்பூத்தம் ராங்கோதையோடும் விரவுஞ்சடை
வானநாட னமரர்பெருமாற் கிட மாவது
கானல்வேலிக் கடல்சூழ்கடனாகைக் காரோணமே.

மல்குதண்பூம் புனல்வாய்கொழுக்கும் வயற்காழியா
னல்லகேள்வித் தமிழ்ஞானசம்பந்த னல்லார்கண்முன்
வல்லவாறேபுனைந் தேத்துகாரோணத் துவண்டமிழ்
சொல்லுவார்க்கு மிவைகேட் பவர்க்குந் துயரில்லையே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-காயாரோகணேசர் தேவியார்-நீலாயதாட்சியம்மை.

---

கழிக்கானன் மருங்கணைபுங் கடனாகைபதுநீங்கிக் கங்கையாற்றுச், சுழிக்கானல் வேணியார் தம் பதிபலவும் பரவிப்போய்த் தோகைமாதம், விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர்கழல் வணங்கியேத்தி, மொழிக்காதற் றமிழ்மாலை புனைந்தருளி யங்ககன்றார் மூதாரினாரும்

(இ-ள்) கழிக்கானல் மருங்கணையுங் கடனாகையதுநீங்கி = உவர்க்கழியாற்றின் மருங்கிலிருக்கின்ற திருக்கடல்நாகைக்காரோணத்தினின்று நீங்கி, கங்கையாற்றுச் சுழிக்கு அலைந்தவேணியார் தம் பதிபலவும் பரவிப்போய் = கங்கா நதியின்சுழிக்கு இடமாய் ஆகின்ற சல்லசடாமகுடத்தையுடைய சிவபெருமானது பலதிருப்பதிகளையுந் துதித்துச்சென்று, தோகைமார்தம் விழிக்காவிமலர் பழனக்கீழ்வேளூர் விமலர்கழல்வணங்கியேத்தி = பெண்களதுகண்போலும் நீலோற்பலங்கள் மலர்கின்ற வயல்சூழ்ந்த திருக்கீழ்வேளூரில் எழுந்தருளிய அட்சயலிங்கரது திருவடிகளை வணங்கித் துதித்து, மொழிக்காதற்றமிழ்மாலை புனைந்தருளியங்ககன்றார் மூதாரினாரும் = சொல்லாலும் விருப்பத்தைத்தரும் திருப்பதிகமாலையைச் சாத்தியருளி அத்திருப்பதியினின்றும் நீங்கியருளினார்—எ-று

கழிக்கானல் உவர்க்கழியாற்றின்பக்கவிடம், அதுகழிகானல்பானல்கமழுகாழியென்று கருதப்படுபொருள் என்பதனாலும் கண்டல்கண்மிண்டியகானற்காழி என்பதனாலும் கழிசூழ்குளிர்கானல் என்பதனாலுங்காண்க (சுசுஎ).

---

திருக்கிழவேளூர் - பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுலாவிய சடையினர் விடையினர் மிளிர்தரு மரவோடும்
பன்னுலாவிய மறையொலி நாவினர் கறையணி கண்டத்தர்
பொன்னுலாவிய கொன்றையந் தாரினர் புகழ்மிகு கீழ்வேளூ
ருன்னுலாவிய சிந்தையர் மேல்வினை யோடிட வீடாமே

குருண்டவார்குழற் சடையுடைக் குழகனை யழகமர் கீழ்வேளூர்
திரண்டமாமறை யவர்தொழும் பெருந்திருக் கோயிலெம் பெருமானை
யிருண்டமேதியி னினமிகுவயன்மலர் புகலிமன் சம்பந்தன்
றெருண்டபாடல்வல் லார்வர்சிவகதி பெறுவது திடமாமே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அக்ஷயலிங்கேசர்

தேவியார்- வனமுலைநாயகியம்மை

---

அருகணையுந் திருப்பதிக ளானவெலா மங்கணரைப் பணிந்து போற்றிப், பெருகியஞா னம்பெற்ற பிள்ளையா ரெழுந்தருளும் பெருமைகேட்டுத், திருமருவு செங்காட்டங் குடிநின்று சிறுத்தொண்ட ரோடிச்சென்றங், குருகுமனங் களிசிறப்ப வெதிர்கொண்டு தம்பதியுட் கொண்டுபுக்கார்

(இ-ள்) அருகணையுந் திருப்பதிகளான வெலாமங்கணரைப் பணிந்து போற்றி=பக்கத்திலுள்ள திருப்பதிகளெல்லாவற்றிலும் எழுந்தருளிய சிவபெருமானைவணங்கித்துதித்து, பெருகிய ஞானம்பெற்ற பிள்ளையார் எழுந்தருளும் பெருமைகேட்டு=மேம்பட்ட உண்மைஞானத்தைப்பெற்றுக்கொண்ட ஆளுடையபிள்ளையார் தமது திருப்பதிக்கு எழுந்தருளும் பெருமையைக்கேள்வியுற்று, திருமருவு செங்காட்டங்குடிநின்று சிறுத்தொண்டரோடிச்சென்று=செல்வமிக்க திருச்செங்காட்டங்குடியினின்றுஞ் சிறுத்தொண்டநாயனார் விரைந்துசென்று; உருகுமனங்களிசிறப்ப அங்கு எதிர்கொண்டுதம்பதியுட்கொண்டுபுக்கார்=நெக்குருகும் மனதிலகளிப்புமேலிடப் பிள்ளையாரெழுந்தருநிடத்து அவரை எதிர்கொண்டு தமது திருப்பதியினகண் அழைத்துக் கொண்டுசென்றார்—எ-று.

அடியார்சென்றுழிதரியாதுசென்று எதிர்கொண்டுவணங்கி உபசரித்துத் தக்கவாறு திருவமுதுசெய்விக்கும் அவரது பத்திமிகுதிதோன்ற ஓடிச்சென் றென்றார். (௬௬௮)

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியிலெழுந் தருளிச்சீர்த்தி, நிறுத்தெண்டிக் கிலுநிலவுந் தொண்டரவர் நண்பமர்ந்து நீலகண்டம், பொறுத்தண்ட ருய்யக்கொண் டார்கணபதீச்சரத்தின்கட் போகமெல்லாம், வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்ட ருடனிணைந்தார் வேதவாயர்

(இ-ள்.) சிறுத்தொண்டருடன்கூடச் செங்காட்டங்குடியி லெழுந்தருளி = சிறுத்தொண்டநாயனாரோடுகூடத் திருச்செங்காட்டங்குடி என்னுந் திருப்பதியிலெழுந்தருளி, சீர்த்தி எண்டிக்கிலும் நிறுத்து நிலவுந்தொண்டரவர் நண்பமர்ந்து = கீர்த்தியை எட்டுத்திக்கிலும் நிறுத்தி விளங்கும் அச்சிறுத்தொண்ட நாயனாரது நட்பினைவிரும்பி, நீலகண்டம்பொறுத்து அண்டர் உய்யக் கொண்டார் கணபதீச்சரத்தின்கண் = திருநீலகண்டத்தைக்கொண்டருளி தேவர்களை உய்யும்படி ஆட்கொண்ட கணபதீச்சரத்து ஆலயத்தின்கண், போகமெல்லாம்வெறுத்துண்டிப் பிச்சைநுகர்மெய்த்தொண்டருடன் வேதவாயர் இணைந்தார் = இம்மை இன்பமும் மறுமைஇன்பமும் ஆகிய எல்லாப்போகங்களையும் உவர்த்துப் பிச்சை உண்டியை உண்கின்றமெய்யடியாருடன் ஆளுடையபிள்ளையார் அடைந்தருளினார் — எ-று.

மறுமையின்பமுமடங்கப் போகமெல்லாமென்றும், இம்மைமறுமையின்பங்களைத் துவரத்துறத்தலின் வெறுத்தென்றும், அவ்வாறுமுற்றத்துறந்தார்க்குப் பிச்சையுணவுசிறத்தலின் உண்டிப்பிச்சை நுகர்என்றும், துறவுகாரணமாக அவாவறுத்து மெய்யுணர்ந்தாராதலின் மெய்த்தொண்டரென்றுங் கூறினார். இம்மையின்பம் = மகளிர் மாலைசந்தனம் முதலியவற்றாலாய சுகம். மறுமையின்பம் = கற்பகநீழற்கண் புத்தமுதுண்டு அரம்பையர்குழாத்தோடு தழுவியடையுஞ்சுகம். (சுகூக)

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி யரவணிந்தா ரடிக்கீழ்வீழ்ந்து, செங்கணருவிகள்பொழியத் திருமுன்பு பணிந்தெழுந்து செங்கை கூப்பித், தங்கள்பெருந் தகையானைச் சிறுத்தொண்டர் தொழவிருந்த தன்மைபோற்றிப், பொங்கியெழு மிசைபாடிப் போற்றிசைத்தங் கொருபரிசு புறம்புபோந்தார்

(இ-ள்.) அங்கணைந்து கோயில்வலங்கொண்டருளி = அத்திருவாலயத்தை அடைந்து திருக்கோயிலைப் பிரதட்சணஞ்செய்தருளி; அரவணிந்தார் அடிக்கீழ் செங்கணருவிகள்பொழியத் திருமுன்புவீழ்ந்து = சர்ப்பாபரணத்தை யணிந்த கணபதீச்சரர் திருவடிக்கீழ் சிவந்ததிருக்கண்களினின்று மானந்தக் கண்ணீர் அருவிசோர அவரது திருமுன்புவீழ்ந்து அட்டாங்கமாகவணங்கி எழுந்து, செங்கைகூப்பி = சிவந்ததிருக்கரங்களைச் சிரசின்மேற்குவித்து, தங்கள் பெருந்தகையானைச் சிறுத்தொண்டர் தொழவிருந்ததன்மைபோற்றி = தமது பெருந்தகையாகிய கணபதீச்சரரைச் சிறுத்தொண்டநாயனார் வணங்க

எழுந்தருளிய தன்மையை "செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டன் பணி செய்ய" எனத்திருப்பதிகத்தில் சிறப்பித்துத்துதித்து, பொங்கியெழுமிசை பாடிப் போற்றிசைத்தங்கொரு பரிசுபுறம்புபோந்தார்=ஓங்கியெழும் இனிய இசையையுடைய திருப்பதிகத்தைப்பாடி துதிசெய்து ஒருவாறு ஆலயத்தின் புறம்பே யடைந்தருளினார்—எ-று

நீங்கற்கரிய ஆர்வமதோன்ற ஒருபரிசென்றார் (௬௭௰)

திருச்செங்காட்டங்குடி-பண-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந்தவிர்ந்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே

செந்தணலப்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்டனவன்வேண்ட
வந்தணப்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவுஞ்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர்-கணபதீசர் தேவியார்-திருக்குழல்நாயகியம்மை

---

போந்துமா யாத்திராதம போரேற்றின் றிருமனையிற் புகுந்து சிந்தை, வாயந்தமா தவவாதா மகிழ்ந்தருள வமாந்தருளி மதிலகண மூன்றுங், காய்ந்தமால விடையார்தங் கணபதீச்சரம்பரவு காதலகூர வேந்துநூலணிமார்ப ரினபுறறங் கனபருட் னிருந்தநாளில்

(இ-ள்) போந்துமாமாத்திராதம போரேற்றின் றிருமனையிறபுகுந்து=ஆலயத்தினின்றும்புறம்பே எழுந்தருளி மாமாத்திரகுலத்தலைவராகிய சிறுத்தொண்ட நாயனாரது திருமனையிற்சென்றருளி, சிந்தைவாய்ந்த மாதவராவார் மகிழ்ந்தருள வமர்ந்தருளி=திருவுள்ளங்கனிவு அமைந்தபெருந்தவத்தினராய சிறுத்தொண்டநாயனார் மகிழ்கூர்ந்தருள அங்குறவசித்தருளி, மதிலகண மூன்றுங்காய்ந்த மாலவிடையார்தங் கணபதீச்சரம் பரவுகாதலகூர=அசுரர்களது திரிபுரங்களையும் நகைத்தெரித்தருளிய திருமாலாகியவிடபத்தை வாகனமாகக்கொண்டருளும்பெருமானது கணபதீச்சரமெனனுமாலயத்தை வணங்கும் விருப்பமமேம்பட, ஏந்துநூலணிமார்பரினபுற றங்கன்பருடனிருந்த நாளில்=உபவீதமணிந்த அழகியதிருமார்பினையுடைய ஆளுடையபிள்ளையார் மகிழ்ச்சியடைந்து அத்திருப்பதியில் அடியார் திருக்கூட்டத்தோடு எழுந்தருளி இருந்தகாலத்தில்—எ-று. (௬௭௧)

திருமருக னகரினக ணெழுந்தருளித திஙகளுடன செங்கட்பாம்பு, மருவுநெடுஞ் சடைமவுலி மாணிகக வணணாகழல வணஙகிப் போறறி, யுருகியவன புறுகாதலுளளலைபபத தெள்ளுமிசை யுடனே கூடப, பெருகுதமிழத தொடைசாததி யஙகிருநதாா பெரும்புகலிப பிளளையாாதாம

(இ-ள) திருமருகனகரினகணெழுநதருளி=திருமருகலெனனுந திருபபதியினகண அடைநதருளி, திஙகளுடன செஙகடபாமபுமருவுநெடுஞ்சடைமவுலி மாணிககவணணாகழலவணஙகிபபோறறி=இளமபிறையோடு சிவநத கணணையுடைய பாமபுகளும பகையினறிவாழும நீணட சடாமகுடததையுடைய மாணிககவணணரது திருவடிகளை வணஙகிததுதிதது, உருகியவன புறு காதலுளளலைபப=உருகுதறகுக காரணமாகிய அனபாலாய பெருவிருபபானது தமதுதிருவுளளததை அலையசசெயய, தெளளுமிசை யுடனேகூடப பெருகுதமிழததொடைசாததி=தெளிநத இசையோடுகூடச சுவைமிகக திருபபதிகமாலையைச சாததி, பெருமபுகலிபபிளளையாா அஙகிருநதாா=பெருமைபொருநதிய ஆளுடையபிளளையாா அஙகுஎழுநதருளி இருநதாா—எ-று.

தாம=அசை. (சஎஉ)

வேறு

அஙநாளி லொருவணிகன பதிகளுகி யணைவானோா கனனியையு முடனேகொணடு, பொனனூமே ருசசிலையாா கோயினமாடு புறததிலொரு மடநதிரவு துயிலுமபோது, மினனூவெள ளெயிறறாவு கவவுதலுங கிளாநத விடவேகங கடிதுதலை மீககொணடேறத, தனனுயிாீஙகுமவன றனமைகணடு சாயலிளங கனனிநிலை தளாநது சோாவாள,

(இ-ள) அஙநாளிலபதிகளுகி யணைவான ஒருவணிகன=அநநாளில் வழிசசெலவோனுய வரும ஓா வசியன, ஓா கனனியையுமுடனேகொணடு=தனனைவரனுககககுறிதத ஓா கனனிகையையும தனனுடனகொணடு, பொனனூமேருசசிலையாா கோயினமாடு=பொனமயமான மாமேருவை விலலாக உடைய மாணிககவணணரது திருககோயிலினபககலில, ஒருமடததுபபுறததில இரவுதுயிலுமபோது=ஒருதிருமடததின புறமபே அனறிரவு துயிலுங காலதது, மினனூ வெளளெயிறறரவு கவவுதலும=ஒளிபொருநதிய வெளளிய பறகளையுடைய பாம்பொனறு கடிசசுஙகால, கிளாநதவிடவேகங கடிது தலைமீககொணடேற=மேறகொணடவிடததின் வேகமானது விரைவாயத் தலைககொணடுசெலல, தனனுவிாீஙகுமவன் றன்மைகண்டு சாயலிளங்கனனிநிலைதளாநது சோாவளா=தனது உயிாீஙகுமஅததலைவனது நிலைமையைபபாாத்து மயிலினசாயலையுடைய இளமைபொருநதிய அசகனனிகை நிலைதளாநது வருநதுவாளாயினள—எ-று.

எயிற்றென்றது, காளி, காளாத்திரி, எமன், எமதூதன் என்னும் நான்குபற்களையும் உணர்த்தலிற் சாதி ஒருமை. விடவேகம் என்புழித் தொக்க ஐந்தாம் - உருபும் பொருளும் விரிக்க அதனின்றும் தோன்றியதென ஏதுப்பொருட்படவியையும், வேகமேழினுள் ஏழாம்வேகத்தில் பல்லும் நாவும் உடம்பும் கருகி விடந் தலைக்கொள்ளுங்கால் உயிர் அடங்குதலும் உண்டு. ஆதலின், அவ்வாறு அடங்காதுபோயிற்றென்பார் ஆவிநீங்குமவனென்றார். (௧௭௩)

வாளரவு தீண்டவுந்தான் றீண்டகில்லாண் மற்றுமாற்ற மற்றொருவர் கொடுப்பாரின்றி, யாளரியே றனையானை யணுகவீழ்ந்தே யசைந்தமலர்க் கொடிபோல்வா ளரற்றும்போது, கோளுருமும் புள்ளரசு மனையாரெல்லாக் கொள்கையினு லுந்தீர்க்கக் குறையாதாக, நீளிரவு புலர்காலை மாலைவாச நெறிகுழலா ணெடிதயர்ந்து புலம்புகின்றாள்.

(இ-ள்) வாளரவுதீண்டவுந்தான்றீண்டகில்லாள் = ஒளிபொருந்திய சர்ப்பந்தீண்டவுந்தான் அவனைத்தீண்டாளாகி, மற்றுமாற்றமற்றொருவர் கொடுப்பாரின்றி = வேறுவார்த்தையைக் கூறுவார் மற்றொருவருமில்லாமல், ஆளரியேறனையானை யணுகவீழ்ந்தே = தனக்குத்தக்க ஆண்சிங்கம்போன்ற அத்தலைவனைச் சமீபிக்கப் பூமியில்வீழ்ந்து, அசைந்த மலர்க்கொடிபோல்வாளரற்றும்போது = அசைகின்ற பூங்கொடிபோலும் அக்கன்னிகை யழுங்காலத்து, கோளுருமும் புள்ளரசுமனையார் = தீங்கைவிளைக்கும் இடியையும் கருடனையும் ஒத்தமாந்திரிகர், எல்லாக்கொள்கையினாலுந் தீர்க்கக் குறையாதாக = தாம்செய்யும் பாவனையேயன்றி மருந்து மந்திரம் மணி முதலிய விடந் தீர்க்கும் உபாயங்களெல்லாவற்றாலுந் தீர்க்க விடம் நீங்காதிருக்க, நீளிரவு புலர் காலைமாலை வாசநெறிகுழலா ணெடிதயர்ந்து புலம்புகின்றாள் = நீண்ட இராக்காலம்போய வைகறையாங்காலத்து மாலையையணிந்த வாசனைபொருந்திய நெறித்தகூந்தலையுடைய அக்கன்னிகை மிகச்சோர்ந்து புலம்புவாளாயினாள் — எ-று.

கோளுரும் = கோளைவிளைக்கும் உருமுவென இரண்டாம் உருபும் பொருளும் விரிக்க. விவாகச்சடங்கு முடியாது அரவுதீண்டியிறந்த அவ்வணிகமகனைத் தீண்டுதல் கூடாமையிற் றீண்டகில்லாளென்றும், இறந்துபோன அவ்வணிகமகனையேயன்றி அவட்கு மற்றொருறுதிகூறும் துணையின்மையின் மற்றுமாற்றம் மற்றொருவர் கொடுப்பாரின்றி யென்றும் ஆதிபௌதிகமாகிய உருமும் புள்ளரசுமன்றி ஆதிதெய்விகமாகிய உருமும் புள்ளரசுமாகத் தம்மைப்பாவிக்கும் ஆரோபிதபாவனையையுடைய மாந்திரிகரது பாவனைநிலைமைதோன்றக் கோளுருமும் புள்ளரசுமனையாரென்றும் அவர்செய்யும் பாவனையே அன்றி மருந்துமணிமந்திரங்களும்அடங்க எல்லாக்கொள்கையினாலு மென்றுங்கூறினார். (௧௭௪)

அன்னையையு மத்தனையும் பிரிந்துநின்னை யடைவாகவுடன்போ
ந்தே னரவாலவாடி, யென்னையுயிர்விட்டகன்றா யானென்செய்கே
னிவ்விடுக்கண் டீர்க்கின்றா ரியாருமில்லை, மன்னியசீர் வணிகர்குல ம
ணியேயானும் வாழேனென் றென்றயர்வாள் மதியினாலே, சென்னி
யிளம் பிறையணிவார் கோயில்வாயிற் றிசைநோக்கித் தொழுதழுதா
ள் செயலொன்றில்லாள்

(இ-ள்) அன்னையையமத்தனையும் பிரிந்து நின்னை உடன்போந்தேன்=
தாயையும் தந்தையையும் பிரிந்து உன்னைச்சார்தலையே பொருளாகக்கருதி
உன்னுடன்வந்தேன், அரவாலவாடிஎன்னையுயிர்விட்டகன்றாயானென்செய
கேன்=அரவுகடித்தலால் வருந்திஇறந்து என்னை நீங்கினாய் இதற்குயான் என்
செய்வேன், இவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாருமில்லை=இத்துன்பத்தை நீக்கு
கின்றவர் ஒருவருமில்லை (அதனால்), மன்னியசீர் வணிகர்குல மணியேயா
னும் வாழேனென்றென்றயர்வாள்=நிலைபெற்ற சிறப்பினையுடைய வணிகர்கு
லத்துக்குத் தலைமையான ஓர்மாணிக்கம் போன்றவனே நானும் உயிர்வாழே
னென்று பலகாற்கூறிவருந்தும் அக்கன்னிகை, மதியினாலே சென்னியிளம்
பிறையணிவார் கோயில்வாயிற் றிசைநோக்கிச் செயலொன்றில்லாள் தொ
ழுது அழுதாள்=தனது புத்தியினாலே சடாமகுடத்தில் இளம்பிறையையணி
ந்தமாணிக்கவண்ணரது திருவாலயத்தின் திசைநோக்கித் தனக்கோர் செய
லற்றவளாய் வணங்கி அழுதாள்—எ-று.

என்றென்ற அடுக்கு, [illegible]பலகாலென்பதை உணர்த்திநின்றது. அயர்
வாள் செயலொன்றில்லாளாய் கைதொழுதாளெனக்கூட்டுக. ஆண்டு உற்றுழி
உதவிசெய்வோர் சிவபிரானென முன்செய்த புண்ணியவசத்தால் துணிந்தன
ளாதலின் மதியினாலென்றார், மதி=ஐயமின்றித் தெளிந்தபுத்தி. (௨௭௫)

அடியாரா மிமையவர்தங் கூட்டமுய்ய வலைகடல்வாய் நஞ்சுண்ட
வமுதேசெங்க, ணெடியானு நான்முகனுங் காணக்கோல நீலவிட
ரவணிந்த நிமலாவெந்த, பொடியான காமனுயி ரிரதிவேண்டப் புரி
ந்தளித்த புண்ணியனே பொங்கர்வாசக், கடியாரு மலர்ச்சோலை மரு
ங்குசூழுங் கவின்மருகற் பெருமானே காவாயென்றும்.

(இ-ள்) அடியாராமிமையவர்தங் கூட்டமுய்யவலைகடல் வாய்நஞ்சு
ண்டவமுதே=உமதடியார்களாகிய பிரமாதிதேவர்கள் பிழைக்க அலைவீசுகின்
றபாற்கடலினிடத்து உதித்தாலகாலவிஷத்தை உண்டருளிய அமுதவடிவரே, செங்க
ணெடியானுநான் முகனுங்காணக்கோல=சிவந்தகண்களையுடைய திருமாலும்
பிரமனுமகாணக்கூடாத திருமேனியை உடையவரே; நீலவிடரவணிந்தநிம
லா=கரியநிறம்பொருந்திய விடத்தையுடையசர்ப்பத்தை ஆபரணமாகத்தரித்த
அழுக்கற்றவரே; வெந்து பொடியான காமனுயிரி ரதிவேண்டப் புரிந்தளித்த

புண்ணியனே=நெற்றிக்கண் நெருப்பால் வெந்து சாம்பரான மன்மதன் உயிரை இரதிதேவி இரப்ப அவள்பிரார்த்தனையை விரும்பிக் கொடுத்தருளிய புண்ணியமூர்த்தியே ; பொங்கர்வாசக்கடியாரு மலர்ச்சோலை மருங்குசூழுங் கலின்மருகற்பெருமானே காவர்யென்றும்=மரகதோடு நிறைந்தவாசனைகமழும் பூஞ்சோலைகள் பக்கமிறஞ்சூழ்ந்த அழகுமிக்க திருமருகலில் எழுந்தருளிய மாணிக்கவண்ணரோ என்னைக்காத்தருள்வீர் என்றும்—எ-று. (௨௭௬)

வந்தடைந்த சிறுமறையோ னுயிர்மேற்சீறி வருங்காலன் பெருங்கால வலயம்போலுஞ், செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலஞ் சிதைந்துருள வுதைத்தருளுஞ் செய்யதாளா, விந்தவிடக்கொடுவேக நீங்குமாறும் யானிடுக்கட்குழிநின்று மேறுமாறு, மந்திமதிக்குழலிவளர் செய்யவேணி யணிமருகற்பெருமானே யருளாயென்றும்.

(இ-ள்.) வந்தடைந்த சிறுமறையோனுயிர் மேற்சீறிவருங்காலன்=தம்மைவந்தடைந்த மறையவர்சிறுவனாகிய மார்க்கண்டேயரது உயிரின்மேல் கவர்தற்பொருட்டுக் கோபித்துவந்த எமனது , பெருங்காலவலயம்போலுஞ் செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலம்=பெரிய காலசக்கரம்போலுஞ் சிவந்தகோபக்கண்ணையும் வெள்ளிய வக்கிரதந்தங்களையு முடைய அவனது கரியஉருவம் , சிதைந்துருள வுதைத்தருளுஞ் செய்யதாளா=அழிந்துநிலத்திற்புரள உதைத்தருளிய சிவந்த திருவடியை யுடையவனே , இந்தவிடக்கொடுவேக நீங்குமாறும் யானிடுக்கட்குழிநின்றுமேறுமாறும் = இந்தவிடத்தினதுஉயிர் நீங்கச்செய்த கொடியவேகமு இவனை நீங்கும் வகையையும் அதனால் இத்துன்பசாகரத்தினின்றும் யான் கரையேறும்வகையையும் , அந்திமதிக்குழலிவளர்செய்ய வேணியணிமருகற் பெருமானேயருளாயென்றும்= மாலைப்பொழுதிற்றோன்றும் இளம்பிறை வளர்கின்ற சிவந்த சடாமுடியையுடைய அழகியதிருமருகலிலெழுந்தருளிய மாணிக்கவண்ணரே அருள்செய்வீராக என்றும்—எ-று.

காலன்தணணிற கருவிழி=வட்டமாய்க் கோபத்தாற்சுழலலில் காலவலையம்போலுமென்றார். காலவலயம்=காலசக்கரம் சிவபிரானதுற்றுழி உதவிசெய்யும் அருட்குணங்களை யுணர்ந்து துதிக்கின்றவள் அவர்செய்த அவ்விதசரிதங்களாகிய நஞ்சமுது செய்தல், கருடன்பகைக்கு அஞ்சிவந்தடைந்த பாம்புகளைத் தரித்தல், இரதிதேவிவேண்ட மதனுக்குயிர் கொடுத்தல், மார்க்கண்டேயர்க்காக மறலியையுதைத்தல், ஆயசரிதங்களைக் கூறிக்காவாயென்றும் அருளாயென்றும் இவ்விரண்டு செய்யுளினுந் துதித்தனளென்று போந்தவாறுணர்க. (௨௭௭)

இத்தன்மை சிவனருளே சிந்தித்தேங்கு மிளங்கொடிபோ லுடங்குமிடை யேழையேத்து, மத்தன்மை யோசையெழுந் தெங்கள்சண்பை யாண்டகையார் கும்பிடவந் தணைகின்றாதம், மெய்த்தன்மை

**விளங்குதிருச் செவியிற்சார மேவுதலுந் திருவுள்ளக் கருணைமேன்மே
ல், வைத்தன்ன மெய்யாவார் மாடுநீடு மாதவத்தோர் சூழவெழுந்
தருளிவந்தார்.**

(இ-ள்) இத்தன்மைசிவனருளாற் சிந்திக்கேங்கும்=இவ்வாறு சிவபிரானது திருவருளையே சிந்தித்து இரங்கிய, இளங்கொடிபோலுடங்கு மிடையேழை=இளமையான கொடிபோலும் துவள்கின்ற இடையையுடைய அக்கன்னிகை, ஏசத்தும் அத்தன்மையோசையெழுந்து=நெருங்கும் அவ்வகையான துதிபோற்செழுந்து, எங்கோன் சண்பையாண்டகையார் கும்பிட்டவந்தணைகின்றார்=மாணிக்கவண்ணரென்கின்ற திருக்கோயிலையடைகின்றவராகிய சீகாழியிலவதரித்த எமது ஆளுடையபிள்ளையாரது, மெய்த்தன்மைவிளங்கு திருச்செவியிற் சாரமேவுதலும்=உண்மைத்தன்மைவிளங்கிய திருச்செவியிற் பொருந்தக் கேட்கவரவும், திருவுள்ளக் கருணைமேன்மேல் வைத்து அன்னமெய்யாவார்=திருவுள்ளக்கருணையை மிகவும் அவளிடத்து வைத்துப் பெட்டையன்னம்போல வருந்திச்சேரும் அவள்பக்கத்து, நீடு மாதவத்தோர்சூழ வெழுந்தருளிவந்தார்=மிகக்குயர்ந்த தவத்தினையுடைய அடியார்கள் புடைசூழ எழுந்தருளிவந்தருளினார்—எ-று. (சுஎஅ)

சிரபுரத்து மறையவனார் சென்றணைந்து சிவபெருமானருள்போ
ற்றிச் சிந்தைநொந்து, பரிவுறுவாள் றனைநோக்கிப் பயப்படேனீ பருவ
ரலு நும்பரிசும் பகர்வாயென்ன, கரமலர்கள் சென்னியின்மேற் குவித்
துக்கொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழிவேந்தர், புரவலனார்
சேவடிக்கீழ் விழுந்து தாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகல
லுற்றாள்.

(இ-ள்) சிரபுரத்து மறையவனார்சென்றணைந்து=சீகாழியிலவதரித்த ஆளுடையபிள்ளையார் அவ்விடத்துச்சென்று நின்றருளி, சிவபெருமானருள் போற்றிச் சிந்தைநொந்து=சிவபிரானது திருவருளைத்துதித்து மனமுருகி; பரிவுறுவாள் றனைநோக்கி=துதிக்கும் அக்கன்னிகையைப்பார்த்து, பயப்படேல் நீபருவரலும் நும்பரிசும் பகர்வாயென்ன=நீபயப்படாதே உனதுதுன்பத்தையும் உனதுவரலாற்றையும் சொல்வாயாகவென்று அருளிச்செய்ய, கரமலர்கள் சென்னியின்மேற்குவித்துக்கொண்டு=கரகமலங்களைச்சிரசின்மேல் அஞ்சலியாகக் கூப்பிக்கொண்டு; கண்ணருவிசொரிந்திழிய=கண்களினின்றுந் துளிக்கின்ற கண்ணீரானது அருவிபோற் சொரிந்து மிகப்பெருக; காழிவேந்தர் புரவலனார் சேவடிக்கீழ்வீழ்ந்து தாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகலலுற்றாள்=சீகாழியிலவதரித்த வேதத்தையுணர்ந்த மறையவர் தலைவராகிய ஆளுடையபிள்ளையாரது சிவந்ததிருவடியின்கீழ் வணங்கித் தாங்கள் வந்தசெய்தியையும் நிகழ்ந்தசெய்தியையுஞ் சொல்லத்தொடங்கினாள்—எ-று.

வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோ னாமனெந்தை மருமகன்மற் றிவனவற்கு மகளிர்நல்லார், விளம்பிடியா ரோரெழுவ ரவரின்மூத்தா ளிவனுக்கென் றுரைசெய்தே யேதிலானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்தபின்னு மோரொருவராகவெனை யொழிய வீந்தார், தளர்ந்தழியு மிவனுக்காத் தகவுசெய்தங் கவரைமறைத் திவனையே சார்ந்துபோந்தேன்

(இ-ள்.) எந்தை வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன்தாமன்=எனது பிதா வளம்பொருந்திய சோலைசூழ்ந்த வைப்பூருக்கு அதிபதியாகிய தாமனென்பவன், அவற்கு மற்றிவன் மருமகன்=விடந்தீண்டி இறந்த இவன் அவனுக்கு மருகன், இளம் பிடியார் நல்லமகளிர் ஓரெழுவர்=இளமைபொருந்திய பெண்யானைபோலும் நல்லபுத்திரிகள் அவனுக்கு எழுபேர், அவரின் மூத்தாள் இவனுக்கென்றுரைசெய்து=அவருள் மூத்த புத்திரியை இவனுக்கென்று மணஞ்செய்ய நிச்சயித்து, ஏதிலானுக்கு உளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்தபின்னும்=அயலானொருவன் மனமகிழ அவனையாற்பொருளுவாங்கிக்கொண்டு அப்புத்திரியை மணஞ்செய்து கொடுத்தபின்னும், எனையொழியவோரொருவராக ஈந்தார்=என்னையன்றி மற்றைய வெவ்வொருபுத்திரிகளாகப் பின்னும் பிறர்க்குப்பொருள் வாங்கிக்கொண்டு கொடுத்தான், தளர்ந்தழியுமிவனுக்காத் தகவுசெய்து= மனநொந்து வருந்தும் இவன்பொருட்டு நடுவுநிலைமை கருதி, அங்கவரை மறைத்து இவனையே சார்ந்து போந்தேன்=அவ்விடத்து அவரை மறைத்து இவனையே துணையாக அடைந்து வந்தேன்—எ-று. (சஅ0)

மற்றிவனும் வாளரவந் தீண்டமாண்டா னறிகடலிற் கலங்கவிழ்ந்தார் போலநின்றேன், சுற்றத்தா ரொன்றிவந்து தோன்றியென்பாற் றுயரெலா நீங்கவருள் செய்தீரென்கக் கற்றவர்கள் தொழுதேத்துங் காழிவேந்தர் கருணையினாற் காரிகையாளுக்குநல்கப், பற்றிவா ளரவுவிடந் தீருமாறு பணைமருகற் பெருமானைப் பாடலுற்றார்

(இ-ள்.) மற்றிவனும் வாளரவந் தீண்டமாண்டான்=எனக்கு மணமகனாகவந்த இவனும் ஒளிபொருந்திய பாம்பு கடிக்க இறந்தான், அறிகடலிற் கலங்கவிழ்ந்தார்போல நின்றேன்=மறிந்துவரும் அலைகளையுடைய கடலில் மரக்கலங் கவிழப்பெற்ற வணிகர்போல இடருற்றுநின்றேன், சுற்றத்தாரென வந்து தோன்றியென்பாற் றுயரெலாநீங்கவருள் செய்தீரென்ன= என துறவினர்போல என்கண்முன்வந்து காட்சிகொடுத்து என்னிடத்துள்ள துன்பங்களெல்லாம் நீங்க அருள்செய்தீரென்று கூற, கற்றவர்கள் தொழுதேத்துங் காழிவேந்தர்=அறிவுநூலுணர்ந்த பெரியோர்கள் வணங்கித்துதிக்கும் சீகாழித்தலைவராகிய ஆளுடைய பிள்ளையார்; கருணையினாற் காரிகையாளுக்கு நல்க=தமது காருண்யத்தால் அக்கன்னிகைக்கு விடந்தீண்டி இறந்தவணி



வைப்பூரென்னும் பதியிலவசித்த தாமன்செட்டியார் உடன்பிறந்தாள் பிள்ளை மஷ்டி யார் எ-வது கன்னிகையாரும் மதுரைக்குச்செலவழி திருமருகலில் செட்டியார் உடன்பிறந்தாள் பிள்ளை விஷந்தீண்டியிறக்கக் கன்னிகையார் துக்கித்தபோது திருஞானசம்பந்தர் கன்னிகைக்கு உபகாரத்தைச் செய்தல்.

கன்மகளை விவாகஞ்செய்துகொடுக்க; பற்றியவாளரவு விடந்தீருமாறு பணை மருகற்பெருமானைப் பாடலுற்றார்=அவன் றலைக்கொண்ட ஒளியையுடைய சற்பத்தினிடம் அவனினின்றும் நீங்கும்வண்ணம் வயல்சூழ்ந்த திருமருகலி னகண் எழுந்தருளிய மாணிக்கவண்ணரைப் பாடத்தொடங்கினார்—எ-று.

சடையானை யெவ்வுயிர்க்குந் தாயானைச் சங்கரனைச் சசிகண்ட மௌலியானை, விடையானை வேதியனை வெண்ணீற்றானை விரவாதார் புரமூன்று மெரியச்செற்ற, படையானைப் பங்கயத்து மேவினானும் பாம்பணையிற் றுயின்றானும் பரவுங்கோல, முடையானை யுடையானே தகுமோவிந்த வொள்ளிழையா ளுண்மெலிவென் றெடுத்துப் பாட.

(இ-ள்) சடையானை யெவ்வுயிர்க்குந் தாயானை=சடாமகுடத்தையுள்ளவரை எவ்வுயிர்க்குந்தாயாயுள்ளவரை, சங்கரனைச் சசிகண்ட மௌலியானை=ஆன்மாக்களுக்கு சுகத்தைச்செய்பவரைச் சந்திரகண்டத்தைத்தரித்த திருமுடியையுடையவரை, விடையானை வேதியனை வெண்ணீற்றானை=இடபத்தை வாகனமாக வுடையவரை வேதத்துக்குரியவரை வெள்ளிய விபூதியை யணிந்தவரை, விரவாதார் புரமூன்று மெரியச்செற்ற படையானை=பகைவர்களாகிய அசுரர்களது முப்புரங்களையும் எரியச்செய்த திருமாலாகிய அஸ்திரத்தையுள்ளவரை, பங்கயத்து மேவினானும் பாம்பணையிற்றுயின்றவனும் பரவுங்கோலமுடையானை=தாமரைமலரின்கண் வாழும் பிரமனும் அனந்தசயனத்தில் துயில்கின்ற திருமாலும் வணங்குந் திருக்கோலமுடையவரை, உடையானே யிந்தவொள்ளிழையா ளுண்மெலிவு தகுமோ வென்றெடுத்துப்பாட=என்னையாளாக உடையவனே இந்த ஒளிபொருந்திய ஆபரணத்தையுடைய கன்னிகையானவள் உள்ளம் வருந்துதல் தகுமோவென்று இறுதியில் வைத்துப் பாடியருள—எ-று. (௪௮௨)

## திருமருகல்-விடந்தீர்த்த திருப்பதிகம் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருக
லுடையாய் தகுமோ விவளுண் மெலிவே. (௧)

சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா வெனுமால்
கொந்தார் குவளை குலவும் மருக
லெந்தாய் தகுமோ விவளே சறவே. (௨)

அறையார் கழலு மழலவா யரவும
பிறையாா சடையு முடையாய பெரிய
மறையார் மருகன மகிழவா யிவளை
யிறையாா வளைகொண டெழிலவவ வினையே (௩)

ஒலிநீா சடையிற கரநதா யுலகம
பலிநீ திரிவாய பழியில புகழாய
மலிநீா மருகன மகிழவா யிவளை
மெலிநீா மையளாக கவுமவேணா டினையே (௪)

துணிநீ லவணணம முகிறேறனறி யனன
மணிநீ லகணட முடையாய மருநத
கணிநீ லவணடாா குழலா ளிவடன
ணணிநீ லவொணகண ணயாவாக கினையே. (௫)

மலரும பாவா படுவாய சடைமேல
மலரும பிறையொன றுடையாய மருநத
புலருந தனையுந துயிலாள புடைபோநத
தலரும படுமோ வடியா ளிவளே (௬)

வழுவாள பெருமான கழலவா ழகவெனறு
வெழுவா ளினைவா ளிரவும பகலு
மழுவா ளுடையாய மருகற பெருமான
றொழுவா ளிவளைத துயராக கினையே (௭)

இலஙகைக கிறைவன விலஙக லெடுபபத
துலஙகவி ரலூனற லுநதோன றலுடைய
வலஙகொள மதிலசூழ மருகற பெருமா
னலஙகல லிவளை யலராக கினையே. (௮)

எரியாா சடையும மடியும மிருவா
தெரியா ததோாதிதத திரளா யவனே
மரியாா பிரியா மருகற பெருமா
னரியா ளிவளை யயாவாக கினையே (௯)

**அறிவில சமணும மலாசாக கியருந**
**நெறியல லனசெய் தனாநின் றுழலவாா**
**மறியேநது கையாய் மருகற பெருமா**
**னெறியாா குழலி நிறைநீக் கினையே.** (௰)



செட்டியாருக்கும் கன்னிகையாருக்கும் திருஞானசம்பந்தர் விவாகஞ் செய்வித்தல்.

வய்ஞா னமல்லா மருகற் பெருமா
னையாஞா னமுணர்ந் தடியுள் குதலா
வியன்ஞா னசம்பந் தன்பா டல்வல்லா
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மாணிக்கவண்ணேசர்.

தேவியார் - வண்டுவார்குழலியம்மை.

---

பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றானைச்சூழ்ந்த பொருவிற்றிருத் தொண்டர்குழாம் பொலியவார்ப்ப, வங்கையினை யுச்சியின்மேற்குவித் துக்கொண்டங் கருட் காழிப் பிள்ளையா ரடியில்வீழ்ந்த, நங்கையவ டனைநயந்த நம்பியோடு நானிலத்தி லின்புற்று வாழும்வண்ணம், மங்குறவழ் சோலைமலி புகலிவேந்தர் மணம்புணரும் பெருவாழ்வு வகுத்து விட்டார்.

(இ-ள்) பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றானை = தலைமேற்கொண்ட விடம் நீங்கி அவ்வணிகமகன் உயிர்பெற்று எழுந்து நின்றானை, சூழ்ந்த பொருவில் திருத்தொண்டர்குழாம் பொலியவார்ப்ப = பிள்ளையாரைப் பக்கலிற் சூழ்ந்த ஒப்பில்லாத அடியார் திருக்கூட்டங்கள் ஒலிபெருக ஆரவென ஆரவாரிக்குங்கால், அங்கு அங்கையினை உச்சியின்மேற் குவித்துக்கொண்டு = அவ்விடத்து அழகிய கையைச்சிரசின்மேல் கூப்பிக்கொண்டு, அருட் காழிப்பிள்ளையார் அடியில் வீழ்ந்த நங்கை அவள்தனை = காருண்ணிய ரூபியான அருளுடைய பிள்ளையாரது திருவடியில் வீழ்ந்து வணங்கிய அவ்வணிகர் குலப்பெண்ணை, நயந்த நம்பியோடு நானிலத்தின் இன்புற்று வாழும் வண்ணம் = (அவளால்) விரும்பப்பட்ட அவ்வணிகமகனோடு இவ்வகன்ற நிலவுலகத்தின்கண் இன்பமடைந்து வாழும்படி, மங்குல்தவழ் சோலைமலி புகலிவேந்தர் = மேகங்கள் தவழும் சோலைகள் சூழ்ந்த சீகாழிப்பதித் தலைவராகிய அருளுடைய பிள்ளையார், மணம் புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்டார் = கலியாணஞ்செய்து கூடி வாழும் பெரிய இல்லறநெறியை அவர்க்கு அருளிச்செய்து ஊர்க்குச்செல்லவிடுத்தார் —எ-று. (௬௮௪)

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமருநாளின் மருகனக ரினில்வந்து வலியபாசஞ், செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்டமீண்டுஞ் செங்காட்டங் குடியிலெழுந் தருளவேண்டிப், பற்றியெழுங் காதன்மிக மேன்மேற்சென்று பரமனார் திறத்துன்னிய பாங்கரெங்குஞ், சுற்றுமருந் தவரோடுங் கோயிலெய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான்புக்கார்.

(இ-ள்.) மற்றவர்க்கு விடைகொடுத்தங்கமருநாளில் = (மணம்முடித்துக்கொள்ளும்படி தங்களூர்க்குச் செல்ல) அவ்விருவர்க்கும் அநுமதிகொடுத்துத் திருப்பதியின்கண் எழுந்தருளி யிருக்குங்காலத்தில்; மருகல் நகரினில் வந்து வலியபாசஞ்செற்ற புகழ்ச்சிறுத் தொண்டர் வேண்ட = திருமருகல் நகரின்கட் சென்று கொடிய அஞ்ஞானத்தைக்கெடுத்த புகழினையுடைய சிறுத்தொண்ட நாயனார் குறை இரப்ப, மீண்டுஞ்செங்காட்டங்குடியி லெழுந்தருளவேண்டி = பிள்ளையார் மீளவுந்திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருளும்படி விரும்புற்று, மேன்மேற் பற்றிப் பெருகு காதல்மிக்குச்சென்று = மேலும்மேலுந்தொடர்ந்தெழுகின்ற பெருவிருப்பானது அதிகரிக்கச் சென்றருளி, பரமனார் திறத்துன்னிய பாங்கரெங்குஞ்சூழ்ந்து மருந்தவரோடுங் கோயிலெய்தி = மாணிக்கவண்ணரது திருவருளின் பகுதியை எண்ணி எப்பக்கத்துஞ்சூழ்ந்த அடியார் திருக்கூட்டத்தோடுந் திருக்கோயிலை அடைந்து, சூடாமழுவாண்டவர் பாதந்தொழுவான் புக்கார் = ஒளிபொருந்திய மழுப்படையை ஏந்திய மாணிக்கவண்ணரது திருவடிகளை வணங்கும்படி ஆலயத்துட் புகுந்தருளினார்—எ-று.

புக்கிறைஞ்சி யெதிர்நின்று போற்றுகின்றார் பொங்குகின்ற நதிப்புனலும் பிறையுஞ்சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற்றர் தந்த திருமேனி யொருபாகம் பசுமையாக, மைக்குலவு கண்டத்தார் மருகற்கோயில் மன்னுநிலை மனங்கொண்டு வணங்குவார்முன், கைக்கனலார் கணபதீச்சரத்தின்மேவுங் காட்சிகொடுத் தருளுவான் காட்டக் கண்டார்

(இ-ள்.) புக்கிறைஞ்சி யெதிர்நின்று போற்றுகின்றார் = புகுந்து வணங்கித் திருமுன்னின்று துதிக்கும் ஆளுடையபிள்ளையார், பொங்குகின்ற நதிப்புனலும்பிறையுஞ்சேர்ந்த = பொங்குகின்ற அலைகளையுடைய கங்கையும் இளம்பிறையுந்தங்கிய, செக்கர்முடிச் சடைமவுலிவெண்ணீற்றர் தம் = செவ்வானம்போலும் சடாமுடியையும் வெள்ளிய விபூதியையும் உடைய மாணிக்கவண்ணரது திருமேனி யொருபாகம் பசுமையாக = திருமேனியிலொருபாதி பசியவண்ணமாக, மைக்குலவு கண்டத்தார் மருகற்கோயில் மன்னுநிலை மனங்கொண்டு வணங்குவார்முன் = நீலகண்டத்தையுடைய அச்சிவபிரானார் திருமருகலின்கண் உள்ள ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் நிலைமையைத் திருவுள்ளத்தில் கருதிவணங்கும் பிள்ளையார்முன்; கைக்கனலார் கணபதீச்சரத்தின்மேவுங் காட்சிகொடுத்தருளுவான் காட்டக்கண்டார் = திருக்கரத்தில் அக்கினியை ஏந்திய அம்மாணிக்கவண்ணர் தாம்கணபதீச்சரத்தின்கண் எழுந்தருளிய திருக்கோலத்தைக் கொடுத்தருளும்படி தரிசிப்பிக்க இங்கு தரிசித்தனர்—எ-று. (௪௮௫)

வேறு.

மருகலமாநது நிறைநதகோல மலகுசெஙகாட்டங குடியின்மன்னிய
பெருகுகணபதி யீசசரததா பீடுடைககோலமே யாகிததோனற
வுருகியகாதலு மீதுபொஙக வுலகாமுனகொளளு முணாவுநீட
வருவிகணவாாவுறப பாடலுறறா ரஙகமுமவேதமு மெனறெடுததது.

(இள.) மருகலமாநது நிறைநதகோலம=திருமருகலின்கண விரும்பி எழுநதருளிய திருககோலம, மலநதசெஙகாடடஙகுடியினமனனி=செலவமிகக திருசசெஙகாடடஙகுடியில நிலைபெறறு, பெருகுகணபதி யீசசரததா=பீடுடைககோலமே யாகிததோனற=விளஙகுங கணபதீசசரமெனனும திருவாலயததில எழுநதருளிய கணபதீசரத்து பெருமைபொருநதிய திருககோலமேயாயப புலபபட, உருகிய காதலுமீதுபொஙக=நெகநதுருகுகினற அன்பும் உளளே நிறைநது மேலேவழிய, உலகாமுனகொளளுமுணாவுநீட=உலகின கணணுளளாரிடத்துககொணட காருணியவுணாவுமமேமபட, அருவிகணவாா வறபபாடலுறறா அஙகமும வேதமுமெனறெடுதது = திருககணகளினினறும ஆனநத அருவிசொரியுமபடி பாடியருளினா அஙகமும வேதமுமென முதலி லடியெடுததது—எ-று

பதிகம பாடுதறகு உலகாமேல வைதத கருணை காரணமாதலின, உலகாமுன கொளளுமுணாவு நீட எனறா

உணாவும எனகிற எசசவுமமை விகாரததாறறொககது. (சஅகூ)

திருசசெஙகாடடஙகுடியும - திருமருகலும விறைவுரை

பண - நடடபாடை

திருசசிறறமபலம

அஙகமுமவேதமு மோதுநாவ ரநதணாநாளு மடிபரவ
மஙகுனமதிதவழ மாடவீதி மருகலிலாவிய மைநதசொலலாய
செஙகயலாாபுனற செலவமலகு சீாகொளசெஙகாடடங குடியதனுட
கஙகுலவிளஙகெரி யெலலியாடுங கணபதியீசசரங காமுறவே.

நாலுகலைககமு சோஙகுகாழி ஞானசமபநத னலநதிகழு
மாலினமதிதவழ மாடமோஙகு மருகலினமறறதன மேனமொழிந்த
சேலுஙகயலுந திளைததகணனூா சீாகொளசெஙகாடடங குடியதனுட்
சூலமவலலானகழ லோதுபாடல சொலலவலலாாவினையிலலையாமே.

திருசசிறறமபலம.

கண்டடிபோற்றி விளவிப்பாடிக் கணபதியீச்சரங் காதலித்த, வண்டார்பிரானை வணங்கிவைகு மப்பதியிற்சில நாள்கள் போற்றித், தொண்டருடனருள் பெற்றுமற்றத் தொல்லைத்திருப்பதி யெல்லைநீங்கிப், புண்டரிகத்தடஞ் சூழ்பழனப் பூம்புகலூர்தொழப் போதுகின்றார்.

(இ-ள்) கண்டடிபோற்றி விளவிப்பாடி = அக்கணபதீச்சரத்து திருவடிகளைப் போற்றி அத்திருக்கோலத்தைத் தரிசித்து, (மங்குனமதி தவழு மாடவீதி மருகலிலாவிய மைந்த கணபதீச்சரங்காமுறவுசொல்லாயென) விளவித் திருப்பதிகமோதி, கணபதீச்சரங் காதலித்த வண்டார்பிரானை வணங்கி = அக்கணபதீச்சரமென்னுந் திருவாலயத்தை விரும்பிய சிவபிரானை வணங்கி, வைகு மப்பதியிற் சில நாள்கள் போற்றி = தாம் எழுந்தருளியிருக்கும் அத்திருமருகற்பதியில் சிலகாலம் அம்மாணிக்கவண்ணரைத் துதித்து, தொண்டருடனருள் பெற்றுமற்றத் தொல்லைத் திருப்பதி யெல்லைநீங்கி = அடியார்திருக்கூட்டத்துடன் அச்சிவபிரானது திருவருளைப்பெற்று அப்பழைய திருப்பதியின் எல்லையைவிட்டு நீங்கி, புண்டரிகத்தடஞ் சூழ் பழனப் பூம்புகலூர் தொழப்போதுகின்றார் = தாமரைப்பொய்கைகள் சூழ்ந்த வயல்களையுடைய பொலிவுபொருந்திய திருப்புகலூர் என்னும் திருப்பதியை வணங்கச்செல்வாராயினார்—எ-று. (௪௮௭)

சீரின்மலிந்த சிறப்பின்மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்ல, நல்வேரிநறுந்தொங்கன் மற்றவரும் விடையருள்பெற்று மீண்டபின்பு, நீரின்மலிந்த சடையார்மேவி நிகழும் பதிகள் பலபணிந்து, பாரின்மலிந்து நிறைந்தசெல்வம் பயில்புகலூர்நகர்ப் பாங்கணைந்தார்.

(இ-ள்) சீரின்மலிந்த சிறப்பின்மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்ல = புகழ்மிக்க சிறப்பமைந்த சிறுத்தொண்டநாயனார் நேசத்தினோடு தம்முடன்வர, நல்வேரி நறுந்தொங்கன் மற்றவரும் = நல்ல தேன் பொருந்திய மணங்கமழும் மாலையையுடைய அத்திருத்தொண்டநாயனாரும், விடையருள்பெற்று மீண்டபின்பு = ஊர்க்குச்செல்லும்படி பிள்ளையார் விடைகொடுக்கப்பெற்றுத் தம்மூர்க்குச் சென்றபின்பு, நீரின்மலிந்த சடையார்மேவி நிகழும்பதிகள் பலபணிந்து = கங்கைநீரால் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபிரான் எழுந்தருளிய பலதிருப்பதிகளையும் வணங்கி, பாரின்மலிந்து நிறைந்த செல்வம்பயில் புகலூர் நகர்பாங்கணைந்தார் = நிலவுலகத்தில் மிகுந்து நிறைந்த செல்வம்பொருந்திய திருப்புகலூரென்னுந் திருப்பதியின் மருங்கு அடைந்தருளினார்—எ-று. (௪௮௮)

திருப்புகலூர்த்திருத் தொண்டரோடுஞ் செம்மைமுருகனார் மெய்ம்மகிழ்ந்து, விருப்பொடு சென்றெதிர் கொள்ளவந்து வேதமுதல்வர்

தங்கோயிலெய்தி, பொருப்புறழ்கோபுரத் துட்புகுந்து பூமலிமுன் றில் புடைவலங்கொண், டொருப்படு சிந்தையொ டுள்ளணைந்தா ரோதாதுஞானமெலாமுணர்ந்தார்.

(இ-ள்) திருப்புகலூர்த் திருத்தொண்டரோடுஞ் செம்மைமுருகனார் = திருப்புகலூரிலவசிக்குந் திருஅடியார்கூட்டங்களோடு ஞான ஒழுக்கத்தினை யுடைய திருமுருகநாயனார், மெய்மகிழ்ந்த விருப்பொடுசென்றெதிர்கொள்ள வந்து = மெய்மை மிகுந்த விருப்பத்தொடுந் தம்மையடைந்து எதிர்கொள்ள அங்கெழுந்தருளி, வேதமுதல்வர்தங் கோயிலெய்தி = வேதமுதல்வராகிய அக்கினீசர் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலை அடைந்தருளி, பொருப்புறழ் கோபுரத்துட்புகுந்து பூமலிமுன்றில் புடைவலங்கொண்டு = மலையையொத்த திருக்கோபுரத்தினுள்ளே புகுந்து பொலிவுமிக்க திருமுற்றத்தைப் பிரதட்சணஞ்செய்து, ஓதாதுஞானமெலாமுணர்ந்தார் ஒருப்படுசிந்தையோடு உள்ளணைந்தார் = ஓதாது எல்லா ஞானங்களையும் உணர்ந்த ஆளுடையபிள்ளையார் ஒன்றுபட்டமனதோடு திருக்கோயிலுள் அடைந்தருளினார்—எ-று.

ஞானமெலாமென்றது மேற்கூறிய பரஞானமுதல நான்கு மென்பது போந்தவாறறிக. (௪௮௯)

புக்கெதிர்தாழ்ந்து விழுந்தெழுந்து பூம்புகலூர்மன்னு புண்ணிய ரை, நெக்குருகுஞ்சிந்தை யன்புபொங்க நிறைமலர்க்கண்ணீ ரருவிசெய் ய, மிக்கதமிழ்த்தொடை மாலைசாத்தி மேவியவேழிசை பாடிப்போ ந்து, திக்குநிறைசீர் முருகர்முன்பு செல்லவவர்மடஞ் சென்றுபுக்கார்.

(இ-ள்) பூம்புகலூர்மன்னு புண்ணியரைப்புக்கெதிர்தாழ்ந்து விழுந்தெ ழுந்து = பொலிவுபொருந்திய திருப்புகலூரினகண் ணெழுந்தருளிய புண்ணி யவடிவரான அக்கினீசரை ஆலயத்திற்புகுந்து திருமுன்வணங்கிப்பணிந்தெ ழுந்து, நெக்குருகுஞ்சிந்தை யன்புபொங்கநிறைமலர்க்கண்ணீரருவிசெய்ய = கசிந்துருகும் இதயத்து அன்புமேலெழநிறைந்ததாமரைமலர்போலும் திருக்க ண்கள் ஆனந்தபாஷ்பமாகிய அருவியைப்பெருக்க, மிக்கதமிழ்த்தொடைமா லைசாத்தி மேவியவேழிசைபாடிப்போந்து = இனிமை மிகுந்த திருப்பதிகமாலை யைச்சாத்தி அதனிடத்துப்பொருந்திய ஏழிசையையும்பாடி அவ்வாலயத்தினி ன்றும் எழுந்தருளி, திக்குநிறை சீர்முருகர் முன்புசெல்ல அவர் மடஞ்சென் றுபுக்கார் = திக்குகளெட்டினும் நிறைந்த சீர்த்தியையுடைய திருமுருகநாய னார் தம்முன்னே அழைத்துக்கொண்டுசெல்ல அவரது திருமடத்தைச்சென்று புக்கருளினார்—எ-று. (௪௯௦)

---

திருப்புகலூர்-பண்-செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

வாழ்ந்தநாளும் மினிவாழுநாளும் மிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானையேத்தா விரகிலிகாள்
போழ்ந்ததிங்கட் புரிசடையினான்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ளம் முடையீர்களுங்க டுயர்தீருமே.

புந்தியார்ந்த பெரியோர்கள்தம் புகலூர்தனுள்
வெந்தசாம்பற் பொடிப்பூசவல்லவ் விடையூர்தியை
யந்தமில்லா வனலாடலானை யணிஞானசம
பந்தன்சொன்ன தமிழ்பாடியாடக் கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

ஆங்கவர் போற்றுஞ் சிறப்பினமேவி யப்பதிதன்னி லமருநாளி ல, வாங்குமலைச்சிலை யார்மகிழ்ந்த வர்த்தமானீச்சரர் தாள்வணங்கி, யோங்கியவன்பின் முருகனார்தம் முயர்திருத் தொண்டு சிறப்பித்தோ ங்கும், பாங்குடை வண்டமிழ் பாடிநாளும் பரமர்தம்பாதம் பணிந்தி ருந்தார்.

(இ-ள்.) ஆங்கவர்போற்றுஞ் சிறப்பினமேவி=அத்திருமடத்தில் திருமு ருகநாயனார் வழிபடுஞ்சிறப்பாலவர்சுஞ்செய்து, அப்பதிதன்னிலமருநாளில= அத்திருப்புகலூரென்னுந் திருப்பதியிலெழுந்தருளி யிருக்குநாளில், வாங்கும லைச்சிலையார் மகிழ்ந்த வர்த்தமானீச்சரர் தாள்வணங்கி=வளைந்தமேருவில்லு டையராய விரும்பிய வர்த்தமானீச்சரத்தையுடைய சிவபிரானது திருவடிக ளைவணங்கி, ஓங்கியவன்பின் முருகனார்தம்முயர்திருத்தொண்டுசிறப்பித்து= மிக்க அன்பினையுடைய திருமுருகநாயனாரது உயர்ந்த திருத்தொண்டினை (முருகன் முப்போதுஞ்செய் முடிமேல வாசமாமலருடையார்) எனச், சிறப் பித்து, ஓங்கும்பாங்குடை வண்டமிழ்பாடி நாளும்பரமர்தம்பாதம் பணிந் திருந்தார்=உயர்ந்த குணம் அமைந்த வினிய தமிழ்ப்பதிகத்தைப்பாடி நாடோ றும் அந்தவர்த்தமானீச்சரரது திருவடிகளைவணங்கி ஆங்கு எழுந்தருளியிருந் தார்—எ-று. (சகக)

திருப்புகலூர் - பண் பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மூசனேற்றமர்கடவு ளின்னமுதெந்தை யெம்பெருமான்
பூசுமாசில் வெண்ணீறர் பொலிவுடைப் பூம் புகலூரின்
மூசுவண் டறைகொன்றை முருகன்முப்போது செய்முடிமேல்
வாசமலருடையார் வர்த்தமானீச் சரத்தாரே.

பொங்குதண் புனல்சூழ்ந்து போதணிபொழிற் புகலூரின்
மங்குன்மா மதிதவழும் வர்த்தமானீச் சரத்தாரைத்
தங்குசீர்த் தமிழ்ஞான சம்பந்தனறண் டமிழ்பத்து
மெங்குமேத்த வல்லார்க ளெய்துவரிமை யவருலகே.

திருச்சிற்றம்பலம்.

மற்றத்திருப்பதி வைகுநாளில் வாக்கின்பெருவிறன் மன்னர்தாம், புற்றிடங்கொண்டாரை வந்திறைஞ்சிப் பொன்மதிலாரூர் புகழ்ந்துபோற்றிச், சிற்றிடைப் பொற்கொடி பங்கர்தங்குந் திருப்புகலூர் தொழச் சிந்தைசெய்து, கொற்றவனாரருள் பெற்றதொண்டர் குழாத்துடனவ்வூர் குறுகவந்தார்.

(இ-ள்.) அந்தத்திருப்பதிவைகுநாளில்=அந்தத்திருப்புகலூரில் ஆளுடையபிள்ளையார் எழுந்தருளியிருக்கும் நாளில், பெருவிறல் வாக்கின்மன்னர்தாம்= மேம்பட்ட திருவாக்கின் வன்மையையுடைய வாகீசமுனிவரும், புற்றிடங்கொண்டாரைவந்திறைஞ்சி= திருவாரூரிலெழுந்தருளிய வன்மீகநாதரை அடைந்துவணங்கி, பொன்மதிலாரூர் புகழ்ந்துபோற்றி=பொன்னாலாகிய திருமதில்சூழ்ந்த திருவாரூரைப்புகழ்ந்து துதித்து, சிற்றிடைப்பொற்கொடி பங்கர் தங்குந்திருப்புகலூர் தொழச்சிந்தைசெய்து=சிற்றிடையையும் பொன்னாலாகிய வளையலையும் உடைய உமாதேவிபாகரான அக்கினீசரெழுந்தருளிய திருப்புகலூரைவணங்கத் தந்திருவுள்ளத்து நினைத்து, கொற்றவனாரருள்பெற்ற தொண்டர்குழாத்துடனவ்வூர்குறுகவந்தார்=தியாகேசரது திருவருளைப் பெற்ற அடியார் திருக்கூட்டத்தோடு அத்திருப்பதியை அணித்தாகவந்தருளினார்—எ-று. (௪௧௨)

நாவுக்கரசரெழுந்தருளு நல்லதிருவார்த்தை கேட்டபோதே, சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞானசம்பந்தர் சிந்தையன்பு, மேவுற்றகாதன் மிகப்பெருக விரைந்தெதிர்கொள்ளமெய் யன்பரோடும், பூவிற்பொலிபொய்கை சூழ்புகலூர்ப் புறம்பணையெல்லை கடந்துபோந்தார்.

(இ-ள்.) நாவுக்கரசரெழுந்தருளு நல்லதிருவார்த்தை கேட்டபோதே= திருநாவுக்கரசர் எழுந்தருளியநல்லமங்கலமொழியைக் கேட்டமாத்திரத்தில், சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞானசம்பந்தர்=இடபத்திலெழுந்தருளுகின்ற சிவபெருமானது திருமகனாராகிய ஆளுடையபிள்ளையார், சிந்தை அன்புமேவுற்ற காதல்மிகப்பெருக=தமது திருவுள்ளத்தில் அன்பாலாய பெருவிருப்பு மிகவும்பெருக, மெய்யன்பரோடும் விரைந்தெதிர்கொள்ள=மெய்யடியார்திருக்கூட்டத்தோடு விரைவாயெதிர்கொள்ளும்பொருட்டு; பூவிற்பொலிபொய்கைசூழ் புகலூர்ப் புறம்பணையெல்லைகடந்து போந்தார்=மலர்கணிறைந்த பொய்கை சூழ்ந்த திருப்புகலூரின் புறம்பிலிருக்கின்ற திருவெல்லையைக்கடந்து சென்றருளினார்—எ-று. (௪௧௩)

அங்கணராரூர் வணங்கிப்போந்தவரசுமெதிர்வந் தணையும்வாசப், பொங்குபுனற்றண் புகலிவந்த பூசுரசிங்கமும் பொற்பினெய்தித், தங்களிலன்பின் முறைமையாலே தாழ்ந்துவணங்கித் தனித்தனியே, மங்கலமாகிய நல்வரவின் வாய்மைவிளம்பி மகிழும்போது.

(இ-ள்.) அங்கணரரூரை வணங்கிப் போந்த அரசு மெதிர்வந்தணைய = சிறந்த காருண்யத்தையுடைய புற்றிடங்கொண்டார் எழுந்தருளிய திருவாரூரைத் தொழுது எழுந்தருளிய ஆண்ட அரசும் எதிரே வந்து அடைந்தருள, வாசப் பொங்குபுனற் றண்புகலி வந்தபூசுரர் சிங்கமும் பொற்பினெய்தி = வாசனை பொருந்திய நீர்வளம்மிக்க குளிர்ந்த சீகாழியில் அவதரித்த மறையவர் தலைவராகிய ஆளுடையபிள்ளையாரும் பொலிவாலெதிர்கொண்டு, தங்களில் அன்பின் முறைமையாலே தனித்தனியே தாழ்ந்து வணங்கி = ஒருவர்க்கொருவர் தம்முள்ளுதித்த அன்பின்வழித் தனித்தனியே நிலமுற வணங்கி, மங்கலமாகிய நல்வரவின் வாய்மை விளம்பி மகிழும்போது = சுபகரமாகிய நல்வரவினுண்மையை ஒருவரை ஒருவர் வினவி மகிழ்ந்தருளுங்காலத்து—எ-று. (௪௬௪)

மெய்த்திருஞானசம் பந்தர்வாக்கின் வேந்தரைநோக்கி விருப்பி
னாலே, யப்பரையிங்குக் காணப்பெறும்பே றருளுடையோம்யாமு மந்த
ணாரூ, ரெப்பரிசாற்றொழு துய்ந்ததென்று வினவிட வீறில் பெருந்தவ
த்தோர், செப்பியவண்டமிழ் மாலையாலே திருவாதிரைநிகழ் செல்வ
ஞ்சொன்னார்.

(இ-ள்.) மெய்த்திருஞானசம்பந்தர் = உண்மைநிறைந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார், வாக்கின்வேந்தரை விருப்பினால் நோக்கி = திருநாவுக்கரசரை விருப்பால் பார்த்து, அப்பரையிங்குக் காணப்பெறும்பேறருளுடையோம் = அப்பராகிய உம்மை இவ்விடத்தில் அடையப்பெறும் பெரியதிருவருளை யாம் உடையோம், அந்தணாரூர் எப்பரிசால் தொழுதுய்ந்ததென்று வினவிட = அழகிய தடத்தையுடைய திருவாரூரை எத்தன்மையால் வணங்கி உய்ந்தருளியதென்று வினவ, ஈறில்பெருந்தவத்தோர் செப்பியவண்டமிழ்மாலையாலே திருவாதிரைநிகழ் செல்வஞ்சொன்னார் = அழிவில்லாத பெரியதவத்தினையுடைய ஆண்டஅரசும் தாம்பொழிந்தருளிய "முத்துநற்றாமமென்னும்" திருப்பதிகத்தால் திருவாதிரையில் நிகழ்ந்த சிறப்பினைத் திருவாய்மலர்ந்தருளினார்—எ-று.

அப்பரை என்பது எம்பியை ஈங்குப்பெற்றேன் என்றாற்போல முன்னிலைப்படர்க்கையாற் கூறப்படுதலின் இடவழுவமைதி. (௪௬௫)

அரசருளிச்செய்த வாய்மைகேட்ட வப்பொழுதேயருண் ஞான
முண்ட, சிரபுரவேந்தருஞ் சிந்தையின்கட் டென்றிருவாரூர் வணங்
குதற்கு, விரவியகாதலிற் சென்றுபோற்றி மீண்டுமவ் வந்தாமுடன்
மேவுவன்னென, றுரவுக்கடற்கன் மிதப்பின்வந்தார்க் குரைத்துடம்பாடு
கொண்டொல்லைப்போந்தார்.

(இ-ள்.) அரசு அருளிச்செய்த வாய்மைகேட்ட அப்பொழுதே = ஆண்ட அரசு அருளிச்செய்த திருப்பதிக உண்மையைக்கேட்ட அக்காலத்தே; அருள் ஞானமுண்ட சிரபுரவேந்தரும் = உமாதேவியார் ஊட்டிய திருஞானப்பாலை உண்டருளிய சீகாழித்தலைவராகிய பிள்ளையாரும், சிந்தையின்கண் தென்திரு

ஆரூரவணங்குதற்கு=தமது திருவுள்ளத்தில் தெற்கின்கண் உள்ள திருவாரூரைப் பணிதற்கு, விரவியகாதலிற் சென்றுபோற்றி=கலந்த அன்புகாரணமாக யாமும் அங்குச்சென்று துதித்து, மீண்டுமே வந்து உமமுடன் மேவுவ னென்று= திருப்புகலூருக்கு மீண்டுமே வந்து உம்முடன் வசிப்போமென்று, உரவுகடற்கண் மிதப்பில் வந்தாருக்கு=ஒலிபொருந்திய கடலின்கண் கற்புணைமேல் மிதந்துவந்த ஆண்ட அரசுடன், உரைத்து உடன்பாடு கொண்டொல்லை வந்தார்=திருவாய்மலர்ந்தருளி அவரது அநுமதிபெற்றுத் திருவாரூர்க்கு விரைந்துசென்றருளினார்—எ-று. (௬௬௬)

சொற்பெருவேந்தரும் தோணிமூதூர்த் தோன்றலபின்காதன்று டரத்தாமும், பொற்புகலூர்தொழச் சென்றணைந்தார் புகலிப்பிரானும் புரிந்தசிந்தை, விற்குடி வீரட்டஞ்சென்றுமேவி விடையவர்பாதம் பணிந்துபோற்றிப் பற்பலவாயிரந் தொண்டரோடும் பாடனமறை பாடிப்போந்தார்

(இ-ள்.) சொற்பெருவேந்தரும் தோணிமூதூர்த்தோன்றலபின்காதன்று டர=திருநாவுக்கரசரும் சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையாரின் தமது விருப்பம் பின்தொடர்ந்துசெல்ல, தாமும்பொற்புகலூர்தொழச் சென்றணைந்தார்=தாமும் அழகிய திருப்புகலூரை வணங்கச் சென்றடைந்தருளினார், புகலிப்பிரானும் புரிந்த சிந்தை விற்குடிவீரட்டஞ்சென்றுமேவி=சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையாரும் விரும்பிய திருவுள்ளத்தோடு திருவிற்குடி என்னுந் திருவீரட்டானத்தைச் சென்றடைந்து, விடையவர் பாதம்பணிந்து போற்றி=இடப ஊர்தியையுடைய வீரட்டேசரது திருவடிகளைவணங்கித் துதித்து, பற்பல ஆயிரந்தொண்டரோடும் பாடனமறைபாடிப்போந்தார்= பலபல ஆயிரமடியார் திருக்கூட்டத்தோடு பாடல்நான்மறையென்னும் முதலையுடைய திருப்பதிகத்தை ஓதித்திருவாரூர்க்குச் சென்றருளினார்—எ-று.

திருவிற்குடிசலந்தரனை வதைத்தது அட்டவீரட்டத்தில் ஒன்று. (௬௬௭)

திருவாரூர்-பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாடலனா மறையன்படி பட்டகோலத் தனரிங்கள்
சூடலன மூவிலைய சூலம் வலனேந்தி
கூடலாமூ வெயிலுமெரி யுண்ணக்கூரெரி கொண்டெல்லி
யாடல் னதிரைய னாரூரமர்ந்தானே

நல்லபுனற் புகலித்தமிழ் ஞானசம்பந்தனல்ல
வல்லிமலர்க்கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோர் இசைகயினால் வழிபாடிவைபத்தும் வாயாரச்
சொல்லுதல் கேட்டலவல்லார் துன்பந் துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

திருவிற்குடி வீரட்டம் - பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிகொண்மேனியர் வானமாமதியினர் மதுவார்ந்த [பர்
கடிகொள்கொன்றையஞ் சடையினர்கொடியினருடைபுலியதளார்
விடையதேறுமெம் மானமர்ந்தினிதுறை விற்குடிவீரட்டம்
மடியராகிநின் றேத்தவல்லார்தமை யருவினையடையாவே

விலங்கலேசிலை யிடமெனவுடையனை விற்குடிவீரட்டத்
திலங்குசோதியை யெம்பெருமான்றனை யெழில்திகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற் காழியுண்ஞானசம் பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசை மொழியுமின்மொழிந்தக்கால் மற்றதுவரமாமே

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டானேசர் தேவியார்-மைவார்குழலியம்மை

---

துணரிணர்ச்சோலையுஞ் சாலிவேலித் துறைநீர்ப்பழனமுஞ் சூழ்கரும்பின், மணமலிகானமு ஞானமுண்டார் மருங்குறநோக்கி மகிழ்ந்தருளி, யணைபவரள்ளலங் கழனியாரூ ரடைவோமெனமொழிந் தன்புபொங்கப், புணரிசைச் செந்தமிழ் கொண்டுபோற்றிப் பொன்மதி லாரூர்ப் புறத்தணைந்தார்

(இ-ள்.) துணரிணர்ச்சோலையும்=பூங்கொத்துகள்நிறைந்தசோலைகளும், சாலிவேலித்துறைநீர்ப் பழனமும்=நெல்வேலிசூழ்ந்த நீர்க்கரைகளையுடைய வயல்களும், சூழ்கரும்பின்மணமலிகானமும்=புடைசூழ்ந்தகரும்பினது மணமிக்க காடுகளும், ஞானமுண்டார் மருங்குறநோக்கிமகிழ்ந்தருளி=திருஞானப்பாலை உண்டருளிய ஆளுடையபிள்ளையார் இரண்டுபக்கங்களிலும்பொருந்தநோக்கி மகிழ்கூர்ந்தருளி, அள்ளலங்கழனி ஆரூர்அடைவோமென மொழிந்து அன்புபொங்கஅணைபவர்=சேறுபொருந்திய அழகியவயல்சூழ்ந்த திருவாரூரை அடைவோமெனப்புகன்றருளி அதனை அடையும்பிள்ளையார், புணரிசைச்செந்தமிழ்கொண்டுபோற்றிப் பொன்மதிலாரூர்ப்புறத்தணைந்தார்=இசையோடுபுணர்ந்த செந்தமிழாகிய திருப்பதிகத்தைக்கொண்டுதுதித்துப் பொன்னாலாகியமதில்சூழ்ந்ததிருவாரூர் எல்லையின்புறத்தணைந்தருளினார்—எ-று. ()

---

திருவாரூர்-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

உள்ளமோ ரிசைவினா லுகந்தேத்தித் தொழுமின்றொண்டீர்மெய்யே
கள்ளமொழிந் திடுமின் கரவாதிருபொழுதும்
வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்ட வெள்ளேற்றான்மேய
அள்ளல் கொள் கழனி யாரூ ரடைவோமே.

நல்ல புனற் புகலித் தமிழ் ஞானசம் பந்தன்ல்ல
வல்லி மலர்க்கழனி யாரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிசையினால் வழிபாடிவை பத்தும்வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வானுயர்செங்கதிர் மண்டிலத்து மருங்கணையுங்கொடி மன்னுமா ரூர், தானொருபொன்னுல கென்னத்தோன்றுந் தயங்கொளிமுன்கண்டு சன்னைவந்த, பானிறநீற்றர் பருக்கையானைப் பதிகத்தமிழிசைபா டிப்பாடித், தேனெடுவண்டு முரலுஞ்சோலைத் திருப்பதிமற்றத னெல்லைசேர்ந்தார்.

(இ-ள்) வானுயர்செங்கதிர்மண்டிலத்து மருங்கணையுங் கொடிமன்னும் ஆரூர்=ஆகாயமளவுக்கு உயர்ந்த சூரியமண்டலத்தினருகை அளாவும் கொடி யாடைகள் நிலைபெற்றதிருவாரூர், தானொருபொன்னுலகென்னத்தோன்றும் தயங்கொளிமுன்கண்டு=தானும் ஒருதேவர் உலகம்போலப் புலப்பட்டுவிளங் கும் ஒளியை முன்னேதரிசித்து, பானிறநீற்றர்பருக்கை யானைப்பதிகத்தமி ழிசைபாடிப்பாடி=பால்போலும் வெள்ளியவிபூதியையணிந்த புறநிடங்கொ ண்டாரைப் பருக்கையானையென்னுந் திருப்பதிகத்தமிழால் இசையோடுபாடிய ருளி, தேனெடுவண்டுமுரலுஞ்சோலைத்திருப்பதிமற்றதனெல்லைசேர்ந்தார்= பெண்வண்டுகளோடு ஆணவண்டுகளும் பாடுஞ்சோலைசூழ்ந்த அத்திருப்பதி யின் எல்லையைச்சேர்ந்தருளினார்—எ-று. (௪௧௧)

---

திருவாரூர்-திருவிராகம்-பண்-நட்டராகம்

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புகர்
நெருக்கிவாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
யருக்கன்மண் டலத்தளாவு மந்தணாரூ ரென்பதே.

வல்லிசோலை சூழ்ந்துநீடு மன்னுவீதி பொன்னுலா
வல்லிமா தமர்ந்திருந்த வந்தணாரூ ராதிபை
நல்லசொல்லு ஞானசம் பந்தனாவி னின்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மை யாகவே.

திருச்சிற்றம்பலம்.

---

பொங்கியசிந்தை விருப்பினவெள்ளம் பொழிந்துபுவிமேற்பொ லிவதென்ன, எங்குமங்குளிரொளி வீசுமுத்தி னிலங்குசிவிகை யிழிந்த ருளிச், செங்கைநிறைமலர் கொண்டுதூவித்திருவிருக்குக்குறள் பாடி யேத்தித், தங்களபிரானரசாளுமாரூர் தன்னைப்பணிவுற்றார் தமிழ்விரகர்.

(இ-ள்.) சிந்தைபொங்கிய விருப்பின வெள்ளம்பொழிந்து புவிமேற் பொலிவதென்ன = இதயத்தினின்றும் நிறைந்துவழிந்த பெருங்காதலென னும வெள்ளம்சொரிந்து நில உலகினமேல விளங்குவதுபோல, எங்குநங்கு ஙிரொளி வீசுமுத்தின இலங்குசிவிகை இழிந்தருளி=எவவிடத்தும தண்ணிய வெளளொளியை வீசும்முத்தினால விளங்கியதிருசசிவிகையின்நினறிழிந்தரு ளி; தமிழவிரகா=முத்தமிழினவிரகராகிய பிளளையாா; செஙகைநிறைமலா கொண்டுதூவி=சிவந்த திருககரஙகளில் நிறைந்தமலாகளால அாசசிதது, தி ருவிருக்குக்குறள பாடியேத்தி= திருவிருககுககுறளாகிய திருப்பதிகததைப பாடிததுதிதது; தஙகளபிரான அரசாரும ஆரூாதனைபபணிவுறுவா=தமது பெருமானுா அரசாணடருளிய திருவாரூரைப பணிந்தாா—எ-று

சோமஸகந்தராயக் கனகசிமமாசனததில சிவபிரான எழுந்தருளி இருந்த லின், தஙகளபிரான் அரசாளும ஆரூா எனறாா. (௫௱)

திருவாரூா-திருவிருககுககுறள-பண-குறிஞசி.

திருசசிறறமபலம

சிததந தெளிவீாகா
ளததனு ரூரைப
பததி மலாதூவ
முத்தி யாகுமே

சீரூா சமபந்த
னூரைச சொனன
பாரூா பாடலாா
பேரா ரினபமே

திருசசிறறமபலம

வேறு.

படியின் ஞானமுண் டருளிய பிளளையாரைப பணிதற
கடியா சென்றெதிா கொளவெழுந தருளுமஞ்ஞானறு
வடிகொள் சூலததா மனனிய பொனமதி லாரூாக்
கடிகொள பேரணிப பொலிவையாா முடிவுறக காணபாா.

(இ-ள்.) படியில ஞானமுணடருளிய பிளளையாரைப பணிதறகு=நில உலகின்கண திருஞானபபால உணடருளிய ஆளுடையபிளளையாரை வணங குதறகு; அடியார்சென்று எதிாகொள வெழுந்தருளும அஞ்ஞான்று=அடி யார் திருக்கூட்டங்கள்சென்று எழுந்தருளிய அககாலதது; வடிகொளசூல த்தர்மன்னிய பொனமதில ஆரூா=வடிததசூலத்தையேந்தியருளிய தியாகப் பெருமானெழுந்தருளும பொன்னாலாகிய மதிலசூழ்ந்த திருவாரூரின், கடிகொ ள்பேரணிப்பொலிவையார்முடிவுறக்காண்பார்=விளக்கங்கொண்ட பெரிய அ லஙகாரத்தின் பொலிவையார்தாம்முடிவுபெறககாணவல்லார்—எ-று. (௫௱௧)

நான மான்மத நளிர்பெருஞ் சேற்றிடை நறும்பொற்
றூந றுந்துகள் சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிக ளடிவலித் தவைகளைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது மதுமலர் மாரி.

(இ-ள்.) நானமான்மதநளிர் பெருஞ்சேற்றிடை = நாவிமதமும் மிருகமதமும் ஆகிய இவற்றோடுசேர்ந்து குளிர்ந்த பெரியகலவைச்சேற்றினிடத்து, நறும்பொன்றூநறுந்துகள் சொரிதலில் = நல்லபொன்னிறமான தூய்மைமிக்க மகரந்தங்களை இறைத்தலினால், சுடரொளிப்படலையான வீதிகளடிவலித்து = ஒளிமிக்கநெருங்கிய வீதிகளானவை நடக்குங்கால்களை உறுத்துதலால், அவைகளைந்தலைய = அக்கலவைச்சேற்றின் வன்மைகளைந்துகெடும்படி, மலர் மாரிமதுவான மாரியிற்பொழிந்தது = புட்பவருட்டத்தின் தேன்மழைபோல இடையறாது சொரிந்தது—எ-று. (௫௱௨)

ஆட னீடுவ துகிற்கொடி யணிகுழற் கொடிக
ளோடு சூழ்வன சுரும்பொடு தமனியத் தசும்பு
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெல்லாம்

(இ-ள்) மாடமாளிகை மண்டபங்களின் மருங்கெல்லாம் = மாடங்களும் மாளிகைகளும் மண்டபங்களும் ஆகிய இவற்றின்பக்கங்களெல்லாம், ஆடல் நீடுவ துகிற்கொடி அணிகுழற்கொடிகள் = சீலைக்கொடிகளும் அழகியகூந்தலையுடைய பெண்களாகிய பூங்கொடிகளும் ஆடல்செய்வனவாம், தோடுசூழ்வன சுரும்பொடு தமனியத்தசும்பு = வண்டுகளோடு பொற்குடங்கள் மலரிதழ்களைச் சூழாநின்றன, கதலிதோரண நிரைக்கமுகுகாடுகொண்டன = வாழைகளும் மகரதோரணங்களும் கமுகுகளும் காடாகச்சூழ்ந்தன—எ-று (௫௱௩)

மாலை சூழ்புறங் கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுட ரொளியுடன் கோத்திடை தூக்கு
நீல மாமணி நிழல்பொர நிறம்புகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர்

(இ-ள்) பவளவேதிகைமலர்ப்பந்தர் = பவளத்தாலாயவேதிகைகளின் கணுள்ள பூம்பந்தர்கள், மாலைசூழ்புறங்கடைகளில் = மாலைகள்சூழ்ந்த முதல்வாயில்களினும், மணிநிரைவிளக்கின் = மாணிக்கங்களால்நிரைப்படச்செய்த தீபங்களினும், கோலநீள்சுடரொளியுடன் கோத்திடைதூக்கும் = அழகுமிக்க பேரொளியோடு இடையிடையே கோத்துத்தூக்கும், நீலமாமணிநிழல்பொர = பெரியநீலமணியின் ஒளிபத்திபாய அதனால், நிறம்புகர்படுக்கும்பாலவாயின = தன்னிறத்தைப் புகர்நிறமாகச்செய்யும்பகுதியை யுடையவாயின—எ-று.

மலர்ப்பந்தர்புறங்கடைகளினும் மணிவிளக்கினும் ஒளியுடன்கோத்துத்தூக்கும் நீலமணிநிழல்பொருதலால் நிறம்புகர்படுக்கும் பாலவாயினவெனக்கூட்டுக.

தழைம லர்த்தடஞ் சாலைக டெற்றிகள் சதுக்கங்
குழைமு கத்தவ ராடரங் கிமையவர் குழாமும்
விழைசி றப்பின வியலிட மியாவையு மிடைந்து
மழைமு ழக்கென வியம்பின மங்கல வியங்கள்.

(இ-ள்) தழைமலர்த்தடம்=தழைந்தமலர்களையுடையவாவிகளும், சாலைகள் தெற்றிகள்சதுக்கம், அறச்சாலைகளும் திண்ணைகளும்நாற்சந்திகளும், குழைமுகத்தவர் ஆடரங்கு = குண்டலத்தையணிந்தமகளிர் நடனஞ்செய்யும் நாடகசாலைகளும் ஆகிய இவைகள், இமையவர்குழாமும் விழைசிறப்பின= தேவர்கூட்டமும் விரும்புஞ்சிறப்பினையுடையன, வியலிடமியாவையும் மிடைந்துமங்கல இயங்களமழைமுழக்கென முழங்கின=பரந்த இடங்களெல்லாம் மங்கலவாத்தியங்களநெருங்கிமேகமுழங்கினாற்போல ஒலிசெய்தன—எ-று.

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ் பெருந்திரு வாரு
ரரச ளிப்பவ ரருளினு லடியவர் குழுவும்
புரிச னங்களும் புறத்தணைந் தெதிர்கொளும் பொழுது

(இ-ள்) இன்னனவிரவுபேரணிவேறு வேறுவிளங்கும்=இவ்வாறுனமிக்க பெரிய அலங்காரங்கள் வெவ்வேறாய்விளங்காநிற்கும், பிரசமென்மலர்ச் சோலைசூழ் பெருந்திருவாரூர்=தேன்பொருந்திய மெல்லிய பூக்களையுடைய சோலைசூழ்ந்த பெரியதிருவாரூரில், அரசளிப்பவர்அருளினால்=அரசாட்சிசெய்யும் தியாகப்பெருமானதுதிருவருளினால், அடியவர்குழுவும் புரிசனங்களும் புறத்தணைந்து எதிர்கொளும்பொழுது=அடியார்திருக்கூட்டங்களும் அந்நகரிலுள்ள மகாசனங்களும் நகர்ப்புறத்திலவந்து பிள்ளையாரை எதிர்கொள்ளுங்காலத்து—எ-று (௩௱௬)

வந்தி றைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகரா ஞ்சண்பையர் தலைவ
ரந்த மாயுல காதியாம் பதிகமங் கெடுத்தே
யெந்தை தானெனை யென்றுகொள் ளுங்கொலென் றிசைத்தார்.

(இ-ள்) சந்தமுத்தமிழ்விரகராஞ் சண்பையர்தலைவர் = பண்ணமைந்த முத்தமிழ்விரகராகிய ஆளுடையபிள்ளையார், வந்திறைஞ்சுமெய்த்தொண்டர் தங்குழாத்து எதிர்வணங்கி=தம்மைவந்துவணங்கிய அடியார்திருக்கூட்டத்திற்கெதிரேதாமும்வணங்கி, அங்கு அந்தமாய உலகாதியாம்பதிகமெடுத்து= அவ்விடத்து அந்தமாய உலகாதியா என்னும் திருப்பதிகத்தை அடியெடுத்து, எந்தைதான் எனையென்று கொள்ளுங்கொலென்று இசைத்தார்=எந்தைதானெனையென்று கொள்ளுங்கொலென்று பதிகவிறுதியிலவைத்துப்பாடியருளினார்—எ-று. (௩௱௭)

திருவாரூர் - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்.

அந்த மாயுல காதியு மாயினன்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்றிரு வாரூரெம்
எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ

வன்னி கொன்றை மதியொடு கூவிளஞ்
சென்னி வைத்த பிரான்றிரு வாரூரை
மன்னு காழியுண் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்

---

ஆன வந்திருப் பதிகமும் பாடிவந் தணையு
ஞான வித்தகர் மெய்த்தவர் சூழவந் நகரார்
தூநறுஞ் சுண்ண மலர்ப்பொரி தூயத்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்மருங் கணைந்தார்.

(இ-ள்) ஆன அத்திருப்பதிகமும் பாடிவந்தணையுமஞானவித்தகர்=அவ்வகைத்தான அந்தத்திருப்பதிகத்தையும்பாடி அங்குவந்துசேரும் உண்மைஞானத்தையுமுடைய ஆளுடையபிள்ளையார், மெய்த்தவர்சூழ அந்நகரார்தூநறுஞ் சுண்ணமலர் பொரிதூயத்தொழுதேத்த=மெய்ம்மையாகியதவத்தையுடைய திருத்தொண்டர்கள் பக்கலிற்சூழ்ந்துவர அந்நகரிலுள்ளமகாசனங்கள் பரிசுத்தமாகிய நல்லசுண்ணப்பொடிகளையும் மலர்களையுமநெற்பொரிகளையும் தூவிப் பணிந்து துதிக்க, வானநாயகர் கோயில்வாயிலின் மருங்கணைந்தார்=விண்ணுலகத்தார்தலைவராகிய தியாகப்பெருமானார் திருக்கோயிலின் திருவாயிலின்பக்கத்தணைந்தார்—எ-று (ருஅ)

மன்னு தோரண வாயின்முன் வணங்கியுட் புகுவார்
தன்னு ளெவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம்
பன்னெ டுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிரி யன்றொழு தெழுந்தார்

(இ-ள்) மன்னுதோரணவாயின்முன்வணங்கியுட்புகுவார்=நிலைபெற்ற மகரதோரணங்களையுடைய திருவாயிலின்முன்வணங்கி உள்ளேபுகும் ஆளுடைய பிள்ளையார், தன்னுள் எவ்வகைப்பெருமையும் தாங்கிய தகைத்தாம்=தன்னுள்ளே எவ்வகைப்பட்ட பெருமையையும் தாங்குந்தகைமையையுடையதாய், பன்னெடுஞ் சுடர்ப்படலையின் பரப்பினைப்பார்த்து=பலவாயபி

கக ஒளிப்பிழம்பின் பரப்பைப்பார்த்தருளி, சென்னிதாழ்ந்து தேவாசிரியன் தொழுது எழுந்தார்=சிரமுறத்தாழ்ந்து தேவாசிரியன் திருமண்டபத்தைப் பணிந்து எழுந்தார்—எ-று.

உள்புகுவார் தகைத்தாம் தேவாசிரியனைப் பன்னெடும் சுடர்ப்படலையின் பரப்பினைப் பார்த்துத் தொழுதணைந்தார் எனக்கூட்டுக.

தேவர், முனிவர், திருவடியார், இவரொருங்கிவர் முதலிற எவ்வகைப்பெருமையுந் தாங்கிய தகைத்தென்றார். (௫௱௯)

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயற் கரியராய்ச் செழுமணிப் புற்றில்
நீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார்

(இ-ள்.) மாடுசூழ் திருமாளிகை வலங்கொண்டு வணங்கி, பக்கத்திற் சூழ்ந்த திருமாளிகையைப் பிரதட்சணஞ்செய்து வணங்கி, கூடுகாதலிற் கோபுரம் பணிந்துகைகுவித்து=தலைப்பட்ட பெருவிருப்பால் திருக்கோபுரத்தைக் கைகுவித்துவணங்கி, தேடுமாலயற்கு அரியராய்=கைகளைச்சிரசின்மேற் குவித்து தேடுகின்ற திருமாலுக்கும்பிரமனுக்கும் காணப்படாதற்கு அரியராகி, செழுமணிப்புற்றின் நீடுவார் முன்பு நிலமுறப்பலமுறைபணிந்தார்=செழுமை பொருந்திய அழகியபுற்றை இடமாகக்கொண்டபெருமானார் முன்புநிலத்தின் மேல் திருமேனிபொருந்த பலமுறைவணங்கியருளினார்—எ-று. (௫௱௰)

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரப்பிய புளக
மணிந்த மேனியோ டாடினர் பாடினர் அறிவிற்
றுணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையிற் றாழ்ந்தார்

(இ-ள்.) துணிந்த மெய்ப்பொருளானவர்தமை அறிவிற்கண்டு துதிப்பார்=தம்மால் நிச்சயித்த மெய்ப்பொருளாகிய வன்மீகநாதரைத் தம் உணர்விற்கண்டு துதிக்கும் ஆளுடையபிள்ளையார், பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர்=நிலமுறப்பணிந்து வணங்குவாராய்ப்பதைபதைத்தார்; பரப்பிய புளகமணிந்தமேனியோடாடினர் பாடினர்=மெய்முழுதும் பரந்தரோமாங்கிதத்தால் அலங்காரமடைந்த திருமேனியோடு கூத்தாடினராய்ப் பாடினார்; தணிந்த சிந்தையின் விரைந்தெழுவேட்கையிற் றாழ்ந்தார்=தட்பமடைந்ததமது இதையத்தில் விரைந்தெழுங்காதலால் மீளவும்பணிந்தார்—எ-று.

துதிப்பார் என்னும் எழுவாய், பதைத்தனர் பாடினர்தாழ்ந்தார் என்னும் பயனிலைகளைத் தனித்தனிகொண்டது. (௫௱௧௧)

தம்பாதம் போற்றியரு ளாற்சாரி புத்தன்றனனை, யுங்கடலை வனும்
பொருளு முரைக்கவென்ன வுற்றவா தினைமேற்கொண் டுரைசெய்கி
ன்றான்

(இ-ள்) அங்கணைந்து மண்டபத்துப் புத்தரோடும் பிள்ளையார் அரு
கு அணைய நின்றபோதில்=சாரிபுத்தன் மண்டபத்துப் புத்தரோடு பிள்ளை
யார் மருங்கு பொருந்த நின்றபோது, எங்கும் நிகழ் திருச்சின்னம் தடுத்த
புத்தன்=எவ்விடத்தும் வெற்றிபெற்றுவரும் திருச்சின்னங்களைத்தடுத்த புத்
தநந்தியினது, இரும் சிரத்தைப்பொடியாக்கும் எதிரில் அன்பர்=பெரியதலை
யைச் சிதறச்செய்த ஒப்பற்ற திருமுறையெழுதுந்தொண்டர், பொங்குபுக
ழ்ப்புகலிக்காவலர் தம்பாதம்போற்றி=நிறைந்தபுகழையுடைய சீகாழித்தலைவ
ராகிய ஆளுடையபிள்ளையார் திருவடிகளைவணங்கி, அருளால் சாரிபுத்தன்
தன்னை உங்கள் தலைவனும் பொருளும் உரைக்க என்ன = அவரது திருவரு
ளால் சாரிபுத்தனை நோக்கி யுங்கள் கடவுளையும் (நீவிர் கூறும் பஞ்சகந்தமுத
லிய) பொருணிலைமையையும் கூறுகவென்றருள், உற்றவாதினைமேற்கொ
ண்டு உரைசெய்கின்றான்=தான்செய்யவந்த வாதத்தையங்கீகரித்துச் சொல
லாகின்றான் —எ-று (௯௧௪)

கற்பங்க ளனைத்தினிலும் பிறந்துவீந்து கதிமாறுங் கண்பங்க
வியல்புதனனிற், பொற்புடைய தானமே தவமேதன்மை புரிந்ததிலை
யோகமே பொருந்தச்செய்ய, வுற்பவிக்கு மொழிவின்றி யுணர்த்த
ஞானத் தொழியாத பேரின்ப முத்திபெற்றான், பற்பலரும் பிழைத்
துய்ய வறமுன்சொன்ன பான்மையான் யாங்கடொழும் பரமனென்
றான்

(இ-ள்) கற்பங்கள் அனைத்தினிலும் பிறந்து வீந்துகதிமாறும் கண்
பங்க இயல்பு தன்னில்=எண்ணிறந்த கற்பங்களிலும் பிறர்க்குறுதி செய்யும்
பொருட்டு அளவிறந்த யோனிகளிற் பிறந்திறந்து அக்கதியினின்றுமாறி
வீட்டையுங் கண்பங்க இயல்புகூறும் புத்தமதத்தில், பொற்புடையதான
மே தவமேதன்மை புரிந்திலையோகமே பொருந்திச்செய்ய=ஆதிபுத்தன்
சிறப்புமிக்கதானம் விரதம் பண்பு மிக்கயோக மிவைகளைத்தான் விரும்பிச்
செய்ய, உற்பவிக்கும் ஒழிவின்றி உணர்த்தஞானத்து=அதனாலுதிக்கும் நீங்கா
நிலைமையாற் கூறிய ஞானத்தால், ஒழியாதபேரின்ப முத்திபெற்றான் = கெ
டாத பேரின்பத்தைக் கொடுக்கும் கந்தவீட்டை யடைந்தான் (அவனே),
பற்பலரும் பிழைத்து உய்ய அறம் முன்சொன்ன பான்மையான் யாங்கள்
தொழும் பரமன் என்றான்=தேவர்முதலிய பலரும் பிறவித்துன்பத்தினின்று
நீங்கி வீட்டையுற்றதைமுன்னே சொன்ன அருளுடையோன் எம்மாற்றொ
ழப்படுங்கடவுளெனக் கூறினான் —எ-று

புத்தன் உலும்பினி வனத்திற்பிறக்குங்கால் மாதாவின் வலமருங்குலா ற்பிறந்து அத்தாயாசக்காறு நாளுயிர் கொடுத்து மரிக்கச்செய்து பிறப்பன் பிறந்தபின் பிறர்க்குறுதிசெய்யும்பொருட்டு எண்ணிறந்த நூறாயிரங் கற்ப மளவிறந்த யோனிகளிலும் புகுந்து பிறவுயிர்க்கட் குறுதிசெய்து மேலச்சகதி மாறி வீட்டடைவன். ஆதலில், கற்பங்களனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறு மென்றும், நூறுதாமரை யிதழையடுக்கி யூசியிட்டுக் குத்தினலெட்டி தழுவு மெல்லையாகிய ஓர்கணத்தில் ஞானமும், ஞேயமுமாகிய பொருள்கள் தீபசந் ததிபோலக்கெட்டு மிக்குவருதலேயன்றிச் கெட்டுக் குறைந்துவருதலும் கெ ட்டொழிந்து நிற்பதும், கெட்டுக்கெட்டுவிடுவதுமென நால்வகையாயக் கேட டையுமெனவுங் கூறுதலில், கணபங்கவியல்பு தன்னிலென்றும், அவ்வாறு பிறந்தபுத்தன் எண்ணிறந்ததானமும் எண்ணிறந்த சீலமுமுடையனு யோகி யாயிருப்பனென்றலில், பொறப்புடைய்தானமே தவமே தன்மைபுரிந்த நிலை யோகமே பொருந்திச் செய்யவென்றும், அதனால் திரிலட்சண பாவனை யெனனும் ஞானமுதித்தலின், உறபவிக்கு மொழிவின்றி யுரைத்தஞானம் என் றும், அதனால் குற்ற வீட்டைந்து பஞ்சகந்த நீக்கமாகியகந்தவீட்டியதினுக் கில, பேரின்ப முத்திபெற்றான் என்றும், முத்திபெறுமுன் தவங்காரணமாக வுதித்த ஞானத்தால் முழுதொருங்குணர்ந்து பிறர்க்கறங்கூறினுதலில், பற் பலரும் பிழைத்துய்ய வறமுன்சொன்ன பான்மையானென்றுனென்றுங் கூறினர் புத்தர், ஆதிபுத்தனோடு இருபத்து நால்வர் புத்தர்கள் சர்வம் துக்கந் துச்சம், சர்வமநித்தியமநித்தியம், சர்வம் சூனியஞ் சூனியமெனனுந் திரிலட்சணபாவனையால் முத்தி சித்திக்குமென்றுங் கூறுவர் (கூகரு)

என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந்தேற்ற விருந்தவத்துப் பெ ருந்தன்மை யனபாதரும், நன்றுமது தலைவன்றான் பெற்றானென்று நாட்டுகின்ற முத்திதான் யாவதென்றார், நின்றவுரு வேதனையே குறி ப்புச்செய்கை நோக்கின்ற ஞானமென நிகழ்ந்தவைந்து, மொன்றியகந் தத்தழிவே முத்தியென்ன வுரைசெய்தான் பிடகத்தினுணர்வுமிக்கான்

(இ-ள்) என்று உரைத்த சாரிபுத்தன் எதிர்வந்து ஏற்ற=இவ்வாறெ டுத்துக் கூறியசாரிபுத்தன் தெதிர்வந்தவனோடு வாதுசெய்யக் குறித்த, இரு மதவத்துப் பெருந்தன்மை அனபாதரும் = பெரியதவத்தையுடைய மேன் மைபொருந்திய சமபந்த சரணலயனெனனு மடியவரும், நன்று உமது தலை வன்றான் பெற்றானென்று நாட்டுகின்ற முத்திதான் யாவதென்றார் = நீ கூறி யது நன்றாயிருந்தது உமது கடவுளடைந்தானென்று நீ நாட்டுகின்ற முத்தி யினது இயல்பு யாதென்று வினவினார் (வினவுங்கால்), பிடகத்தின் உணர்வு மிக்கான்=பிடகநூலுணர்ச்சியில் மிக்கசாரிபுத்தனுனவன், நின்ற உரு=நிலை பெற்ற மூர்த்தபூதங்களாகிய ரூபகந்தமும், வேதனை = மெய்ப்பொருளை யறிந்து அதனாலுண்டாம் வேதனாஸ்கந்தமும், குறிப்பு = அறிதற்கருவியா

கிய குறிப்புக் கந்தமும், செய்கை = புண்ணியபாவங்களது வாசனாசமூக மாகிய சமஸ்காரகந்தமும், தோன்றா ஞானம் = அறியு மியல்புடையஞான மெனனும் விஞ்ஞானகந்தமும், என்நிகழ்ந்த ஐந்தும் = எனக் கூறியஐந்துஞ் சேர்ந்த கந்தங்களினழிவே முத்தியெனக் கூறினன் —எ-று

உருவகந்தம் - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயமெனனும் நான்குபூதமும் அப்பூதங்களினிடத்திற் பொருந்திய உபாதேயமெனனும் கடினம், கந்தம், இரசம், ரூபம், என்னும் நான்குமென எட்டுவகைப்படும். இவை கடமுதலிய வாகியபொருள்களுக்குக்காரணம்

நிலம் - வன்மையுங் கந்தமுமுடையது நீர் - தண்மையும் மதுரரச முமுடையது தீ - ரூபமும் வெம்மையுமுடையது காற்று - பரிசமும் வேக முமுடையதெனக்

வேதனை - சுகமும் துக்கமும், உபேட்சா புத்தியுமென மூவகைப்படும் குறிப்பு - சுரோத்திராதி ஞானேந்திரியமைந்தும், சித்தமொன்றுமென அறுவகைப்படும் செய்கையென்னுஞ் சமஸ்காரம் - புண்ணியம் பத்தும் பாவம் பத்துமென இருபதுவகைப்படும் விஞ்ஞானம் - இந்திரியமைந்தும் மனமொன்றுஞ் சேர்ந்து நிகழுமாறு வகையாலறுவகைப்படும் இந்நா றபத்துமூன்றும் பஞ்சகந்தத்தின் வகையெனப்படும் இவை - உரு, அரு வென இருவகுப்பாயப் பந்தமவீடென்றும், உள்வழக்கென்றும், இல்வழக் கென்றும் வழங்கப்படும்

"உருவியல் பூதமோடங்கு பாதாயரூபமாகு, மருவியல் சித்தங்களும் மென விரண்டாரும் வீட்டினை, மருவியல் குற்றங் கந்தமென வழங்கிடும்வழக்கி, னிருவியலுள்ளதோ டங்கில்லதா மியம்புங்காலே" என்னுஞ் சிவஞான சித்தி பரபக்க திருவிருத்தத்தானும், 'ஓங்குருவம் வேதனையுள்ளக் குறிப்புப் பாவனைமெய் தாங்குணர்வென்றைந் தாங்கந்தம்" "உருவமுடல் பூதமு பாதாயமென்று மிருவிதத்திற்றுமெழுமென" "வேதனையின்பதுன்பி யற்றின் விரவலுமென் றேழ்வொரு மூன்றுமென்றோ" "வாக்குமனமாக்கை யிவை பாவனையென்றேழ்தியா யாக்குமிவை தாமறம் பாவம்." "இந்நாலவ கை வித்திலு மேயநதைப்புற வெண்ணுமெண்ம விஞ்ஞானமென்றே விள ம்பு" "இந்தவிதமைந்துஞ் சந்தானத்தெழுந்தழிகை பந்தமெனவே நீதான பார்" என்னும் பரமத்திமிரபானுவானும், "எட்டிவையுருவமூன்று வேதனை யாறு ஞானமொட்டிய குறிப்போராறு செய்கையு மிருபதாகக், கட்டியபஞ் சகந்தங் கணத்தினிற் பங்கமாகித், தொடர்ப்பத்துமூன்றுஞ் சுத்த நூற்று ணிவுதானே" என்னும் பௌத்தநூற்செய்யுளானுமுணர்க.

பிடகம் - ஆதிபுத்தனோடு தண்ணங்காரமுதலிய இருபத்துநான்கு புத் தர்கள் மற்றி லுபதேசக்கிரமத்தாற் செய்யப்பட்ட நூல். அதுவினயபிடகமெ ன்றும், சூத்திரபிடகமென்றும், அவிதன்ம பிடகமென்று மூவகைப்படும்.

வினயபிடகம்-துறவிகளுக்கு நிலைக்கேற்ற சீலங்களையும் வழுவிற்குப் பிராயச்சித்தங்களையுங் கூறுவது. சாவகபதம், சாரணபதம், சாமணபதம், உபசமபன்னபதமெனத் துறவிகள் நிலைநால்வகைப்படும் இந்நால்வகைக் களின் சீலங்கள் நிலைதோறும் முறையே ஐந்து, பத்து, நூறு, கோடி, எனும் பகுப்பாற் கூறப்படும். (௯௧௬)

ஆங்கவன்றா னுரைத்தமொழி கேட்டவன்ப ரதனையனுவாதஞ் செய்தவனைநோக்கித், தாங்கியஞா னத்துட னுங் கந்தமைந்துந் தாம் வீந்துகெட்டனவேற் றலைவன்றானு, மீங்குளனென் றவனுக்கு விடய மாக யாவையுமு னியற்றுதற்கு விகாரமேசெய், தோங்குவடி வமைத் துவிழ வெடுக்கும்பூசை கொள்வாரா ருரைக்கவென வுரைக்கலுற் றான்

(இ-ள்) ஆங்கவன்றான் உரைத்தமொழிகேட்ட அன்பர் = அச்சாரி புத்தன் சொன்ன வார்த்தையைக்கேட்ட சம்பந்தசரணாலயர், அதனை அனுவாதம்செய்து = அவன் கூறுங் கூற்றைத் தாமனுவதித்தவனைப் பார்த்து, தாங்கிய ஞானத்துடனும் கந்தம் ஐந்தும் தாமவீந்து கெட்டனவேல்=பொருந்திய ஞானத்தோடு கூடிய ஐந்து கந்தமு முங்கள் தலைவனுக் கொருங்கறக் கெட்டனவாயில், தலைவன்றானும் ஈங்கு உளனென்று அவனுக்குவிடயமாக=அக்கடவு ளிவ்வுலகத்திருக்கின்றானென்று அவனறியும்படி, யாவையும் முன் இயற்றுதற்கு விகாரமேசெய்து = பூசை நிவேதனங்கள் முதலிய உபசாரங்களை யவன் முன்செய்தற்கு மனோவிகாரமான பாவனைசெய்து, ஓங்குவடிவு அமைத்துவிழவு எடுக்கும்பூசை கொள்வார் ஆர் உரைக்க என உரைக்கலுற்றான் = பெரிய உருவத்தைப்பாக்கி விழாக்கொண்டாடும் பூசனையை யேற்றுக்கொள்பவர் யார்சொல்லென்று அவர் வினவியருளச் சொல்லத் தொடங்கினான்.—எ-று.

அனுவாதமாவது - அவன் கூறிய பொருளை நீ இவ்வாறிவ்வாறு கூறினையென எதிர்வாதியும் மறுக்கும்பொருட்டுக் கூறுதல். கந்தமைந்து மறக் கெட்டு வீடடைந்தானுக்கு உடம்புங் கருவியுமின்மையில், பூசையேற்றல் கூடாமையிலவனுக்கு விடயமாக விகாரஞ்செய்து விழவெடுக்கும் பூசைகொள்வாரார் என்றார் விகாரம்=மானசிகபாவனை. (௯௧௭)

கந்தமாம் வினையுடம்பு நீங்கவெங்கோன் கலந்துள்ளன்முத்தி யிலென்று னொன்னக்காணு, மிந்திரியங் கண்முதலாங் கரணந்தானுமில் லையே யவனுணர்ச்சி யில்லையென்றார், முந்தையறி விலனாகி யுறங்கி னானை நிந்தித்து மொழிந்துடனீர் தாடினார்க்கு, வந்தவினைப் பயன் போல் வழிபட்டார்க்கும் வருமன்றோ நன்மையென மறுத்துச்சொ ன்னான்.

(இ-ள்) கந்தமாமலினை உடம்பு நீங்க எங்கோன் கலந்துள்ள முத்தியில் என்றான் = அதற்குத்தரமாக அவன் இருவினைகாரணமான கந்தவுடம்பு கெடவெமது முதல்வன் முத்தியிற்சேர்ந்திருக்கின்றான் (அதனால் விழவெடுக்கும் பூசைசெய்தல் பொருந்துமென்றுகூற), காணும் இந்திரியம் கண்முதலாம் காணுந்தானும் இல்லையேல் அவன் உணர்ச்சி இல்லை என்றார் = முத்தியிற்சேர்ந்த நும்மிறைவனுக்கு விடயங்களையுணருங் கருவியாகிய கண்முதலிய கரணங்களுமில்லாமையால் அவனுக்கு உணர்வுதித்தலில்லையென மறுத்தருளினார், முந்தை அறிவிலனாகி உறங்கினானை நிந்தித்து மொழிந்து உடலமீது ஆடினார்க்கு வந்தவினைப்பயன்போல வழிபட்டார்க்கும் வருமன்றே நன்மையென மறுத்துச்சொன்னான் = முற்பட்ட விஞ்ஞானமானதுகெட்டு ஆலயவிஞ்ஞானமடைந்து உறங்குகின்றவனை யொருவனிந்தித்துக் கூறியவனுடம்பின்மீதுமிதித்தாடினவொருவனுக்கு அதனால்வந்த தீவினைப்பயன்போலக் கந்தமைந்துங்கெட்டு முத்தியடைந்த நம்முதல்வனை வழிபாடுசெய்தவர்க்கும் நல்வினைப்பயன் வருமென அதனைமறுத்துத் தேரன்சொன்னான் — எ-று.

விஞ்ஞானம் - ஆலயவிஞ்ஞானமென்றும் பிரவிருத்தி விஞ்ஞானமென்றும் இருவகை. அவற்றுள், ஆலயவிஞ்ஞானம் நானென்றுமுணர்வென்றும், பிரவிருத்திவிஞ்ஞானம், நீலாதிரூபங்களையுணருமறிவென்றும், ஆலயவிஞ்ஞானம், பிரவிருத்தி விஞ்ஞானத்திற்குக் காரணமென்றுங் கூறுவர். அதனால், முந்தையுணர்வென்றது பிரவிருத்தி விஞ்ஞானத்தை. இவ்விரண்டுங் கணபங்கமுடையன. (கூகஅ)

சொன்னவுரை கேட்டருளி யன்பர்தாமுந் தொடர்ந்தவழி பா
டுபல கொள்கின்றானுக், கன்னவற்றி னுடன்பாடு மெதிர்வுமில்லை யா
னபோ தவன்பெறுத லில்லையென்றார், முன்னவற்றி னுடன்பாடு மெ
திர்வுமின்றி முற்றுந்துயி லுற்றானை முனிந்துகொன்றால், வின்னுயிர்போ
யக் கொலையாகி முடிந்ததன்றோ விப்படியா லெம்மிறைவற் கெய்
துமென்றார்

(இ-ள்) சொன்ன உரை கேட்டருளி அன்பர்தாமும் தொடர்ந்தவழிபாடு பல கொள்கின்றானுக்கு = சாரிபுத்தன் கூறியவார்த்தையைக் கேட்டருளிச் சம்பந்தசரணாலயரும் நீர்செய்யும் பலவிதவழிபாடுகளை யேற்றுக்கொள்ளும் நும்மிறைவனுக்கு, அன்னவற்றின் உடன்பாடும் எதிர்வும் இல்லை = (அவ்வழிபாடுகளையுணர்ந்து கோடற்குரிய கருவிகளின்மையால்) அவ்வழிபாட்டின் விருப்பும் வெறுப்புமில்லை, ஆனபோது அவன்பெறுதல் இல்லை என்றார் = அவ்வாறானபோது அவன்பூசையை யேற்றுக்கொள்ளுதலில்லையென மறுத்தருளினார், முன் அவற்றில் உடன்பாடும் எதிர்வும் இன்றி முற்றுந்துயில் உற்றானை முனிந்துகொன்றால் = தம்முன்புள்ள விடயங்களில் விருப்பு வெறுப்பின்றிச் சித்தசந்ததிகெட்டு ஆலயவிஞ்ஞானமடைந்தவனைக் கோபித்தொருவன் கொன்றால், இன் உயிர்போய்க் கொலையாகிமுடிந்ததன்றோ இப

படியால எம இறைவறகு எயதுமெனறா = கொலலபபடடானுக குயிரபோ தலுங கொனறுனுககுக கொலைபபாவமும வநததுபோல இவவாறாக எமது கடவுளுககு இவவழிபாடுகளடையுமெனறு கூறினா —எ-று (கககக)

இபபடியா லெயதுமென விசைததுநீயிங் கெடுததுககாட டிய துயிலு மியலபினனபோன, மெயபபடிய கரணஙக ளுயிர்தாமிஙகு வேண்டுதியா னுமமிறைவற கானபோது, செபபியவக கநததின விளைவினறுகித திரிவிலலா முததியிறசென றிலனுமானு, னபபடியக கநததது ளறிவுஙகெடடா லமமுததி யுடனினப மணைபாதெனறா

(இ-ள.) இபபடியால எயதுமென இசைதது=மேறகூறியவாறு வருமெனறுகூறி, நீ இஙகு எடுததுககாட்டிய துயிலும இயலபினனபோல=நீ இவவிடதது எடுததுககாட்டிய (உடனபாடு மெய்ம்மையினறி) துயிலுமவனைபபோல, மெயபபடிய கரணஙகள உயிர்தாம இஙகுவேணடுதியால=மெயமமைபொருநதிய விநதிரியஙகளையு முயிரையு மிவவிடத தும்மிறைவனுககு விருமபுகினறாய, நம இறைவறகு ஆனபோது=அவவிநதிரிய கரணஙகளும முதலவனுககுவருஙகால, செபபிய அககநதததின விளைவு இனறாகி திரிவு இலலா முததியிறசெனறிலனு மானான = நீ முறகூறிய பஞசகநதஙகளாறக கெடடு அழிவிலலாத பேரினபமுததியிற செலலாதவனுமானான, அபபடி அககநதததுள அறிவுமகெடடால அமமுததியுடன இனபம அணையாது என றா=நீ கூறியவாறு பஞசகநததசேர டுணாவுங கெடடா லமமுததியினிடததுப பேரினபமான தமமுதலவனை யடையானெனை மறுததருளினா —எ-று

துயிலுமியலபினனபோலெனககாட்டிய திருட்டாநதபபடி, துயிலு றுவோன றலைப்பட்ட உயிருங கரணமுமுடையனுககிலை. கொலலபபடுஙகால பரிசவழிலயிதத விஞஞானநதோனறிக கொலைவாதனையுறே யிறபபண அத னால கரணமுமுயிரும தமமுதலவாககு வேணடபபடும அவவாறு வேண்டபபடுஙகால பஞசகநதமறககெடடு வீடடைாதானெனறவினறுமெனறும, அறககெட்ட வீட்டின இனபம டைநதறிடுஞன உயிருமறககெடுதலின, வீட்டினபமினறுமெனறும மறுததருளினொனறும (கஉ0)

அவவுரைகேட டெதிரமாறற மறைவதின்றி யணைநதுளனம முததியெனு மதாவுமபாழாங, கவவையினின றவனையெதிர் நோககினா னக கடலமுத முணடவாநங காதலனபா, பொயவகையே முநதியி னிறபோனன முனபே பொருளெலலா முணாநதுரைததுப போனு னெனறு, யெவவகையா லவனெலலா முணாநததீது மிலைதுரைப பாயெனினு மேறபோமெனறா.

(இ-ள ) அவவுரைகேடடு எதிரமாறறம அறைவதினறி அணைநது ளன் = அவவாரததைகயைககேட டெதிருததரஞ சொலலாமல சாரிபுதத

னிருந்தான், அமுதத்தியெனும் அதுவும் பாழாம் சுவையில் நின்றவனை எதிர்நோக்கி = தான்கூறிய முத்தியும் பொய்யாயினவென்று சிறுமையடைந்து நின்ற அச்சாரிபுத்தனை யெதிர்நோக்கி, ஞானக்கடல் அமுதம் உண்டவர் தமக்காதல் அன்பர் = ஞானசாகரத்திலுதித்த மெய்ஞ்ஞானவமுதையுண்டருளிய ஆளுடையபிள்ளையார் திருப்பமிக்க சம்பந்த சரணாலயரென்னு மன்பர், பொய்வகையே முத்திபின்புபோனான் முன்பே பொருள் எல்லாம் உணர்ந்து உரைத்துப் போனான் என்று உய = பொய்வழி முத்தியிற்புக்க நும் முதல்வன் முத்தி புகுமுன் எல்லாப்பொருள்களையு முழுதுணர்ந்து அறமுரைத்துப்போனானென்று கூறினும் எவ்வாறாகையால் அவன் எல்லாம் உணர்ந்தது = எவ்வாற்றால் அக்கடவுளெல்லாவற்றையு முழுமையொருங்குணர்ந்தது, ஏதும் இல்லான் = (கணமிஞானமுடைய அம்முதல்வன் கணத்திற்றோன்றிய பல்பொருள்களை யெவ்வாறுணர்வன்) இதுவும் பொருந்தாது, உரைப்பா ரெனினும் ஏற்போம் என்று = அந்தருத்தரங்கூறுவையேல் அதனையாம் அங்கீகரிப்போமென்றருளிச் செய்தார் — எ-று

உத்தரங்கூறல் பொருந்தாமையின், உரைப்பாரெனினுமென்றார். மரம், கற்றைமுதலியவற்றைப் பிரித்தால் வீடும், பற்று, ஊர்முதலியவற்றைப் பிரித்தால் நாடும் இன்றாம்போலச் சந்தானத்தையும் பிரிப்பிலானமாவில்லை யென்பறுதலில், பொய்வகையே முத்தியின்றபோனானென்றார் (௬௨௧)

உணர்வுபொதுச் சிறப்பென்ன விரண்டின்முன்னது ளவான மரப்
பொதுமை யுணர்தலேனைப், புணர்சிறப்பு மரங்களில்வைத் தின்ன
தென்ற லிப்படியால் வரம்பிலாப் பொருள்களெல்லாங், கொண்ரு
மவிறகினைக்குவைசெய் திடினும்வேறு குறைத்தவற்றைத் தனித்தனி
யே யிடினும்வெந்தீத், துணர்க்குவிச் சுடவல்ல வாறுபோலத் தொகு
த்துமவிரித்துந் தெரிக்குந் தொல்லோனென்றான்

(இ-ள்) உணர்வு பொதுச்சிறப்பென்ன இரண்டில் = பொதுவுணர்வுஞ் சிறப்புணர்வுமெனக் கூறுமிவ்விரண்டில், முன்னது உளவான மரப்பொதுமை உணர்தல் = முற்பட்ட பொது உணர்வானது தூரத் தேவனத்தைப் பார்த்து அவ்வனத்தின்கணுள்ள மரப்பொதுமையை யுணர்தலாம், ஏனைப் புணர்சிறப்பு = மற்றப் பொருந்திய சிறப்புணர்வானது, மரங்களில் வைத்து இன்னது என்றல் = அவ்வனத்திலுள்ள மரப்பொதுமையின் சமீபத்தையடைந்து நின்று ஈது கருங்காலி, இது ஆயில், இது தேவதாரு, இது கொடி, இது செடியெனத் தனித்தனி யின்னதின்னதென்று கூறுதல், இப்படியால் வரம்பு இல்லாப் பொருள்கள் எல்லாம் = இவ்விருவகையுணர்வால் எண்ணிறந்த வெல்லாப்பொருள்களையும், கொண்டும் விறகினைக் குவைசெய்திடினும் வேறு குறைத்து அவற்றைத் தனித்தனியே இடினும் = கொண்டுவந்த விறகைக் குவியல்செய்து ஒருவன் தன்னையிடினுந் தனித்தனி வெட்டி வேறு வேறாயிடினும், வெந்தீத் துணர்க்குவிச் சுடவல்லவாறுபோல = கொடிய தீயினது கொ

ழுந்து அவற்றைப்பற்றிச் சுட்டவல்ல வகைமைபோல், தொகுத்தும் விரித்தும் தெரிக்கும் தொல்லோன் என்றன=பொதுவான சவிகற்பஞானத்தாற் றொகுத்துணர்ந்தும் சிறப்பான சவிகற்பஞானத்தாற் றனித்துணர்ந்தும் பொருளியல்பையு மறங்களையுமெங்கோன் சொல்லியருளினன் என்றன —எ-று

இனம்பற்றிக்கொடிமுதலிய வருவிக்கப்பட்டன வகை - தனித்தனி பலவாகுங்கால் விரியாதலில், விரித்தென்றார் (கூ௨௨)

எடுத்துரைத்த புத்தனெதிரியம்புமன்ப ரெரியுணர்வுக் கெடுத்துக்காட்டாகச்சொன்னா, லடுத்தவுணர் வுருவுடைய தன்றுசொன்ன வல்லவடிவிற் றுமதுவு மறிதிநுங்கோன், றொடுத்தநிகழ் காலமேய னறியேனைத் தொடர்ந்தவிரு காலமுந்தொகக் கறியுமாகிற், கடுத்தவெரி நிகழ்காலத்திட்டதல்லாற் காணாத காலத்துக் கதுவாதென்றார்

(இ-ள்) எடுத்து உரைத்த புத்தன் எதிர் இயம்பும் அன்பர்=இவ்வாறெடுத்துக்கூறிய சாரிபுத்தனெதிரே சம்பந்தசரணாலயரென்னு மடியார்கூறுவார், எரி உணர்வுக்கு எடுத்துக் காட்டாகச் சொன்னால்=நீ நெருப்பை இருவகையுணர்விற்கும் திருஷ்டாந்தமாகக்கூறின், அடுத்த உணர்வு உரு உடையது அன்று=அத்திருஷ்டாந்தத்தையேற்ற தார்ஷ்டாந்திகமென்னு மறிவானது நீ கூறும் ரூபகாந்தத்தின் பகுப்பான உருவுடையதன்று, சொன்ன அல்ல வடிவிற்றும் அதுவும் அறிதி=உவமைகூறிய நெருப்பானது ரூபமுடையதாம் அது மாறுபடுமென்பதையும் நீ அறியாய் (அதுவன்றி), நுங்கோன் தொடுத்த நிகழ்காலமே அன்றி ஏனைத்தொடர்ந்த இருகாலமும் தொகக்கு அறியுமாகில்=உமது முதல்வன் தொடர்ந்த நிகழ்காலமேயல்லாமல் ஏனைய இறந்தகாலமெதிர்காலங்களையும் பொருந்தியறியுமெனில், கடுத்த எரி நிகழ்காலத்து இட்டதல்லால் காணாத காலத்துக் கதுவாது என்றார்=வெம்மையையுடைய நெருப்பு நிகழ்காலத்திட்ட விறகினைச் சுடுதலன்றி இறந்தகாலத்து மெதிர்காலத்துக் கழிந்தனவும் வருவனவுமாய விறகினைச்சுட மாட்டாதென்றருளினார் -எ-று.

எரியுவமை,ஏகதேசமாயக்கொள்ளினும் செயலாலும் மாறுபட்டதென மறுத்தனர் (கூ௨௩)

ஆதலினு னிறைவன் பொருள்களெல்லா மறிந்தது நும்முத்திபோலாயிற்றன்றே, யேதமா மிவ்வறிவா லுரைத்தநூலு மென்ற வனுக் கேற்குமா றருளிச்செய்ய, வாதமா றொன்றினறிந் தோற்றான் புத்தன் மற்றவனை வென்றருளிப் புகலிமன்னர், பாதநா மரைபணிந்தா ரன்பாதங்கள் பான்மையழி புத்தர்களும் பணிந்துவீழ்ந்தார்

(இ-ள்) ஆதலினால் உன் இறைவன் பொருள்கள் எல்லாம் அறிந்ததும் நும்முத்திபோல ஆயிற்றன்றே=அவ்வாறாகையால் உமது முதல்வன் எல்லாப்பொருள்களையு மறிந்ததும் உம்முடைய முத்திபோற்பாழாயிற்று, ஏதமாம் இவ்வறிவால் உரைத்தநூலும் என்று அவனுக்கு ஏற்குமாறு அருளிச

செய்ப=குற்றமாமிவ்வகையறிவா ருணர்ந்துரைத்த வுன்பிடகநூலுமென்று அச்சாரிபுத்தனுக்குப் பொருந்துமவ்வண்ணஞ் சம்பந்தசரணாலய ரருளிச்செய்ய, வாதம் மாறு ஒன்று இன்றித்தோற்றனன்புத்தன் = எதிர்வாதம் யாதொன்றுமின்றிப் புத்தன்றோல்வியடைந்தான், மற்றவனை வென்றருளிய புகலிமன்னர் பாதத்தாமரை பணிந்தார் அன்பர் = அச்சாரிபுத்தனை வென்ற ஆளுடையபிள்ளையாரது திருவடித்தாமரைகளை வணங்கினார் சம்பந்தசரணாலயர், தங்கள் பான்மை யழிபுத்தர்களும் பணிந்து வீழ்ந்தார் = தம் நிலைமைகெட்ட சாரிபுத்தன்முதலிய புத்தர்களும் நிலமுறவணங்கிப் பிள்ளையார் திருவடியில் விழுந்தார்கள் —எ-று.

உயிருண்மைகொள்ளாது கண்பங்கஞானங் கொண்டவனுக்கு முன்னின்ற உணர்வுபங்கப்படுதலில் பொருளொருங்குணர்தல் பொருந்தாதென்பார், பொருள்களெல்லாமறிந்து நமமுதற்போலாயிற்றென்றும், இவ்வாறு சிற்றறிவாற் கூறியநூல் மாறுபட்ட பொருளுண்மையால், ஏதமாமிவ்வறிவா ருணர்ந்த நூலுமென்றும், அந்நூலிலுள்ள மாறுபட்டபொருள்களை மறுத்து அவனுக்குப் பொருந்தக்கூறுதலில் ஏறுமாறருளிச்செய்யவென்றுங்கூறினார்.

பொருள்சொல்லாமென்றதனால்-மாத்திமிகன், யோகாசாரன், சௌத்திராந்திகன், வைபாடிகனென்னும் புத்தர் நால்வருள் மறுக்கப்பட்ட சாரிபுத்தன் வைபாடிகனென்னும் எனின்? மாத்திமிகன், கபாலத்திற்குடம்போல அவயவத்திற்றோன்றும் பொருள்கள் அவ்வவயவ நீக்கத்துச் சத்தென்றும், அசத்தென்றும், சதசத்தென்றும் சொல்லக்கூடாமையின் உள்ளும் புறம்புமான பொருள்களெல்லாஞ் சூனியமென்று சொல்லுவன் யோகாசாரன், மேயப்பொருள்களும் புத்திமாத்திரமேயன்றி யில்லையென்பன் சௌத்திராந்திகன், புத்தியாலமேயப்பொருள்களெல்லா மனுமிக்கப்படுமென்பன் வைபாடிகன், அவ்வாறேபோற்கூறாது பிரத்தியட்ச சித்தமானமேயப்பொருள்களும் புத்தியுமுண்டென்று கூறுவன் முன்பே பொருளெல்லா முணர்ந்துரைத்துப் போனானென்று யென்றது மிகக்கருத்தானெனக் புத்தி=விஞ்ஞானம் புத்தியே யெல்லாவற்றையுமறியுமென்றல்லில், புத்தனென்னும் புத்தியெல்லாவற்றையுமறியுமென்றலும் கண்பங்கமும் மாத்திமிகனொழிந்த மூவர்க்குமொக்கும்.

அந்நூலுள் மாறுபட்ட பொருள்களாவன - ஓர்கடவுள் உலகத்தைப் படைக்கவில்லையென்றலும், பொருள்களெல்லாஞ் சாயிற்றென்று மென்றலும், படைத்தலிற் பயன் யாதென்றலும் விளையாட்டெனில், அக்கடவுள் சிறுவன்போல நியமமின்றிச் செய்வனென்றலும், அதனாற் றுக்கமடைவனென்றலும், பொருள்களெல்லாம் கண்பங்கமடையுமென்றலும், குடத்தில் குடத்தன்மையென்னுஞ் சாதியுள்ளதாயிற் குடமுடைந்துழி அதற்கு ஆதாரமின்று. அழிந்ததாயில், அது நித்தியமன்று வேறிடத்துச்சென்றதாயில், பொருளார்தல் வேண்டும். அதனால், சாமானியமென்னுஞ் சாதி நித்தியமாய்க்கொள்ளுதல் பொருந்தாதென்றலு முதலியன.

பொருந்தக்கூறுதலாவது - உலகு பூதாத்தமாய்ச் சடமாய் அவயவமுடைத்தாய பல விசித்திரப்பொருளாதலில் அது காரியமெனப்படும். யாது காரியம்? அது ஓர்கருத்தாவையுடைத்து குடம்போல என்றதனால் உலகு இன்றியமையாச்சிறப்பின்றாய கருத்தாவையுடைத்தென்றும், சார்பிற்றோன்றுமேல், தோன்றும்பொருள் உபாதான காரணத்துள்ளதாயின் வினைமுதலால் உதிக்கும்; இல்லதாயில், முயற்கோடுபோல உதியாதாம்; காரணத்தில்லாதது உதிக்குமேல் நெற்கமுகாய் நீளவேண்டும். ஆகலின் சார்பில் எவ்வாறு உதிக்கும்? பின்யாதுதிக்குமெனில், உள்ளதுமில்லதுமாய பொருளுதிக்கவேண்டும். உள்ளதுமில்லதுமாய பொருள் விருத்ததன்மமுடைமையின் எவ்வாறுதிக்குமெனின், நன்குசொன்னாய்.

ஓர்காலத்துள்ளது மில்லதுமாயின் விருத்ததன்மமாம். அவ்வாறன்றிக் காரியகாலத்திற் சத்திரூபந்திரிந்து வியத்திரூபமாயுள்ளதுமின்றிக் காரணகாலத்தில் வியத்திரூபந்திரிந்து சத்திரூபமாயில்லதுமின்றி யுள்ளதாயபொருளுதிக்கும். இதுவே உள்ளது மில்லதுமாய காரியப்பொருளுதிக்குமென்னுஞ் சற்காரியவாதம். நீ கூறுவது காரணத்தின்றுமில்லாத காரியமுதிக்குமென்னு மசத்காரிய வாதமும் உபாதான சூனியவாதமுமாமென்றும், அவ்வாறுதிக்குநாளில் சத்திரூபமாய பிரபஞ்சத்தைத்திரித்து வியத்திரூபமாகலும், ஒடுங்குநாளில் வியத்திரூபந்திரித்துச் சத்திரூபமாகலுமாய தொழில்களை முதற்காரணம்பற்றாக நின்று செய்யுமோர் முதல்வன்வேண்டும். அம்முதல்வன், வேதாகமங்கள் கூறும் முற்றறிவும் வரம்பிலாற்றலுமுடைய சிவபெருமானேயாமென்றும், அம்முதல்வன், தன்பயன் கருதாது ஆன்மாக்களின்பொருட்டுக் காலகன்ம நிமித்தமாயப் பஞ்சகிருத்தியஞ்செய்வரென்றும், அத்தொழில், அருள்விளையாட்டென்றும், அச்சுறு பாலர்போல நியமமின்றிச் செய்யாரென்றும், சங்கற்பத்தாலெல்லாத்தொழிலுஞ் செய்யவல்லவராதலில், அதனாலிளைப்படையாரென்றும், அப்பொருள்களெல்லாங் கணபங்கமெனில், ஞானமிருக்குங்கால் ஞேயமும், ஞேயமிருக்குங்கால் ஞானமுமின்றாகவேண்டும். அன்றே, ஆத்தக்கிரியாகாரியத்துவமுஞ் சித்திக்கமாட்டாது. முற்கணத்திற்செய்த புண்ணியபாவங்கள் அக்கணத்துக் கெடுதலில், சொர்க்க நிரயங்கள் காலாந்தரத்திற் பலித்தலின்றாம். அதுவன்றி ஆன்மாக்கணத்தில் நட்டப்பட்டதேல், ஒருவன்செய்ததை யொருவன் புசிக்கவருவதுபோலப் பங்கப்பட்ட ஆன்மாவின் புண்ணியபாவத்தை வருங்கணத்திலான்மா புசிக்கவேண்டும். நெடுங்காலமாயும் பாலியாவத்தையில் நானிது செய்தேனென்னு மிருதியுணர்வுதோன்றுதலுமின்று. அவ்வாறுசொற்பனத்தினிகழ்ந்ததைச் சாக்கிரத்துக்கூறுதலுங் கூடாமையின், ஆன்மா நித்தியமேயன்றிக் கணமெனப்படும் மாறுபடுமென்றும், பிரத்தியட்ச சித்தமாயுள்ள மெய்ப்பொருள்களைக் கணமென்றல் பிராந்தியென்றும், சாமானியங்கொள்ளாவிடிற் குடம், ஆடைமுதலிய பொருள்கட்கு வேறுபாடின்றாம். அச்சாதி நித்தியமாயப் பொருட்கு வேறாய் நையாயிகர்கொள்வர். சைவர், பொருளோடு



திருஞானசம்பந்தசுவாமிகள் சம்பந்த சரணாலயரைக்கொண்டு புத்தனை வாதித்துத் தோல்வியடைவித்தது.



திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு முன் தோல்வியடைந்த பவுத்தர்கள் விபூதிப்பிரசாதம் தரித்து சைவர்களாயின.

வேற்றுமையினறிக்கொள்வர் அதனால், மாறுபடுதலின்றென்றும் மறுத்து உண்மைகூறுதலாம். (௱௨௪)

புந்தியினா லவருணர்த்த பொருளின்றன்மை பொருளன்றாம் படியன்பர் பொருந்தக்கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச்சைவ மல்லாது மற்றொன்று மில்லையென்றே, யந்தமில்சீர் மறைகளாக மங் களேனை யகிலகலைப் பொருளுணர்ந்தா ரருளிச்செய்யச், சிந்தையி னிலதுதெளிந்து புத்தர்சணைபைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந்தார்

(இ-ள்) புந்தியினால் அவர் உணர்த்தபொருளின்றன்மை பொருள் அன்றாம்படி அன்பர் பொருந்தக்கூற = புத்தியினால் அப்புத்தர்கள்கூறிய பொருட்டன்மையைப் பொருளல்லவென்று அவர்தெரியும்படி சம்பந்தசரணாலயர் பொருந்தக்கூற, மந்தவுணர்வு உடையவரைநோக்கிச் சைவம் அல்லாது மற்றொன்றும் இல்லையென்றே=மந்தபுத்தியுடைய அப்புத்தர்களைப்பார்த்துச் சைவசமயமல்லாது வேறுசமயங்கள் யாதொன்றும் மெய்ப்பொருளுடையனவல்லவென்று; அந்தமில் சீர்மறைகள் ஆகமங்கள் = அளவில்லாத சிறப்பினையுடைய நான்குவேதங்களும் காமிகமுதலிய இருபத்தெட்டாகமங்களும், ஏனை அகில கலைப்பொருள் உணர்ந்தார் அருளிச்செய்ய=அவைஅல்லாத ஏனையவேதாங்கமும் மீமாம்சையும் நியாயமும் புராணமும் தருமசாத்திரமு முதலிய வெல்லாநூல்களையு மோர்ந்துணர்ந்த ஆளுடையபிள்ளையா ரருளிச்செய்ய, சிந்தையினில் அதுதெளிந்து புத்தர்சணைபைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச்சென்று தாழ்ந்தார் = தம்மனத்தி லதனையுணர்ந்து புத்தர்களெல்லாரும் சீகாழியி லவதரித்த பிள்ளையாரது சிவந்த திருவடிக்கீழடைந்து வணங்கினார்கள் —எ-று

அகிலமென்றதனாற் சித்திகூறும் அதிமார்க்கநூலுங் கொள்க என வேமுறைகூறிய நால்வகை ஞானமும் உணர்ந்தமை போந்தவாறுகாண்க-எ-று

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணைநோக்க மணைதலினாலறிவின்மை யகன்றுநீங்கி, முன்றொழுது விழுந்தெழுந்து சைவரானார் முகைமலர்மாரியின்வெள்ளம் பொழிந்ததெங்கும், நின்றனவுஞ் சரிப்பனவுஞ் சைவமேயா நிலைமையவாகக் கருள்செய்து சண்பைவேந்தர், சென்றுசிவ ஞானபதிகள் பணியவேண்டித் திருக்கடவூ ரதன்மருங்கு சேரவந்தார்

(இ-ள்) அன்று அவர்க்குக் கவுணியர்கோன் கருணைநோக்கம் அணைதலினால் அறிவின்மை அகன்று நீங்கி=அப்பொழுது அப்புத்தர்களுக்குப் பிள்ளையார் திருவருட்பார்வை பொருந்துதலினால் தமதறியாமையினின்றும் நீங்கி; முன்தொழுது விழுந்தெழுந்து சைவரானார் = திருமுன்பு தொழுது

பணிநதெழுநத சைவாானாாகள , எஙகும முகைமலாமாாியின வெளளம பொழிநதது=எவவிடததும அருமபவிழநத பூமழைபொழிநதது , நினறன வும சரிபபனவும சைவமேயாம நிலைமை அவாககருளசெயது=உலகினகண நிறபனவான தாவரஙகளுஞ சரிபபனவான சஙகமஙகளுஞ சிவசமபநதமே யாமெனனும நிலைமையை அப புததாகளுக கருளசெயது, சணபைவேநதா செனறு சிவஞானபதிகள பணியவேணடித திருககடவூா தனமருஙகு சேரவந தாா=ஆளுடையபிளளையாரஙகு நினறெழுநதருளிச் சிவபெருமானெழுநத ருளியதிருபபதிகளைவணஙக விருமபித திருககடவூாின பககததுபபொருநத வநதருளினாா.—எ-று (கூஉசு)

வேறு

அநநகரி லடியாா களெதிாகொளளப புககருளிக
கொனனவிலுங கூறறுதைததாா குாைகழலகள பணிநதேததி
மனனியமாந துறையுநாள வாகீச மாமுனிவ
ரெநநகரி லெழுநதருளிற றெனறடியாா தமைவினவ

(இ-ள) அநநகரில அடியாாகள எதிாகொளளபபுககருளி=அததிரு ககடவூாி லடியவாாகள தமமை யெதிாகொளளுமபடியாக அததிருபபதியிற புகுநதருளி , கொனனவிலும கூறறு உதைததாா குாைகழலகள பணிநது ஏததி=மேனமைமிகக இயமனையுதைதத அமூாததகடேசரது ஒலிககினற வீர ககழலகளணிநத திருவடிகளைவணஙகித துதிதது , மனனியமாநது உறையு மநாள = அததிருபபதியில நிலைபெறறுப பிளளையா ரெழுநதருளியிருககும நாளில , வாகீசமாமுனிவா எநநகரில எழுநதருளிறறு எனறு அடியாாதமை வினவ=ஆணட அரசு எததிருபபதியி லெழுநதருளியிருநதாரெனறு அடியாா கூடடததை வினவியருளுஙகால —எ-று (கூஉஎ)

அஙகவரு மடிபோறறி யாணடவா செழுநதருளிப
பொஙகுபுனற பூநதுருததி நகாினகட போறறிசைததுத
தஙகுதிருத தொணடுசெயு மகிழசசியினுற சாாநதருளி
யெஙகுநிகழந திடவிருநத படியெலலா மியமபினாா

(இ-ள) அஙகவரும அடிபோறறி = அவவடியாாகளும பிளளையாா திருவடிகளைவணஙகி , ஆணட அரசு எழுநதருளி = வாகீசமுனிவ ரெழுநத ருளி , பொஙகுபுனற பூநதுருததி நகாினகடபோறறிசைதது = பொலிவு பொருநதிய நீாசூழநத திருபபூநதுருததி நகாினகண சிவபெருமானைததுதி தது , தஙகு திருததொணடுசெயயும மகிழசசியினுற சாாநதருளி = நிலைபெ றற திருததொணடுசெயயுங களிபபால அஙகிருநதருளி , எஙகும நிகழநதிட இருநதபடியெலலாம இயமபினாா=எவவிடததும புகழபெருகவிருநத வண ணமெலலா மெடுததுககூறினாாகள.—எ-று (கூஉஅ)

அப்பரிசங் கவர்மொழிய வாண்ட வரசினைக்காணு
மொப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க வொளிபெருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கியருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார்.

(இ-ள்,) அப்பரிசு அங்கவர்மொழிய = அவ்வாறு அவ்வடியார்கள் கூற, ஆண்ட அரசினைக்காணும் ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க=வாகீச முனிவரைத் தரிசிக்கு மொப்பில்லாத பெருங்காதல் மேம்பட, ஒளிபெருகு மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி அருள்பெற்று=ஒளிமிக்க மேகம்போலுங் கரியகண்டத்தையுடைய அமிர்தகடேசரது திருவடிகளை வணங்கி அவர் அருள்பெற்று, செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார்செல்கின்றார் = சொல்லுதற்கரிய புகழையுடைய சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையார் திருக்கடவூரினின்று மெழுந்தருளுவாராயினார் —எ-று (கூஉகூ)

பூவிரியுந் தடஞ்சோலைப் புடைபரப்பப் புனல்பரக்குங்
காவிரியின் றென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தவிடம்
மேவியினி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரசருழைச்சண்பை நகரரசர் நண்ணுவார்.

(இ-ள்) பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப்புனல்பரக்கும்=மலர்கள் விரியும் பெரிய சோலைகளின் பக்கங்களில் பரவும்படி நீரைச் சூழச்செய்யும், காவிரியின் தென்கரைபோய் = காவிரியினது தென்கரையின்மேற் சென்று, கண்ணுதலார் மகிழ்ந்த இடம் மேவி இனிது அமர்ந்து இறைஞ்சி= சிவபெருமானெழுந்தருளிய திருப்பதிகளையடைந்து இனிதாக அன்புகூர்ந்து வணங்கி, விருப்புறுமெய்த் தொண்டரொடு நாவரசருழைச் சண்பைநகர் அரசர் நண்ணுவார்=பேரன்பினையுடைய அடியார் திருக்கூட்டத்தோடு திருநாவுக்கரசரிடத்துச் சீகாழிநகரரசராகிய பிள்ளையார் சென்றருளுவாராயினார்.எ-று

அந்தணர் சூளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயனென்று முகமலர வகமலர்வார்.

(இ-ள்.) அந்தணர் சூளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக=மறையவர் சிரோமணியாகிய பிள்ளையார் திருப்பூந்துருத்திக்குச் சமீபமாக, வந்தருளும் பெருவார்த்தை வாகீசர்கேட்டருளி=எழுந்தருளிவரும் பெருவார்த்தையை ஆண்ட அரசர்கேட்டருளி, நந்தமை ஆளுடையவரை நாம் எதிர்சென்று இறைஞ்சுவது = நம்மையாளாகவுடைய பிள்ளையாரைநாம் எதிர்கொண்டு வணங்குவது, முந்தைவினைப்பயனென்று முகமலர அகமலர்வார் = முன்செய்த நல்வினைப்பேறென்று முகமலர்ச்சியுடைய மனமகிழ்வாராய —எ-று. (கூஙக)

எதிர்சென்று பணிவன்என் றெழுகின்ற பெருவிருப்பா
னதிதங்கு சடைமுடியார் நற்பதங்க டொழுதந்தப்
பதினின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பான்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார்

(இ-ள்) எதிர்சென்று பணிவன் என எழுகின்ற பெருவிருப்பால் = பிள்ளையாரை எதிர்கொண்டு வணங்குவேனென்று எழாநின்ற பெருங்காதலால், நதி தங்குசடைமுடியார் நற்பதங்கள்தொழுது = கங்காநதிதங்கிய சடைமுடியையுடைய பொய்யிலியாரது திருவடிகளைவணங்கி, அந்தப்பதி நின்றும் புறப்பட்டு = அத்திருப்பூந்துருத்தியினின்று மெழுந்தருளி, பரசமய சிதைத்தவர்பால் முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்தவந்து அணைந்தார் = பரசமயங்களைக்கெடுத்த ஆளுடையபிள்ளையாரிடத்து மிக்கபெரிய தவத்தினையுடைய ஆண்ட அரசர் அப்பிள்ளையார் திருமுன்புவரத்தடைந்தருளினார்.—எ-று. (௩௫௨)

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற வார்வத்தாற் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணா வகைநிலத்துப் பணிந்துள்ள
முருக்கியெழு மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடனணைந்தார்

(இ-ள்) திருச்சின்னம் பணிமாறக்கேட்ட நாற்றிசை உள்ளோர் = காளஞ்சின்னந் தாரையென்னுந் திருச்சின்னமூன்றும் ஆளுடையபிள்ளையார் திருநாமங்களைப் பணிமாறக்கேட்ட நான்குதிக்கிலுள்ளோரும், பெருக்கின்ற ஆர்வத்தால் பிள்ளையார் தமைச்சூழ்ந்த நெருக்கினிடை = அதிகரிக்கின்ற விருப்பால் பிள்ளையாரைத் தரிசிக்கும்படிச் சூழ்ந்த நெருக்கில், அவர்காணாவகை நிலத்துப்பணிந்து = பிள்ளையார் காணாதவண்ணம் பூமியிலேவணங்கி, உள்ளம் உருக்கியெழும் அன்பு ஓங்க = மனசையுருக்கி யெழாநின்ற அன்புமேம்பட, தொண்டர்குழாத்துடன் அணைந்தார் = அடியார் கூட்டத்துடன் சென்றருளினார்.—எ-று. (௩௫௩)

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே
சிந்தைகளிப் புறவந்தார் திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார்.

(இ-ள்) வந்து அணைந்த வாகீசர் வண்புகலிவாழ்வேந்தர் = பிள்ளையார் திருமுன் திருக்கூட்டத்தை வந்துசேர்ந்த வாகீசமுனி[illegible]வ[illegible]ம்பொருந்திய புகலியின் கண்வாழுந் தலைவராகிய ஆளுடையபிள்ளையாரது, சந்தமணித்திருமுத்தின்சிவிகையினைத்தாங்கியே = அழகிய வரிசையான முத்தாலாய சிவிகையைத்தாமுந் தாங்கிக்கொண்டு; சிந்தைகளிப்புறவந்தார் திருவு

ள்ளக்களிப்போடு வந்தருளினார்; திருஞானசம்பந்தர் புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார் = ஆளுடையபிள்ளையார் திருவுள்ளத்து ஆண்டவரசெங்கிருக்கின்றாரென்று ஓராயம் நிகழ்வுழி முன்னின்றாரை நோக்கி வினவுவாராயினார் —எ-று (௯௧௪)

அப்பர்தா மெங்குற்றா ரிப்பொழுதென் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்
ரொப்பரிய தவஞ்செய்தே னாதலினா லும்மடிக
ளிப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார்.

(இ-ள்) அப்பர்தாம் எங்குற்றார் இப்பொழுதென்று அருள்செய்ய = வாகீசர் இப்பொழுது எவ்விடத்திருக்கின்றாரென்று அடியார்களை வினவியருள, செப்பரியபுகழ்த்திருநாவுக்கரசர்செப்புவார் = அப்பொழுது சொல்லுதற்கரிய புகழையுடைய வாகீசமுனிவர் அருளிச்செய்கின்றார், ஒப்பரியதவம் செய்தேன் ஆதலினால் = ஒப்பில்லாததவத்தைச்செய்தேனாதலால், உம்மடிகள் இப்பொழுது தாங்கிவரப்பெற்று உய்ந்தேன் யான் என்றார் = உமது திருவடிகளை இப்பொழுது சுமந்துவரும்படி பெற்று அதனால் அடியேனுய்ந்தேனென்றருளிச்செய்தார் —எ-று (௯௧௫)

அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனியின்மே லிழிந்தருளி
யிவ்வாறு செய்தருளிற் றெனென்னுமென் றிறைஞ்சுதலுஞ்
செவ்வாறு மொழிநாவர் திருஞான சம்பந்தர்க்
கெவ்வாறு செய்தகுவ தென்றெதிரே யிறைஞ்சுதலும்.

(இ-ள்) அவ்வார்த்தைகேட்டு அஞ்சி = அத்திருவார்த்தையைக்கேட்டு பிள்ளையாரச்சமுற்று, அவனியின்மேல் இழிந்தருளி = (திருச்சிவிகையினின்றும்) பூமியிலிழிந்தருளி, இவ்வாறு செய்தருளிற்று என்னும் என்று இறைஞ்சுதலும் = இவ்வகைசெய்தருளியது அடியேனுக்கு எவ்வாற்றன் குற்றத்தை விளைக்கத்தக்கதென்று ஆண்ட அரசை வணங்கவும், செவ்வாறுமொழிநாவர் திருஞானசம்பந்தர்க்கு = செப்பமான மதுரமொழியையருளிச் செய்யும் நாவையுடைய அப்பர்சுவாமிகள் திருஞானசம்பந்தருக்கு, எவ்வாறு செய்தக்குவது என்று எதிரே இறைஞ்சுதலும் = அடியேன் இச்சிவிகை தாங்குதலன்றி வேறு பணியாது செய்யத்தகுவதென்று கூறிப் பிள்ளையாரெதிரே வணங்கவும் —எ-று (௯௧௬)

சூழ்ந்துமிடைந் தருகணையுந் தொண்டரெல்லா மதுகண்டு
தாழ்ந்துநில முறவணங்கி யெழுந்ததலைக் கைகுவித்து
வாழ்ந்துமனக் களிப்பினராய் மற்றிவரை வணங்கப்பெற்
றுழந்தபிறப் புய்ந்தோமென் றண்டமெல்லா முறவார்த்தார்.

(இ-ள.) சூழ்ந்துமிடைந்து அருகணையும தொணடரெலலாம அது கண்டு=அருகிறசூழநது நெருஙகிவருமடியாாகளெலலா மதனைககண்டு, தாழநது நிலமுறவணஙகி எழுநது தலைகைகுவிததது=நிலததிற பொருநதவிழுநது வணஙகிச சிரசிலே திருககரஙகளைககுவிதது (அதனுடீ), வாழநது மனககளிபபினராய=வாழவடைநது மனககளிபபுடையவராய, மறறிவரைவணஙகபபெறறு ஆழநத பிறபபு உயநதோமெனறு அண்டமெலலாம் உற ஆாததாா=இவவாகீசமுனிவரை நாம வணஙகபபெறறதலா லாழமான பிறவிககடலினினறுங கரையேறபபெறறோமெனறு கூறி யணடஙகளெலலாம (அரவெனனுமோசை) யுறுமபடி யாரவாாிததாாகள (கூகஎ)

திருஞான சமபநதா திருநாவுக கரசாதமைப
பெருகாாவத தொடுமணைநது தழீஇககொளளப பிளளையாா
மருவாரு மலரடிகள வணஙகியுடன வநதணைநதாா
பொருவாருமப புனறசடையாா மகிழநததிருப பூநதுருததி.

(இ-ள.) திருஞானசமபநதா திருநாவுககரசாதமை=ஆளுடையபிளளையாா வாகீசமுனிவரை, பெருகு ஆாவததொடும அணைநது தழீஇககொளள=மிககககாதலோடுஞ சமீபிததுககட்டித தழுவிககொளள, பிளளையாா மருவாரும மலரடிகள வணஙகி உடன=பிளளையாரது வாசனைபொருநதிய தாமரைமலாபோனற திருவடிகளைவணஙகும வாகீசமுனிவருடன, பொருவாரும புனறசடையாா மகிழநததிருபபூநதுருததிவநதணைநதாா=கரையோடுபொருதலைசசெயயுங கஙகையையணிநத சடாமுடியையுடைய பொயயிலியாரொழுநதருளிய திருபபூநதுருததியையடைநதருளினாா —எ-று (கூகஅ)

அன்பாசூழாத தொடுஞசெலவா ரானேறறாா மகிழகோயின்
முனபணித தாகசசெனறு கோபுரததை முன்னிறைஞசித
துன்பமிலாத திருததொண்ட ருடனறொழுது புககருளி
யெனபுருக வலஙகொணடு பணிநதேததி யிறைஞசினாா.

(இ-ள்) அன்பா சூழாததொடும செலவாா = அடியாாகூட்டததுடனெழுநதருளும் ஆளுடையபிளளையார், ஆன ஏறறாாமகிழகோயில முனபு அணிததாகசசெனறு=பொயயிலியாரொழுநதருளிய திருககோயிலின முனபு சமீபமாகவெழுநதருளி, கோபுரததை முன இறைஞசி = திருககோபுரததை முனனேவணஙகி, துனபம் இலாத திருததொணடருடன தொழுது புககருளி = தமககொருசிறிதும துயரிலாத திருததொணடர்களுடனவணஙகி யுளளே புகுநதருளி, என்பு உருகவலஙகொண்டு பணிநது ஏததி இறைஞசினாா = எனபுநெககுருகும்படி வலமாகவநது வணஙகிப பதிகமபாடித துதிததருளினாா.—எ-று. (கூகக)

பொய்யிலியா ரைபபணிநது போறறியே புறததணைவாா
செயயசடை யாாகோயிற றிருவாயின் முனனுகை

மையறுசீர தொணடாகுழாம வநதுபுடை சூழவுல
குயயவரு வாரதஙக ளுடனமகிழநதங கினிதிருந்தாா.

(இ-ள) பொயயிலியாரைபபணிநதுபோறறியே புறதது அணைவார் = திருபபூந துருத்தியிலெழுநதருளிய பொயயிலியென்னுந் திருநாமத்தையுடைய பெருமானைவணஙகித துதிததுப புறதசெழுந்தருளுவாராகிய ஆளுடையபிளளையாரும ; செயயசடையாா கோயிறறிருவாயில முன்னுக = சிவநதசடையையுடைய பொயயிலியாரது திருககோயிறறிருவாயிலின்முனபு, மையறுசீரதசொணடா குழாமவநது புடைசூழ = குறறமறற புகழையுடைய திருவடியாா கூடடந தமமைவநது மருஙகிறசூழ, உலகு உயயவருவாா = வாகீசமுனிவரும, தஙகளுடனமகிழநது அஙகு இனிது இருநதாா = தமமுடன கலநது மகிழகூாநது அவவிடததினிதாக எழுநதருளியிருநதாாகள —எ-று.

புறததணைவாரு முயயவருவாருந தொணடாகுழாமவந்து புடைசூழத தஙகளுடன மகிழநதிருநதாரெனக கூடடுக. (௯௪0)

வேறு

வாககின றனிமனனா வணபுகலி வேநதாதமைப
போககும வரவும வினவப புகுநதசெலலாந
தூககின றமிழவிரகா சொலலிறநத ஞானமறை
தேககுந திருவாயாறசெபபி யருளசெயதாா

(இ-ள) வாககின தனிமனனா வணபுகலிவேநதாதமைப போககும் வரவும வினவ = திருநாவுககரசா வளமபொருநதிய சீகாழிததலைவராகிய ஆளுடைய பிளளையாரை மதுரைக கெழுநதருளிய செலவையுமஙகு நினறு மீணடெழுநதருளும வரவையும வினவியருள, புகுநத எலலாம தூககின் தமிழவிரகா சொலலிறநத ஞானமறை தேககும திருவாயாறசெபபி அருளசெயதாா = அஙகுநிகழநத செயதிகளையெலலாம ஆராயதலின மிகக முததமிழ விரகராகிய ஆளுடையபிளளையாா சொலவளம நிறைநத ஞானமயமான வேதஙகள நிறைநது தெவிடடுந திருவாயினறு சொலலியருளினாா.—எ-று.

காழி யினிலவநத கவுணியாதம போரேறறை
யாழிமிசைக கனமிதபபின வநதா ரடிவணஙகி
வாழிதிருத தொணடெனனும வானபயிாதா ேனுஙகுதறகுச
சூழும பெருவேலி யானீ ரெனதசொழுதாா.

(இ-ள) காழியினிலவநத கவுணியாதமபோா ஏறறை = சீகாழியில வதரிதத கவுணியகுலத தலைவரான ஆளுடையபிளளையாரை; ஆழிமிசைககல மிதபபின வநதார் அடிவணஙகி = கடலில் கறறூணாகிய புணையிலவநது கரையேறின ஆணட அரசா திருவடிகளை வணஙகி, வாழிதிருததொணடென்னும

வான்பயிர்தான ஓங்குதற்கு=சிவபெருமானது திருத்தொண்டெனனும் பெரியபயிர்தழைத்தற்கு, சூழும் பெருவேலியானீர் என்றுதொழுதார் = சூழ்ந்த பெரியவேலியானீரென்று வணங்கினார் —எ-று (௬௪௨)

பிள்ளையார் தாமும்அவர் முனதொழுது பேரனபின
வெள்ள மனையபுகழ் மானியார் மேனமையையுங
கொள்ளும பெருமைக குலச்சிறையார் தொணடினையு
முள்ள பரிசெலலா மொழிந்த தஙகுவந்திருந்தார்

(இ-ள) பிள்ளையார்தாமும் அவர் முனதொழுது = ஆளுடையபிள்ளையாரும அவர்வணங்குமுன தாமவணங்கி, பேரனபின வெள்ளம அனைய புகழமானியார் மேனமையையும = பெரிய அனபின வெள்ளமபோலும புகழ்நிறைந்த பாணடிமாதேவியாரது மேனமையையும, கொள்ளுமபெருமைக குலச்சிறையார் தொணடினையும=மேனமையமைந்த குலச்சிறைநாயனாரது திருத்தொணடையும, உள்ளபரிசெலலாம மொழிந்து அங்கு உவந்து இருந்தார்=உள்ளபடியே யெலலாவறறையுங கூறியருளி யவவிடத்தெழுந்தருளியிருந்தார் —எ-று (௬௪௩)

தெனனற குயிரோடு நீறளித்துச செஙகமலத
தனன மனையாரககு மமைச்சாரககு மனபருளித
துனனுநெறி வைதிகத்தின றூநெறியே யாகக்குதலான
மனனுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார்

(இ-ள) தெனனறகு உயிரோடு நீறு அளித்துச செஙகமலத்து அனனம அனையாரககும அமைச்சாரககும அனபு அருளி = பாணடியறகு (சுரநோயால் வீயாது)உயிருடன விபூதியைக கொடுத்துச செந்தாமரையில வாழு மனனமபோலும பாணடிமாதேவியாருக்கும குலச்சிறை நாயனாருக்கு முனனுள்ள அனபைப பெருக்கியருளி, துனனுமநெறி வைதிகத்தின தூநெறியே ஆகக்குதலால=நிலைபெறற முத்திநெறியானது வேதசார சைவநெறியேயாகச்செய்தலால, மனனுபுகழ்வாகீசர்கேட்டு மனமகிழ்ந்தார் = நிலைபெறற புகழையுடைய ஆணட அரசர்கேட்டு மனமகிழ்ச்சி யடைந்தார்.—எ-று ()

சொலலின பெருவேநதர் தொணடைவள நாடெயதி
மலகுபுகழ்க்காஞ்சி யேகாம பரமனனுஞ
செலவர் கழலபணிந்து செனறதெலலாஞ செப்புதலும
புலகுதான மாரபருமபோயப போறற மனமபுரிநதார்.

(இ-ள) சொலலினபெருவேநதர் தொணடைவளநாடெயதி=வாகீசமுனிவர் வளமபொருந்திய தொணடைநாட்டையடைந்து, மலகும்புகழ்க்காஞ்சி ஏகாம்பரமனனும் செலவர்கழலபணிந்து=நிலைபெறறபுகழையுடைய காஞ்சிபுரத்தி லேகாம்பரத்தி லெழுந்தருளிய திருவேகம்பரது திருவடிகளை

வணங்கி, சென்றதெல்லாம் செப்புதலும் = அங்கு நிகழ்ந்த சரிதங்களையெல்லாம் கூறியருளவும், புலங்குறூல மாபெரும் போயப்போற்ற மனம்புரிந்தார் = ஏகியோப வீதம்பொருந்திய திருமாளையுடைய பிள்ளையாரும் அத்திருப்பதியிற் சென்று வணங்கத்திருவுள்ளத்திற் கொண்டருளினார்.—எ-று. (௬௩௫)

அங்கணரைப் போற்றி யெழுந்தாண்ட வரசமர்ந்த
பொங்கு திருமடத்திற் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் பகவணியுஞ் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு நாளும் பரவிச் செல்லுநாள்

(இ-ள்) அங்கணரைப்போற்றி எழுந்து ஆண்ட அரசு அமர்ந்த = பொயயிலியாரைத் துதித்து எழுந்து திருநாவுக்கரசரெழுந்தருளிய, பொங்கு திருமடத்தில் புக்கு அங்கு இனிது அமர்ந்து=விளங்குந்திருமடத்திற் சென்று மகிழ்கூரத் திருந்தருளி, திங்கட்பகவு அணியும் சென்னியார் சேவடிக்கீழ் = இளம்பிறையணிந்த திருமுடியையுடைய பொயயிலியாரது திருவடிக்கீழ், தங்கும் மகிழ்வோடு நாள் பரவிச்செல்லும் நாள் = நிலைபெற்ற மனத்துடன் அவரது திருவடிகளை வணங்கிச் செல்லும் நாளில் —எ-று. (௬௩௬)

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாக மரைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்
போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மே
லேகும் பெருங்காதல் பிள்ளையா ரேற்றெழுவார்.

(இ-ள்) வாகீசமாமுனிவர் மன்னு திரு ஆலவாய்=திருநாவுக்கரசர் நிலைபெற்ற திருவாலவாயிலெழுந்தருளிய, நாகம் அரைக்கு அசைத்த நம்பர் கழல் வணங்க = பாம்பைக்கச்சாகக்கட்டிய சுந்தரேசரது திருவடிகளை வணங்கும்படி, போகும் பெருவிருப்புப்பொங்க=செல்லும் பெருவிருப்பான்று மேற்கொள்ள, புகலியின்மேல் ஏகும் பெருங்காதல் பிள்ளையார் ஏற்று எழுவார்=சீகாழியிற்செல்லும் பெருவிருப்பை மேற்கொண்டு பிள்ளையார் செல்வாராயினார் —எ-று (௬௩௭)

பூந்துருத்தி மேவும் புனிதரைமப் புக்கிறைஞ்சிப்
போந்து திருவாயிற் புறத்தணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி
யேந்தலா ரெண்ணிறந்த தொண்டருட னேகினார்

(இ-ள்.) பூந்துருத்திமேவும் புனிதரைமப்புக்கு இறைஞ்சி=திருப்பூந்துருத்தியிலெழுந்தருளிய பொயயிலியாரைச்சென்று வணங்கி, போந்து திருவாயிற்புறத்து அணைந்து = திருவாயிலின்புறத்துச் சென்றடைந்து, நாவினுக்கு வேந்தர் திருவுள்ளம் மேவவிடைகொண்டருளி = திருநாவுக்கரசு

திருவுள்ளத்திறக்குப் பொருந்த விடைபெற்றருளி, ஏந்தலார் எண்ணிறந்த தொண்டருடன் ஏகினார்=ஆளுடையபிள்ளையார் அளவில்லாத திருத்தொண்டருடன் எழுந்தருளினார்.—எ-று (௯௪௮)

மாடு புனற்பொன்னி யிழிந்து வடகரையி
னீடுதிரு நெய்த்தா னமையாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போ
யாடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார்

(இ-ள்) மாடுபுனற்பொன்னி இழிந்து = பக்கத்திலுள்ள நீர்மயமாகிய காவிரியிலிறங்கி, வடகரையில் நீடு திருநெய்த்தானம் ஐயாறு நேர்ந்து இறைஞ்சி=அக்காவிரியின் வடகரையிலுள்ள திருநெய்த்தானத்தையுந்திருவையாற்றையுஞ் சென்றுவணங்கி, பாடுதமிழ்மாலைகளும் சாத்திப் பரவிப்போய்=பாடுகின்ற செந்தமிழ்த் திருமாலைகளைச் சாத்தித் துதித்துச்சென்று, ஆடல் புரிந்தார் திருப்பழனம்சென்று அணைந்தார் = ஆனந்த நிருத்தஞ்செய்தருளும் ஆபத்சகாயரெழுந்தருளிய திருப்பழனத்தைச் சென்றருளினார் - எ-று

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவுந்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பா லுண்டருளும் வள்ளலார்.

(இ-ள்) செங்கண்விடையார் திருப்பழனம்சேர்ந்து இறைஞ்சி= சிவந்தகண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட ஆபத்சகாயரது திருப்பழனமென்னுந் திருப்பதியையடைந்து வணங்கி, பொங்கியகாதலின் முன் போற்றும் பதிபிறவும் தங்கிப்போய் = மிக்க காதலோடு முன்னேதுதித்த பிறதிருப்பதிகளிலும் வசித்தெழுந்தருளி, தனிப்பொருப்பின் மங்கை திருமுலைப்பால் உண்டருளும் வள்ளலார் சண்பைநகர் சார்ந்தார் = ஒப்பற்ற மலையரையன் புத்திரியாகிய உமாதேவியார் திருமுலைப்பாலையுண்டருளிய ஆளுடையபிள்ளையார் சீகாழியையடைந்தருளினார் —எ-று. (௯௪௯)

தென்னாட் டமண்மாசு அறுத்துத் திருநீறே
யந்நாடுபோற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்
டெந்நாட் பணிவதென வேற்றெழுந்த மாமறையோர்
முன்னாகவேத முழங்க வெதிர்கொண்டார்.

(இ-ள்.) தென்னாட்டு அமண் மாசு அறுத்து = பாண்டிநாட்டினிடத்து நிறைந்த சமணராகிய குற்றத்தைப்போக்கியருளி, திரு நீறே அந்நாடுபோற்றுவித்தார் வந்து அணையும் வார்த்தைகேட்டு=பூதிசாதனத்தை யப்பாண்டிநாட்டிலனைவரும் போற்றச்செய்த பிள்ளையார் எழுந்தருளும் வார்த்தையைக்

கேளவியுறறு, எநநாள பணிவதென ஏறறெழுநத மாமறையோா=எபபொழுது பிளளையாரைவணஙகுவதெனறு மேறகொண்டெழுந்த பெருமைபொருநதிய மறையவாகள, முனனுகவேதம முழஙக எதிாகொண்டார்=பிளளையாா முனபாகவேதஙகளொலிககுமபடி யெதிாகொணடாாகள. (௧௫௧)

வேறு.

போதநீடுமா மறையவரெதிாகொளப புகலிகாவலருநதஞ
சீதமுததணி சிவிகைநின்றிழிநதெதிா செலபவா திருததோணி
நாதாகோயினமுன றேனறிட நகைமலாக கரஙகுவிததிறைஞசிபபோ
யோதநீரினமே லோஙகுகோயிலினமணிக கோபுரஞசெனறுறறாா

(இ-ள) போதம நீடுமாமறையவா எதிாகொள=ஞானமிகக பெருமைபொருநதிய சீகாழிமறையவரெதிாகொணடுவர, புகலிகாவலரும தம சீதமுதது அணிசிவிகை நினறு இழிநது எதிாசெலபவா=சீகாழிததலைவராகிய ஆளுடையபிளளையாரும தமது குளிாநத முததாலாகிய திருசசிவிகையினினறு மிறஙகி யெதிாசெலபவராய, திருததோணிநாதா கோயிலமுன தோனறிட=தோணியபபரது திருககோயில தமமுனனேதோனற, நகை மலாக கரம குவிதது இறைஞசிபபோய = ஒளிபொருநதிய தாமரைமலாபோலுந திருககாஙகளைச சிரசினமேலே வணஙகிசசெனறு, ஓத நீரினமேல ஓஙகு கோயிலின மணிககோபுரம செனறு உறறாா=பிரளயசலததினமே லழியாது மிதநது தோனறுந திருககோயிலினது அழகிய கோபுரததைச செனறடைநதருளினாா—எ-று (௧௫௨)

அஙகமாநிலத தெடடுறவணஙகிபபுக கஞசலிமுடியேறப
பொஙகுகாதலிறபுடைவலஙகொண்டுமுனபணிநதுபோறறெடுததோ
துஙகநீளபெருந தோணியாஙகோயிலை யருளினாறபெறுழுதேறி [தித
மஙகையோடுடன வீறறிருநதருளினாா மலாககழலபணிவுறறாா.

(இ-ள) அஙகம மாநிலதது எடடுறவணஙகிப புககு=பூமியினகணஙகமெட்டுமுறையே பொருநத வணஙகியுளளே புகுநது, அஞசலிமுடி ஏற=குவிதத கரஙகள சிரததினமேறசெலல, பொஙகுகாதலிற புடைவலஙகொண்டு=மிகக பெருவிருபபால ஆலயததின மருஙகு வலமாகவநது, முன பணிநது போறறெடுததோதி = திருமுனபுவணஙகித துதிததுப பதிகம பாடி, துஙக நீள பெருநதோணியாம கோயிலை அருளினாறபெறுழுது ஏறி=உயாநத நீணட பெரிய திருததோணியெனனும ஆலயததைவணஙகித் திருவருளினாலமேலேயேறி, மஙகையோடு உடனவீறறிருநதருளினாா மலாக கழல பணிவுறறாா=பெரியநாயகியாரோடு அஙகு வீறறிருநதருளிய தோணியபபரது தாமரைமலாபோனற திருவடியைவணஙகியருளினாா.—எ-று.

அவவாலயததினமேலவிமானததில தோணியபபரெழுநதருளியிருத்தலால, தொழுதேறியென்றாா (௧௫௩)

அக

முறறுமெயயெலாம புளகஙகண்முகிழததெழ முகநதுகணகளிகூரப்
பறறுமுள்ள முளளலைததெழுமானநதம பொழிதரபபணிநதேததி
யுறறுமைசோவ தெனுநதிருவியமக முவகையாலெடுததோதி
வெறறியாகமீனவனவையெதிாநதி மிசைவருகாலெனபாா.

(இ-ள) முறறும மெயயெலாம புளகஙகள முகிழததெழ=திருமே
னிமுழுதும உரோமாஙகித முகிழததுத தோனற, முகநது கணகளிகூற =
திருககோலததைதத திருசககணகள முகநது (அதனால) மகிழசசியடைய, பற
றும உளளம உள அலைததெழும ஆனநதம பொழிதரபபணிநது ஏததி =
அககோலததிறபறறிய திருவுளளததை யலையசசெயது அதனுளளெழுமா
னநத வெளளமானது பெருக வணஙகித துதிதது, உறறுமைசோவது எனுந
திரு இயமகம உவகையால எடுததோதி = "உறறுமைசோவது" என்னு முத
லையுடைய திருவியமகததை மகிழசசியாக வெடுததுத துதிதது, வெறறியாக
மீனவன அவை எதிா நதிமிசை வருகரன எனபாா = சோலவியிலலாமல
பாணடியனது சவைககெதிரே "நதிமிசைவருகரன" என்த திருககடைக காப
பிறபாடி யருளுவாராயினா — எ-று (௯௫௪)

---

திருககழுமலம-திரு-இயமகம

திருசசிறறமபலம

உறறுமை சோவதுமெயயினையேயுணாவது நினனருணமெயயினையே
கறறவா காய்வது காமனையே கனலவிழி காயவது காமனையே
யறறமறைபபது முன்பணியே யமராகள செயவது முனபணியே
பெறறு முகநதது கநதனையே பிரம புரததையுகநதனையே.

பருமதின மதுரைம னவையெதிரே பதிகமதெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலாகெட வருகரனே
கருதலி னிசைமுர றருமருளே கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழவிர கன்மொழியே வலலவா தமமிடா திடமொழியே.

திருசசிறறமபலம

---

சீரின்மலகிய திருபபதிகததினிற றிருககடைகாபபேறறி
வாரினமலகிய வனமுலையாளுடன மன்னினாதமைபபோறறி
யாருமினனருள பெறறுமீணடணைபவ ரஙகையாறறொழுதேததி
யேரினமலகியகோயின்முனபணிநதுபோநதிறைஞசினாமணிவாயில.

(இ-ள.) சீரின்மலகிய திருபபதிகததினில திருககடைககாபபு ஏறறி
=சிறப்புமிகக திருப்பதிகததிற றொடஙகிய திருககடைககாபபை வைதது,
வாரின்மலகிய வனமுலையாளுடன மனனினாதமைபபோறறி = வாரோடு

பொருந்திய அழகிய திருமுலைகளையுடைய பெரியநாயகியாரோடெழுந்தருளிய தோணியப்பரைத்துதித்து, ஆரும் இன்னருள்பெற்று மீண்டு அணைபவர் அங்கையாற்றொழுது ஏத்தி = நிறைந்தவினிய திருவருளைப்பெற்று மீண்டுவரும் பிள்ளையார் தமது திருக்கரத்தால் வணங்கித் துதித்து; ஏரின மல்கிய கோயில்முன் பணிந்து போந்து இறைஞ்சினர்மணிவாயில்=அழகு நிறைந்த திருக்கோயிலின்முன் வணங்கிச்சென்று அழகிய திருவாயிலைப பணிந்தருளினார் —எ-று (கருரு)

தாதையாருமங் குடன்பணிந்தணைந்திடச் சண்பையர்தனியேறு
மூதெயிற்றிரு வாயிலைத்தொழுதுபோய் முகைமலர்க்குழலார்க
ளாதரித்துவாழ்த் துரையிருமருங்கெழ வணிமறுகிடைச் சென்று
காதலித்தவர்க் கருள்செய்துதந்திரு மாளிகைக்கடைசார்ந்தார்

(இ-ள்) தாதையாரும் அங்கு உடன்பணிந்து அணைந்திட = தந்தையாராகிய சிவபாத இருதயரும் மவ்விடத்துத் தோணியப்பரைவணங்கித் தம்மோடுவர, சண்பையர்தனி ஏறு மூது எயிற்றிருவாயிலை தொழுதுபோய் = சீகாழியிலுள்ளாரது இளஞ்சிங்கேறுபோன்ற பிள்ளையார் பழையமதிலசூழ்ந்த திருவாயிலை வணங்கிச்சென்று, முகைமலர்க்குழலார்கள் ஆதரித்துவாழ்த்துரை இருமருங்கு எழ = முகையால மலர்ந்தபூக்களை யணிந்த கூந்தலையுடைய பார்ப்பனமகளிர்கள் விரும்பிவாழ்த்துதும் பல்லாண்டொலி யிருபக்கங்களிலு முண்டாக, அணிமறுகிடைச்சென்று = அழகியவீதியினிடத்துச் சென்று, காதலித்தவர்க்கருள்செய்து தந்திருமாளிகைக் கடைசார்ந்தார் =தம்மைவிரும்பி யடைந்தவர்க்குத் திருவருள்செய்து தமது திருமாளிகையின் முதல்வாயிலை யடைந்தருளினார் —எ-று (கருசு)

நறவமார்பொழிற் புகலியின்நண்ணிய திருஞானசம்பந்தர்
விறலியாருட னீலகண்டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி
யுறையுளாமவர் மாளிகைச்செலவிடுத் துள்ளணைந்தருமபோதி
லறலினேர்குழ லார்மணிவிளக்கெடுத் தெதிர்கொள்வணைவுற்றார்.

(இ-ள்) நறவம் ஆர் பொழிற்புகலியில் நண்ணிய திருஞானசம்பந்தர் = தேன்பொருந்திய சோலைசூழ்ந்த சீகாழியிலவதரித்த ஆளுடையபிள்ளையார், விறலியாருடன் நீலகண்டப் பெரும்பாணர்க்கும் மிகநல்கி=மதங்கசூளாமணியாரோடு திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் மிகவுமருள்செய்து, உறையுளாம் அவர்மாளிகைசெலவிடுத்து உள் அணைதருமபோதில=அவரிருக்கையாகிய திருமாளிகைக்குச் செல்லும்படி விடைகொடுத்துத் தமது திருமடத்திற் கெழுந்தருளுங்கால், அறலின் நேர்குழலார் மணிவிளக்கு எடுத்து எதிர்கொள் அணைவுற்றார் = கருமணலையொத்த கூந்தலையுடைய பார்ப்பனமகளிர் மாணிக்கதீபமேந்தி யெதிர்கொளளும்படி வந்தடைவாராயினார்-எ-று.

அஙகணைநதரு மறைககுலததாயாவந தடிவணஙகிடததாழுந
துங்கநீளபெருந தோணியிறறுயாதாண் மனஙகொளததொழுவாரா
தஙகுகாதலி னஙகமாநதருளுநாட்டமபிரானகழலபோறறிப [யத
பொஙகுமின்னிசைத திருபபதிகமபல பாடினாபுகழநதேதத.

(இ-ள) அஙகு அணைநது அருமறைககுலததாயாவநது அடிவணங கிட = அஙகு கிடடிததமமுடைய மறையவாகுலத தாயராகிய பகவதியாா வநது திருவடிகளை வணஙக, தாமுநதுஙக நீளபெருந தோணியிறறுயா தாளமனஙகொளத தொழுவாராய = தாமு மிகவுமுயாநத திருததோணியி லெழுநதருளிய திருத்தாயாா திருவடிகளைத தமதுளாததிற பொருநதுமபடி தொழுவாராய, தஙகு காதலின அஙகு அமாநதருளும நாள=நிறைநதவிருப பததோடு அததிருமாளிகையி லெழுநதருளியிருககும நாளில, தமபிரானக ழலபோறறிப பொஙகும இனனிசைத திருபபதிகம பலபாடினா புகழநது ஏதத = தோணியபபாது திருவடிகளைத துதிதது நிறைநத வினிய இசையை யுடைய பலதிருபபதிகஙகளையும பாடியருளினா பலருமபுகழநது துதிகக

நீலமாவிடந திருமிடறறடககிய நிமலனைநேரெயதுங
காலமானவை யனைததினுமபணிநதுடன கலநதவனபாகளோடுஞ
சாலநாளகளங குறைபவாதையலா டழுவிடககுழைகமபா
கோலமாாதரக குமபிடுமாசைகொண டெழுஙகுறிபபினாானா

(இ-ள) நீலமாவிடம திருமிடறறு அடககிய நிமலனை=நீலநிறததை யுடைய பெரிய ஆலாகலததைத திருமிடறறிற றுஙகிய தோணியபபனை, நோ எயதும காலமானவை அனைததினும பணிநது உடனகலநத அனபாக ளோடும = நேரே தரிசிததறகுரிய காலஙகளெலலாவறறினுஞ் சென றுவண ஙகித தமமுடனசோநத அடியாாதிருககூடடததோடும, சாலநாளகள அஙகு உறைபவா=நெடுநாளஙகு வசிககும ஆளுடையபிளளையாா, தையலாள தழு விடக குழைகமபா = பிராடடியாா தழுவககுழைநத திருமேனியையுடைய திருவேகமபரது, கோலம ஆாதரககுமபிடும ஆசைகொணடு எழும குறிபபி னா ஆனா = திருககோலததைத தநதிருக கணகளபருகுமபடித தரிசிககும விருபபுமேறகொணடு செலலுங குறிபபையுடையவரானா —எ-று (கூருக)

தணடகததிருநாடடினைசசாாநதுவநதெமபிரானமகிழகோயில,
கண்டுபோறறிநாம பணிவதெனறனபருக கருளசெயவாாகாலமபெற
றணடருககறி வருமபெருநதோணியி லிருநதவரருளபெறறுத, தொ
ணடாசூழ்நதுடன புறபபடடுத தொடாநதெழுந தாதையாாகுளா
செயவாா.

(இ-ள.) தணடகத திருநாட்டினைசசாாநது உவநது எம்பிரான மகி ழகோயில=தொணடைநாடடையடைநது விரும்பி யெமது பிராணுகிய திரு

வேகமபா மகிழநது வீறறிருககுந திருவேகம்பததை, கண்டுபோறறி நாம் பணிவதெனறு அனபருககு அருளசெயவாா = கணடுதரிசித்து நாமபணியக கடவோமெனறு அடியாாகளுக கருளசெயயும பிளளையாா; காலம்பெறறு அணடருககு அறிவரும பெருநதோணியில இருநதவா அருளபெறறு = பணி தறகுரிய காலத்தைப பெறறதனால தேவாகடகறிதறகரிய தோணியபபரது திருவருளைபபெறறு, தொணடாசூழநது உடனபுறபபடத தொடாநது எழும் தாதையாாககு உரைசெயவாா = அடியாாகளசூழநது தமமுடன வரததம மைத தொடாநது வருநதமது தாதையாருக கருளிசசெயவாராயினா.-எ-று.

அப்பாநீரினி யிஙகொழிநதருமறை யங்கிவேடடனபோடுந, து பபுநோசடை யாாதமைபபரவியே தொழுதிருமெனசசொலலி, மெய பபெருநதொணடாமீள பவாதமககெலாம விடைகொடுததருளிப போ, யொபபிலாதவா தமைவழியிடை பபணிந துருகுமனபொடு செலவாா

(இ-ள.) அபபா நீா இனி இஙகு ஒழிநது அருமறை அஙகிவேடடு அனபோடும = அபபரே நீா (இனி) எமமோடு வருதலையொழிநது அரியவே தவிதிபபடியான யாகஙகளைசசெயது அனபுடன, துபபுநோ சடையாாத மைப பரவியே தொழுது இருமெனசசொலலி = பவளமபோலுஞ சடையை யுடைய தோணியபபரைததுதிதது வணஙகி யீணடிருமெனறு சொலலியரு ளி, மெயபபெரும தொணடா மீளபவா தமககெலாம விடைகொடுததருளிப போய = உணமையையுடைய அடியாாகள தமமுடனவராது திருமபுமவாககெ லலா மனுமதிகொடுததுச சென றருளி, ஒபபிலாதவா தமை வழியிடைபபணி நது உருகும அனபொடுசெலவாா = ஒபபிலலாத சிவபெருமானைததாமும செலலுமநெறிகளில வணஙகி மனமுருககுமனபோடு ஆளுடையபிளளையாா செலவாராயினா —எ-று. (கூகக)

செலவமலகிய திலலைமூதூரினிற றிருநடமபணிநதேததி
பலபெருநதொணட ரெதிாகொளபபாமாதந திருததிலைநகாபாடி
யலகுதொணடாக டமமுடனறிருமாணி குழியினையணைநதேததி
மலகுவாாசடை யாாதிருபபாதிரிப புலியூரைவநதுறறா.

(இ-ள.) செலவம மலகிய திலலைமூதூரினில திருநடம்பணிநது ஏததி = செலவம நிறைநத பழமைபொருநதிய திருததிலலையினகண நடே சபபெருமானது ஆனநத நிருததததை வணஙகிததுதிதது, பலபெருநதொ ணடா எதிாகொளபபரமா தநதிருததிலை நகாபாடி = பல அளவிறநத அடி யாா திருககூடடமெதிாகொணடு வணஙகத திருநதீசசரமொழுநதருளிய திரு ததிலை நகரைபபாடி, அலகுதொணடாகள தமமுடன திருமாணிகுழியினை அணைந்து ஏததி = நிறைநத அடியாா திருககூடடததோடு திருமாணி குழியி னையடைநது துதிதது, மலகுவாாசடையாா திருபபாதிரிப்புலியூரை வநதுற

ரா = நிறைந்த நீண்டசடைமுடியையுடைய மாணிக்கவரத ரெழுந்தருளிய திருப்பாதிரிப் புலியூரென்னுந் திருப்பதியை வந்தடைந்தருளினார் — எ-று

திருமாணிகுழி - திருவிராகம் - பண - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

பொன்னியல்பொருப்பரையன்மங்கையொருபங்கர்புனற்கங்குசடைமே
வன்னியொடு மத்தமலர்வைத்தவிறல் வித்தகர்மகிழ்ந்துறைவிடம் [ல
கன்னியிள வாளைகுதி கொள்ளவிளைவள்ளைபட ரள்ளல்வயல்வாய
மன்னியிள மேதிகள் படிந்துமனை சேருதவி மாணிகுழியே.

உந்திவரு தண்கெடில மோடுபுனல் சூழுதவி மாணிகுழிமே
லந்திமதி சூடியவெ மானையடி சேரு மணி காழிநகரான
சந்தநிறை தண்டமிழ தெரிந்துணரு ஞானசம பந்தனதுசொன்ன
முந்தியிசை செய்துமொழி வார்களுடை யார்கணெடு வானநிலனே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - மாணிக்கவரதேசுவரர்

தேவியார் மாணிக்கவல்லியம்மை

கன்னிமாவனங் காப்பென்விருந்தவர் கழலிணை பணிந்தங்கு
முன்னமாமுடக் கான்முயற்கருள்செய்த வண்ணமுமொழிந்தேத்தி
மன்னுவார்பொழிற் றிருவடுகூரினை வந்தெய்தி வணங்கிப்போயப்
பின்னுவார்சடை யார்திருவக்கரை பிள்ளையாரணைவுற்றார்

(இ-ள்) கன்னிமாவனம் காப்பென இருந்தவர் கழல் இணைபணிந்து=கன்னிவனமேதமக்குக் காப்பாக இருந்தருளிய தோன்றுத்துணைநாதரது இரண்டு திருவடிகளைவணங்கி, அங்கு முன்னம் மாமுடக்கால் முயற்கு அருள்செய்தவண்ணமும் மொழிந்து ஏத்தி=அவ்விடத்து முன்பு பெருமைபொருந்தியமுடக்காலையுடைய முயலுக்கருள்செய்தவண்ணத்தையும் பதிகமுதலிலருளிச்செய்து துதித்து, மன்னுவார் பொழிற்றிருவடுகூரினைவந்து எய்தி வணங்கிப்போய=நிலைபெற்ற நீண்டசோலைசூழ்ந்த திருவடுகூரென்னுந் திருப்பதியைவந்தடைந்து அங்கு வணங்கிச்சென்றருளி, பின்னுவார்சடையார் திருவக்கரைப்பிள்ளையார் அணைவுற்றார்=பின்னிய நீண்டசடையையுடைய திருவக்கரையென்னுந் திருப்பதியைப்பிள்ளையாரடைந்தருளினார்.—எ-று ()

திருப்பாதிரிப்புலியூர்-பண-செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றமுடக் காலமுயற்கருள் செய்துநீள்
புன்னைநின்றுகமழ் பாதிரிப்புலி யூருளான

சிகையொடு மான்றோறாங்கு மிடையுமா சாறுஞ்செல்வார்
புகைவிடும் வேள்விச்செந்தீ யில்லுடன் கொண்டுபோவார்
தகைவிலா விருப்பின்மிக்க பதிகங்கள் விளம்பிச்சார்வார்
வகையறு பகையுஞ்செற்ற மாதவ ரியல்பின்மல்க.

(இ-ள்.) சிகையொடு மான்றோல் தாங்கும் இடையும் ஆசாறும் செல்வார்=சிகையுடன் கருமான்றோலைப் பூணூலுடன் தரித்த ஓதுஞ்சிறுவரு முபாத்தியாயருமொருபாற் செல்லவும், புகைவிடும் வேள்விச்செந்தீ இல்லுடன் கொண்டுபோவார்=புகைவிடுகின்ற ஔபாசனாக்கினிகளை மனையாளுடனெடுத்துக்கொண்டுடன்போகவும், தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச்சார்வார்=அடங்காத விருப்போடு மேன்மைபொருந்திய திருப்பதிகங்களை யோதி யொருபாற் செல்லவும், வகையறு பகையும் செற்ற மாதவர் இயல்பின்மல்க=கூறுபாடான அறுவகைப்பகையையுங் கடிந்த மிக்கதவத்தையுடையோர் இயல்பால் நெருங்கவும் —எ-று. செல்வார், போவார், சார்வார், என்பன முற்றெச்சம். (௧௨௦௨)

அறுவகைவிளங்குஞ்சைவத்தளவிலாவிரதஞ்சாரு
நெறிவழிநின்ற வேடநீடிய தவத்தினுள்ளோர்
மறுவறு மனத்திலன்பின் வழியினால் வந்தயோகக்
குறிநிலைபெற்றதொண்டர் குழாங்குழாமாகியேக.

(இ-ள்.) அறுவகை விளங்கும் சைவத்து அளவு இலா விரதம் சாரும்=அறுவகையுட் சமயமாய் விளங்குகின்ற சைவத்திலெண்ணிறந்த விரதத்தைச் சார்ந்த, நெறிவழிநின்றவேடம் நீடியதவத்தினுள்ளோர் = ஒழுக்கவழியில் நின்றவேடமிக்க தவத்தினையுள்ளோரும், மறு அறு மனத்தில் அன்பின் வழியினால்வந்த = குற்றமற்ற மனதிலன்பு காரணமாயவந்த, யோகக்குறிநிலை பெற்றதொண்டர் குழாம் குழாமாகி ஏக=யோகக்குறிநிலைபெற்ற அடியார்கள் தொகுதிதொகுதியாய்ச் செல்லவும் —எ-று. அறுவகைச்சைவர்க்கும் நியமமும் விரதமும்பலவாதலின், அளவிலா விரதஞ்சாரு நெறிவழிநின்றவேட நீடியதவத்தினுள்ளோரென்றும், ஒருவழிப்படுதல் சத்துவகுணத்தாலன்றி யாகாமையின், மறுவறுமனமென்றும், பிராகிருதயோகிகள் சத்துவகுண முடையரேனுஞ் சிவபிரானிடத்தன்பின் வழிவந்த யோகரன்மையின், அன்பின்வழியினால்வந்த யோகமென்றும், இடைபிங்கலைகளினியக்கமறுத்துக் கும்பகத்தாலுணருமுபதேசக்குறியாதலின், குறியென்றும், அதனைச்சாத்திய இயல்புதோன்ற நிலைபெற்ற தொண்டரென்றுங்கூறினார். (௧௨௦௩)

விஞ்சையரியக்கர் சித்தர் கின்னரர் மிடைந்ததேவ
ரஞ்சனநாட்ட வீட்டத் தரம்பைய ருடனாயுள்ளோர்
தஞ்சுடாவிமானமேறித் தழைத்தவா தரவினோடு
மஞ்சுறை விசும்பின்மீது மணவணி காணச்சென்றார்.

(இ-ள்) விஞ்சையர் இயக்கர் சித்தர் கின்னரர் மிடைந்த தேவர்=வித்தியாதரரு மியக்கருஞ் சித்தருங் கின்னரரும் நெருங்கிய தேவர்களும், அஞ்சன நாட்ட ஈட்டத்து அரம்பையர் உடனாய உள்ளோர்=கரியகண்களையுடைய கூட்டமான தேவபெண்களுடன் கூடினவர்களாய், தமக்குள்ள விமானம் ஏறித் தழைத்த ஆதரவினோடு = தமது ஒளிபொருந்திய விமானத்தின்கணேறிக் கொண்டு மிக்கவிருப்போடு; மஞ்சுறைவிசும்பின்மீது மண அணிகாணச்சென்றார்=மேகங்கள் தவழ்கின்ற ஆகாயத்தின்கண் திருக்கல்யாணத்தினது பொலிவைக்காணும்படிவந்தார்கள் —எ-று. (கஉ0ச)

மற்றவர் மிடைந்துசெல்லு மங்கலவனப்பின் காட்சி
முற்றவித்தலத்தினுள்ளோர் மொய்த்துடன்படரும்போதி
லற்புதங்கிகழச்சியெய்த வணைதலான்மண மேற்செல்லும
பொற்பமை மணத்தின்சாயைபோன்று முன்பொலியச்செலல.

(இ-ள்.) மற்று அவர் மிடைந்து செல்லும் மங்கல வனப்பின்காட்சி= அத்தேவசசாதியர்கள் மணங்காணும்பொருட்டுக் கூடி மணத்துடன் செல்லுகின்ற மங்கலகரமான அழகினதேற்றம், முற்ற இத்தலத்தின் உள்ளோர் மொய்த்து உடன்படரும்போதில் = முழுதுமிந்நிலவுலகத்தினுள்ளோர் திரண்டு திருமணத்துடன் செல்லுங்கால், அற்புதங்கிகழச்சி எய்த அணைதலால்= ஆச்சரியம் நிகழும்படியிருத்தலால், மணமேற்செல்லும்பொற்பு அமை மணத்தின் சாயைபோன்று முன்பொலியச்செலல = மணத்தில் நின்று மேற்சென்ற அழகிய அம்மணத்தினது சாயையையொத்து முன்னே பொலிவடையச்செல்லவும் —எ-று சாயை=பிரதிவிம்பம் (கஉ0ரு)

தவவரசாளவுய்க்குந் தனிக்குடை நிழற்றச்சாரும
பவமறுத்தாளவல்லார் பாதமுள்ளத்துக்கொண்டு
புவனங்களவாழவந்த பூந்தராய் வேந்தர்போந்து
சிவனமர்ந்துறையுமநல்லூர்த்திருப்பெருமணத்தைச்சேர்ந்தார்.

(இ-ள்) தவ அரசாள உய்க்கும் தனிக்குடை நிழற்ற=தவமாகிய அரசுரிமையையாளும்படி பிடிக்குமொப்பற்ற திருமுத்தின்குடை நிழலைச்செய்யவும், சாரும பவம் அறுத்து ஆளவல்லார் பாதம் உள்ளத்துக்கொண்டு=தம்மைச்சார்ந்த சனன மரணங்களை நீக்கி அடிமைகொள்ளவல்ல சிவபிரானது திருவடிகளைத் தமது திருவுள்ளத்தின்கண் சிந்தித்துக்கொண்டு, புவனங்கள் வாழவந்த பூந்தராய் வேந்தர்போந்து=நிலஉலகங்கள் வாழும்படி அவதரித்த சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையாரெழுந்தருளி, சிவன் அமர்ந்து உறையும் நல்லூர்த் திருப்பெருமணத்தைச் சேர்ந்தார் = சிவலோகத்தியாகரெழுந்தருளிய திருநல்லூர்ப் பெருமணத்தை யடைந்தருளினார் —எ-று. கோதையென்பது முதலிது காறேழுசெய்யுளுங் குளகம் (கஉ0சா)

பெருமணக்கோயிலுள்ளார் மங்கலம் பெருகுமாற்றால
வருமணத் திறத்தின்முன்னர் வழியெதிர் கொள்ளச்சென்று

திருமணமபுணரவெயதுஞ் சிரபுரசசெமமலாாதா
மிருணமறைததிலஙகு கண்டததிறைவர்தஙகோயிலபுக்கார.

(இ-ள) பெருமணககோயில உளளார் மஙகலம பெருகும ஆறருல= திருநலலூாப பெருமணத திருககோயிலினுளள அடியார்கள மஙகல மானது மிகுமவழியால, வருமணததிறததின முனனா=வருகின்றமண எழுச்சியின முனபு, வழி எதிாகொளளச செனறு=வழியிலெதிர் கொளளுமபடி சென்றருளி, திருமணமபுணர எயதும சிரபுரசசெமமலாாதாம=திருககலயாணத்தைசசெயய வெழுநதருளுஞ சீகாழிததலைவராகிய ஆளுடையபிளளையார், இருள மறைதது இலஙகு கணடதது இறைவாதம கோயில புககாா=ஆலா கலததாலாகிய கருமையைத திருமிடறறின கணமறைதது விளஙகுகினற கணடததையுடைய சிவலோகததியாகரது திருககோயிலை யடைந்தாா —எ-று

நாதரைப பணிநதுபோறறி நறபொருட பதிகமபாடிக
காதனமெயயருண முனபெறறுக கவுணியா தலைவாபோநது
வேதியா வதுவைககோலம புனைநதிட வேணடுமெனனப
பூதநாயகாதங கோயிற புறததொரு மடததிறபுககாா

(இ-ள) நாதரைபபணிநது போறறி நறபொருட பதிகமபாடி=சிவபிரானை வணஙகித துதிதது நலலபொருள நிறைநத திருபபதிகததைபபாடி, காதல மெயயருள முனபெறறு=விருபபோடு கூடிய மெயமமை பொருநதிய திருவருளை முனபுபெறறு, கவுணியா தலைவா போநது=ஆளுடைய பிளளையாா ஆலயததினினறும புறமபே யெழுநதருளி, வேதியா வதுவைககோலம புனைநதிட வேணடும எனன=அசசீகாழி மறையவா திருமணககோலததை யணிய வேணடு மெனறுகூற, பூதநாயகாதம கோயிறபுறதது ஒருமடததிற புககாா=பூதஙகடகு நாயகரான சிவலோகததியாகரது திருககோயிலின புறததுளள ஒருதிருமடததிற புகுநதருளினாா —எ-று (கஉ௦அ)

பொறகுடநிறைநத வாசப புனிதமஞசன நீராட்டி
விறபொலி வெணபட்டாடை மேதகவிளஙகச சாததி
நறறிரு வுததரீய நறுநதுகில சாததிநானப
பறபல கலவைசசாநதம பானமையி னணிநதபினனா.

(இ-ள) பொறகுடம நிறைநத வாசபபுனித மஞசனநீா ஆட்டி=பொறகுடஙகளில நிறைதத வாசனைபொருநதிய பரிசுததமான திருமஞசன நீரால முழுககாட்டி, விறபொலிவெண பட்டாடை மேதகவிளஙகச்சாததி = ஒளி பொருநதிய வெளளிய பட்டாடையை மேனமைபொருநத அழகாகத்திருவரையிறசாததி, நறறிரு உததரீய நறுநதுகில சாததி=நலலதிருவுததரீய மெனனும வாசனை பொருந்திய பட்டாடையைத தோளினமேறசாததி; நானப பறபல கலவைசசாநதம பானமையில அணிநதபினனர்=கஸதூரிசேர்தத பலபல கலவைசசாநதுகளை முறைமையோடு பூசியபின்பு.—எ-று. ()

திருவடி மலர்மேற்பூத்த செழுநகைச் சோதியென்ன
மருவிய தாளக்கோவை மணிச்சரி யணையச்சாத்தி
விரிசுடரப் பரட்டின்மீது விளங்குபொற் சரட்டிற்கோத்த
பெருகொளி முத்தின்றாமம் பிறங்கியதொங்கல் சாத்தி

(இ-ள்) திருவடி மலர்மேல் பூத்த செழும் நகைச்சோதி என்ன = திருவடித் தாமரைகளி லலர்ந்த செழுமைபொருந்திய விளக்கமானசோதி யைப்போல, மருவிய தாளக்கோவை மணிச்சரி அணையச்சாத்தி=பொருந்திய முத்துக்கோவைகளையுடைய இரத்தினத்தாலாய காற்சரியை பொருந்த அணிந்து, விரிசுடரப் பரட்டின்மீது விளங்கு பொன் சரட்டிற்கோத்த= விரிந்த ஒளிபொருந்திய திருவடிப்பரட்டின்மேல் விளக்கமான பொன்ஞாணி ற்கோத்த; பெருகு ஒளி முத்தின்தாமம் பிறங்கிய தொங்கல் சாத்தி= மிக்க ஒளிபொருந்திய முத்துவடத்தில் விளங்குகின்ற குச்சங்களை யணிந்து -எ-று தொங்கல், குஞ்சமாயப்பரடைச்சூழ்ந்துநிற்குமணி (௯௨௧0)

தண்சுடரப்பரிப்முத்துத்தமனியநாணிற்கோத்த
கண்கவர்கோவைப்பத்திக் கதிர்க்கடிசூத்திரத்தை
வெண்சுடர்த்தரள மாலைவிரிசுடர்க் கொடுக்கின்மீது
வண்டிருவரையி னீடுவனப்பொளிவளரச்சாத்தி.

(இ-ள்) தண்சுடர்ப் பரியமுத்துத் தமனிய நாணிற்கோத்த=ஒளி பொருந்திய பருத்த முத்துக்களைப் பொன்ஞாணிற்கோத்த, கண்கவர் கோவை பபத்திக் கதிர்சகடி சூத்திரத்தை=கண்டார்து கண்ணைக் கவரத்தக்க கோ வை வரிசைகளையுடைய ஒளிபொருந்திய அரைஞாணை, வெண்சுடர்த்தரள மாலை விரிசுடர்க் கொடுக்கின்மீது=வெள்ளிய ஒளிபொருந்திய முத்தின் வரி சைகள் விரிந்த ஒளியைக் காலும் பின் கச்சத்தின்மேல், வண்திரு அரையின் நீடு வனப்பு ஒளி வளரச் சாத்தி=அழகியதிருவரையின்கண் மிக்க அழகோடு ஒளிவிளங்க அணிந்து —எ-று. கடி சூத்திரத்தைக் கொடுக்கின்மீது சாத்தி யெனக்கூட்டுக. கொடுக்கென்பது=பின்கச்சம் அப்பின்கச்ச வஸ்திரவு டையின் கரையில் முத்தின்பந்திகள் இழைக்கப்படுதலில், தரளமாலை விரிசு டர்க் கொடுக்கென்றார். (௯௨௧௧)

ஒளிர்கதிர்த் தரளக்கோவை யுதரபந் தனத்தின்மீது
தளிரொளி துளும்புமுத்தின் சன்னவீரத்தைச் சாத்திக்
குளிர்நில வெறிக்குமுத்தின் பூணநூற் கோவைசாத்தி
நளிர்கதிர் முத்துமாலை நற்சுட ராரஞ்சாத்தி.

(இ-ள்) ஒளிர்கதிர் தரளக்கோவை உதரபந்தனத்தின்மீது=விளங்கு கின்ற கிரணங்களையுடைய முத்துவடங்களாலாகிய உதரபந்தனத்தின்மீது, தளிர் ஒளி துளும்பும் முத்தின் சன்னவீரத்தைச் சாத்தி=தளிர்த்த ஒளிததும

புகின்ற முத்தாலாகிய சன்னவீரமென்று மாபரணத்தைக (கழுத்தினின்று திருவுந்தியளவுந் தாழும்படியணிந்து), குளிர்நிலவு எறிக்கும் முத்தின்பூணு நூற்சோவைசாத்தி = குளிர்ந்த நிலவைவீசு முத்தாலாகிய பூணூல் வடங்களைத்திருமார்பிலணிந்து, நளிர்கதிர் முத்துமாலை நறசுடர் ஆரம் சாத்தி= குளிர்ந்த ஒளிவீசுகின்ற முத்துமாலையாகிய நல்ல பிரகாசமபொருந்திய ஆரத்தையணிந்து —எ-று. சன்னவீரம், திரண்டவடிவாயக் கழுத்தினின்று நாபியளவும்பொருந்த அணியுமோரணி (௧௨௧௨)

வாளவிடுவயிரக்கட்டு மணிவிரலாழிசாத்தித்
தாளுறுதடக்கை முத்தினறணைடையுஞ்சரியுஞ்சாத்தி
நீளொளிமுழங்கைப பொட்டுநிரைசுடாவடமுஞ்சாத்தித்
தோளவளைத்தரளப்பைம்பூணசுந்தரத்தோணமேறசாத்தி.

(இ-ள்) வாளவிடு வயிரக்கட்டு மணிவிரல ஆழிசாத்தி = ஒளிவீசுகின்ற வயிரமணியாறகட்டிய அழகிய மோதிரங்களை யணிந்து, தாளுறு தடக்கைமுத்தின் தணைடையும் சரியுமசாத்தி=முழந்தாளையடைந்த நீண்ட திருக்கரத்தில் முத்தாலாய தணைடையையுங் கைச்சரியையு மணிந்து, நீளொளிமுழங்கைப பொட்டு நிரைசுடாவடமும சாத்தி=மிக்க ஒளிபொருந்திய முழங்கைப பொட்டோடு வரிசையான மணிவடங்களையு மணிந்து, தோளவளை தரளப பைமபூண சுந்தரத்தோள மேறசாத்தி=தோளவளையையு முத்தாலாகிய தோட்பூணையு மழகிய தோளினமேலணிந்து —எ-று. (௧௨௧௩)

திருக்கழுத்தாரந் தெய்வக் கண்டிகைமாலை சேரப்
பருத்தமுத் தொழுங்கு கோத்த படரொளிவடமுஞ் சாத்திப்
பெருக்கிய வனப்பின் செவ்விபிறங்கிய திருவார்காதில
வருக்கவெண டரளத்தொத்தின வடிக்குழை விளங்கச் சாத்தி.

(இ-ள்) திருக்கழுத்து ஆரம் தெய்வக்கண்டிகைமாலைசேர = திருக்கழுத்தின்கண் பதக்கத்தையுந் தெய்வத்தன்மைபொருந்திய இரத்தினக்கண்டிகைமாலையோடு பொருந்துமபடி, பருத்தமுத்து ஒழுங்கு கோத்த படரொளி வடமுமசாத்தி=பரியமுத்துக்களை வரிசையாகக் கோத்துபரம்பிய ஒளிபொருந்திய முத்துவடத்தையு மணிந்து, பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திரு ஆர் காதில=மிக்க அழகோடு இலக்கணமமைந்த அழகிய நீண்டகாதில; வருக்கவெண் தரளத்தொத்தின வடிக்குழை விளங்கச்சாத்தி=ஒருசாதியான வெள்ளியமுத்துக் கொத்தினாலாய வடித்துச்செய்த மகர குண்டலத்தை விளங்கும்படி யணிந்து —எ-று (௧௨௧௪)

நீறறொளி தழைத்துப்பொங்கி நிறைதிருநெற்றிமீது
மேறபட விரிந்தசோதி வெண்சுட ரெழுந்ததென்னப்
பாறபடுமுத்தின பாரப்பனிச் சுடாத்திரளை சாத்தி
யேறபவைத் தணிந்தமுத்தி னெழிலவளாமகுடஞ் சோத்தார்.

(இ-ள்) நீறறொளி தழைததுப பொஙகி நிறை திருநெறறிமீது=விபூ
தியினொளி மிககுப பொலிவடைநது நிறைநத திருநெறறியினமீது; மேறப
டவிரிநத சோதிவெணசுடா எழுநதது எனன=மேலாகவிரிநத ஒளிபொருந
திய வெளளிய சுடரெழுநதாறபோல, பாறபடு முததின பாரபபனிசசுடா
ததிரணை சாதத=அததிருநெறறியினிடததுச சோநதமுததாலாய பரிய குளிா
நத ஒளிபொருநதிய திரணையை யணிநது, ஏறப வைதது அணிநத முததின
எழிலவளா மகுடம் சோததாா = பொருநதுமபடியாக நிறைததணி பெறச
செயத முததாலாய அழகு விளஙகுங கிரீடததை யணிநதாாகள -எ-று ()

இவவகை நமமையாளு மேரவளா தெயவககோலங
கைவவினை மறையோா செயயககடிகொளசெங கமலததாதின
செவவிநீ டாமமாாபா திருவடை யாளமாலை
யெவவுல கோரு மேததத தொழுதுதா மெடுததுபபூணடாா.

(இ-ள்) இவவகை நமமை ஆளும் ஏாவளா தெயவககோலம=இவ
வாறு நமமை யடிமைகொளளு மழகு வளருகினற தெயவததனமை பொருந
திய திருமணககோலததை, கைவினை மறையோாசெயய = அலஙகரிககுந
தொழிலில வலல வேதியாகள செயயுஙகால, கடிகொள செஙகமலததாதின
செவவிநீளதாம மாாபா=வாசனைபொருநதிய செநதாமரைப பூவாலாகிய
தாதுடன அழகுமிகக மாலையையணிநத திருமாாபையுடையபிளளையாா,
திரு அடையாளமாலை எவவுலகோருமு ஏததததொழுது தாம எடுததுப பூண
டாா=உருததிராககக கணடிகைமாலையை யெவவுலகததாருந துதிகக வண
ஙகித்தாமே திருககரததாலெடுதத தணிநதருளினாா.—எ-று சிவசாதனததுள
ளொனறுதலில, உருததிராககமாலையைத திரு அடையாள மாலையெனறும,
அதைப பிறா அலஙகரிததல மரியாதையனமையின, தொழுது தாமெடுததுப
பூணடாரெனறுங கூறினாா (கஉகக)

அழகினுக்கணியாம வெணணீ றஞசெழுததோதிச சாததிப
பழகிய வனபாசூழ படடரொளி மறுகிலெயதி
மழவிடை மேலோா தமமை மனஙகொள வணஙகிவநது
முழவொலி யெடுபபமுததின சிவிகைமேற கொணடபோது

(இ-ள்) அழகினுககு அணியாம வெண்ணீறு அஞசெழுததோதிச
சாததி=அழகுககு அழகாய விளஙகுந திருவெணணீறறைத திருவைநதெழு
த்தை யோதித தரிததது, பழகிய அனபாசூழப படாஒளி மறுகில எயதி=
தமமுடனபழகிய திருககூடடததாா சூழுமபடி பரமபிய ஒளிபொருநதிய
திருவீதியிலெழுந்தருளி, மழவிடைமேலோாதமமை மனஙகொளவணஙகிவ
ந்து=இளமைபொருநதிய இடபததை யூாநதருளுஞ சிவலோகததியாகரைத
திருவுளளமபொருந்த வணஙகி மீணடெழுநதருளி, முழவு ஒலி எடுபப முத

தின் சிவிகைமேற் கொண்டபோது=மங்கலமுழவமொலிக்கத் திருமுத்தின் சிவிகையின்மே லெழுந்தருளுங் காலத்தில்,—எ - று. எவ்வகைப் பேரணியுடையாராகும் பூதியணியின்றேல், அவ்வணிகளாலாய அழகுபயன்படாமையின், அழகினுக்கணியாம் வெண்ணீறென்றும்; அது தரிக்குங்கால் ஐந்தெழுத்தோதித் தரிக்கவேண்டுமெனனும் மரபுதோன்ற, அஞ்செழுத்தோதிச்சாத்தியென்றுங் கூறினார். (௧௨௭)

எழுந்தன சங்கநாத மியம்பின வியங்களெங்கும்
பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப்புதுப்பூமாரி
தொழுந்தகை முனிவர்தொண்டர் சுருதியின்வாழ்த்துப் பொங்கி
வழிந்தன திசைகண்மீது மலர்ந்தன வுலகமெல்லாம்.

(இ-ள்) எழுந்தன சங்கநாதம் இயம்பின இயங்கள் எங்கும்=சங்கத்தின் ஒலியானது உண்டாயின மங்கலவாத்தியங்க ளெவ்விடத்து மொலித்தன, பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பக புதுப்பூமாரி=ஆகாயத்திற் றேவர்கள் தூவுங் கற்பகவிருட்சத்தினது புதிய பூமழை சொரிந்தன, தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப்பொங்கி வழிந்தன திசைகள்மீது=பிறரால் வணங்கும் பெருமையையுடைய முனிவர்களுந் தொண்டர்களுமோதும் வேதங்களின் வாழ்த்தானது திக்குகளிற் பொங்கிவழிந்தன; மலர்ந்தன உலகம் எல்லாம்=எல்லாவுலகங்களு மகிழ்ச்சியடைந்தன.

படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப்பந்
தர்டர்பூனை செம்பொற் பாண்டிலணிதுகிற் சதுக்கமல்கக்
கடலின் மீதெழுந்து நிறைகுங் கதிர்நிறை மதியம்போல
வடமிசை யணிந்தமுத்தின் மணிக்குடை நிழற்றவந்தார்.

(இ-ள்) படர் பெருந்தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப்பந்தர்=நெருங்கிய பெரிய புடைவைக்குச்சங்களும் வெண்குடையும் பசிய ஒளிவீசுகின்ற மயிற்றோகைகளின் கூட்டங்களும், அடர்பூனை செம்பொற்பாண்டில் அணிதுகிற் சதுக்கம் மல்க=நெருங்க அலங்கரித்த சிவந்த பொற்றகட்டாலாய வட்டங்களையுடைய அழகிய வஸ்திரமேற்கட்டிகளும் நெருங்க, கடலின் மீது எழுந்து நிறைகும் கதிர்நிறை மதியம்போல=கடலினிடத் துதித்து நிற்கின்ற கலைநிறைந்த சந்திரன்போல, வடம் மிசை அணிந்தமுத்தின் மணிக்குடை நிழற்றவந்தார்=முத்துவடங்களி னிசைகளா லலங்கரித்த திருமுத்துக்குடை நிழல்செய்ய வெழுந்தருளினார்—எ-று. துகிற்சதுக்கமென்றது, நடைவிதானம் நடைப்பந்தலெனினு மமையும். அதனுள் விருத்தவடிவாயப் பொற்றகடுகளால் நெருங்கப்புனைதல்லே, அடர்பூனை செம்பொற்பாண்டி லணிதுகிற் சதுக்கமென்றார். (௧௨௮)

சீரணிதெருவினூடு திருமணஞ்செல்லமுத்தி
னேரணிகாளஞ்சின்னமிலங்கொளிததாரையெல்லாம்

அந

பேரொலிபெருகமுன்னேபிடித்தனமறைகளோடு
தாரணியுய்யஞானசம்பந்தன்வந்தானென்று.

(இ-ள்) சீர் அணிதெருவினூடு திருமணஞ்செல்ல = சிறப்புபொருந்திய வீதியினகண் திருமண மெழுந்தருளுங்கால; முத்தின் ஏர் அணிகாளம் சின்னம் இலங்கு ஒளித்தாரை எல்லாம்=முத்தினாலழகு விளங்குகின்ற காளமுஞ் சின்னமும் விளங்கிய ஒளியையுடைய தாரையுமாகிய சின்னங்கள் மூன்றும், பேர் ஒலிபெருக முன்னே பிடித்தன=மிக்க ஒலிவளரப் பிள்ளையார் திருமுன்னே ஊதப்பட்டன, மறைகளோடு தாரணி உய்ய ஞானசம்பந்தன் வந்தானென்று=வேதங்களுடனிவ்வுலகத்தாரு முய்யும்பொருட்டு ஆளுடையபிள்ளையா ரெழுந்தருளினானென்று —எ-று. (௧௨௨௦)

மண்ணினுக கிடுக்கணீர வந்தவர் திருநாமங்க
ளெண்ணில பலவுமேத்திச சின்னங்க ளெழுந்தபோதவ
வண்ணலார் வதுவைசெய்ய வலங்கரித் தணையப்பெற்ற
புண்ணிய மறையோர் மாடமங்கலம் பொலிந்துபொங்க

(இ-ள்.) மண்ணினுக்கு இடுக்கண்தீர வந்தவர் திருநாமங்கள் = நிலவுலகத்தார்க்குத் துன்பநீங்க அவதரித்த ஆளுடையபிள்ளையாரது திருநாமங்கள், எண்ணில பலவும் ஏத்திச் சின்னங்கள் எழுந்தபோது = பால்றுவாயன் முதலளவில்லாத பலதிருநாமங்களையுந் துதித்து முத்துச்சின்னங்களொலிக்கும் பொழுது; அவ்வண்ணலார் வதுவைசெய்ய அலங்கரித்து அணையப்பெற்ற=அவ்வாளுடைய பிள்ளையார் திருமணஞ்செய்யும்பொருட்டு மணக்கோலமா யலங்காரஞ்செய்து எழுந்தருளப்பெற்ற, புண்ணியமறையோர் மாடமங்கலம் பொலிந்து பொங்க=புண்ணியத்தையுடைய நம்பாண்டார்நம்பி திருமாளிகையானது மங்கலகரமடைந்து மேம்படவும் —எ-று அணையப்பெற்ற மறையோனென இயையும். ஆளுடையபிள்ளையார் திருமணஞ்செய்தற் கெழுந்தருளுதல் பெரும்பேறுதலில், புண்ணிமறையோனென்றார் (௧௨௨௧)

முற்றுமெய்ஞ் ஞானம்பெற்ற மூர்த்தியார் செங்கைபற்ற
நற்பெருந் தவத்தினீர்மை நலம்படைத் தெழுந்ததெய்வக்
கற்பகப் பூங்கொம்பன்னார் தம்மையுங் காப்புச் சேர்த்துப்
பொற்புறு சடங்குமுன்னாப் புரிவுடன் செய்தவேலை

(இ-ள்.) முற்றும் மெய்ஞ்ஞானம்பெற்ற மூர்த்தியார் செங்கைபற்ற= நிறைந்த சிவஞானத்தைப் பெற்ற ஆளுடையபிள்ளையார் திருக்கல்யாணஞ் செய்ய; நற்பெருந்தவத்தினீர்மை நலம்படைத்து எழுந்த=நல்ல பெரிய தவத்தின் பெருமையாகிய நலத்தைப் பொருந்தியவதரித்த; தெய்வக்கற்பகப்பூங் கொம்பு அன்னார் தம்மையும் காப்புச்சேர்த்து = தெய்வத்தன்மைபொருந்திய கற்பகதருவின் பூங்கொம்பையொத்த அப்புத்திரியாரையுங் காப்பு

கட்டி ; பொறபுற சடங்குமுனனாப புரிவுடன செயத வேலை = அழ கியசவகறப முதலிய கலயாணச சடஙகுகளை முனபு விருபபோடுசெய்த பொழுது —எ-று (கஉஉஉ)

செம்பொனசெயவாசிச சூட்டுசதிருமணிப புனேபூண்செல்வப்
பைமபொனின மாலேவேயநத பவளமென கொடியொப்பாளை
நமபனற னருளேவாழததி நலலெழில விளஙகசசூட்டி
யமபொனசெயதீபமெனன வழகலங கரிததுவைநதார.

(இ-ள.) செமபொன செயவாசிச சூட்டுத திருமணிபபுனே பூண = சிவநத பொனனுலாய நுதலணிமாலையயு மழகிய இரததினஙக ளழுததிய ஆபரணஙகளேயுஙம, செலவப பைமபொனினமாலேவேயநத பவளமென கொடி ஒபபாளை=செலவ மிகக பசியபொனனரிமாலேயையுஞ சூடிய மிருதவான பவளககொடிபோனற புததிரியை , நமபன தன்அருளே வாழ்த்தி நலஎழில் விளஙகசசூட்டி=சிவபிரானது திருவருளேயே வாழததி நலல அழகு விளஙக ஆபரணஙகளேசசூட்டி , அமபொனசெய தீபம எனன அழகு அலஙகரித்து வைததார=அழகிய பொனனுறசெயத தீபததைபபோல அழகுக கலஙகாரஞ் செயது வைததாரகள —எ-று அககனனிகையாறகுச செயத அலஙகாரம அழகுககலஙகாரஞ்செயததுபோலாதலில, அழகலங்கரிதது வைத்தாரென் ருா வாசிசசூட்டு-வாசியாகிய சூட்டு நுதலணிமாலேயெனறுபொருள் ()

மாமறை மைநதரெலலா மணததெதிர் சென்றுமனனுந
தூமலாச செமபொற சுணணந தொகுநவமணியுமவீசத
தாமரை மலரோனபோல வாராசிலே தருபபைதோயநத
காமபொற கலசநனனீ ரிருககுடன கலநதுவீச.

(இ-ள) மாமறை மைநதரெலலாம மணதது எதிர்சென்று = பெரு மைபொருநதிய மறையவாகள சிறுவரெலலாந திருமணததை யெதிாகொ ணடு சென்று , மனனும தூமலாச செமபொறசுணணம் தொகு நவமணியும வீச=நிலைபெறற தூயமலரோடுகூடிய பொறசுணணததையுங கூட்டமான நவமணிகளையுந தூவ , தாமரைமலரோன போலவார = தாமரையினகண் வாழும பிரமனையொதத மறையவாகள , அரசிலே தருபபை தோயநத= அரசிலேயுந தருபபையுஞசோநத , காமா பொறகலச நனனீா இருககுடன் கலநதுவீச=அழகிய பொறகலசஙகளில நிறைநதத நனனீரை வேதமநதிரத்து டன கலநதுவீசவும —எ-று. கலநதுவீச எனருேனும, வேதமந்திரங் கூறி வீசவென்றது கருதது (கஉஉச)

விணணவா மலரினமாரி விசுமபொளி தழைப்பவீச
மண்ணக நிறைநதகநத மநதமாருத மூமவீசக

கண்ணொளி விளக்கமிக்கார் காமர்தோ ரணங்களூடு
புண்ணியவிளைவு போல்வார் பூம்பந்தர் முன்புசார்ந்தார்.

(இ-ள்.) விண்ணவர் மலர்மாரி விசும்பு ஒளிதழைப்ப வீச=தேவர்கள் கற்பகதருவின் மலர்மழைகளை ஆகாயமொளி தழைக்கும்படி சொரியவும், மண்ணகம் நிறைந்த கந்த மந்தமாருதமும் வீச=நிலவுலகத்தினிறைந்த வாசனைபொருந்திய சிறுதென்றற்காற்று வீசவும், கண் ஒளி விளக்கம் மிக்கு ஆர் காமர்தோரணங்களூடு=கண்ணுக்கொளியானது விளக்கமாக மிக்கு நிறைந்த அழகிய தோரணங்களினடுவே, புண்ணியவிளைவுபோல்வார்=புண்ணியந்திரண்ட பயன்போலும் ஆளுடையபிள்ளையார், பூம்பந்தர்முன்பு சார்ந்தார்=பூம்பந்தரின் முன்படைந்தருளினார்—எ-று. தோரணங்களினடுவேயுள்ள பூம்பந்தரெனக் கூட்டுக. (௧௨௨௫)

பொன்னணி சங்கின்வெள்ளம் பொலிவுடன் முழங்கியார்ப்ப
மன்னிய தரளப்பத்தி வளர்மணிச் சிவிகைநின்றும்
பன்மலர்நறும் பொற்சுண்ணம் பரந்தபா வாடைமீது
முன்னிழிந் தருளிவந்தார் மூவுலகுய்ய வந்தார்

(இ-ள்) பொன் அணி சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி ஆர்ப்ப=பொன்னாலலங்கரித்த சங்குகளின் கூட்டங்கள் மங்கலத்தோடு முழங்கியாரவாரிக்க; மன்னிய தரளப்பத்தி வளர்மணிச் சிவிகைநின்றும்=முத்தின் வரிசைகள்நிறைந்தமிக்க அழகினையுடைய திருமுத்துச்சிவிகையினின்றும், பன்மலர் நறும்பொற்சுண்ணம் பரந்தபாவாடைமீது = பலமலர்களும் நறுமணம்பொருந்திய பொற்சுண்ணமும் பரப்பிய பாவாடையின்மேல்; முன் இழிந்தருளிவந்தார் மூவுலகு உய்யவந்தார் = முன்னே இறங்கியருளிவந்தார் மூவுலகத்தாரு முய்ய அவதரித்த ஆளுடைய பிள்ளையார் (௧௨௨௬)

மறைக்குல மனையின்வாழ்க்கை மங்கலமகளி ரெல்லா
நிறைத்தநீர்ப் பொற்குடங்க ணிரைமணி விளக்குத்தூப
நறைக்குலமலர்சூழ் மாலைநறுஞ்சுடர் முளைப்பொற் பாலிகை
யுறைப்பொலிகலவை யேந்தியுட னெதிரேற்றுநின்றார்.

(இ-ள்) மறைக்குலமனையின் வாழ்க்கை மங்கலமகளிர் எல்லாம்=மறையவர்குலத்தில் இல்வாழ்க்கை நிலையினைக்கண் வாழ்தலையுடைய மங்கலத்தன்மைபொருந்திய பார்ப்பனிகளெல்லாம், நிறைத்தநீர் பொற் குடங்கள் நிரைமணிவிளக்கு=நீர் நிறைத்த பொன்னாலாகிய பூரணகும்பங்களையும் வரிசையாக அழகிய விளக்குகளையும், தூபம் நறைக்குலமலர்சூழ்மாலை=தூபத்தோடு தேன்பொருந்திய உயர்ந்தமலர்களாற் றொடுத்த மாலைகளையும்; நறும்சுடர் முளைப்பொன் பாலிகை=நலன் ஒளிபொருந்தியமுளைகளை வைத்த பொற்றட்டுகளையும்; "உறைப்பொலி கலவை ஏந்தி உடன் எதிர

ஏற்றுநின்றார் = குழம்பாயப் பொலிவடைந்த கலவைச்சாந்தையுமேந்திக் கொண்டு எல்லாருமொருங்கு பிள்ளையாரை யெதிர்கொண்டு நின்றார்கள்.

ஆங்குமுன்னிட்ட செம்பொ னணிமணிப் பீடந்தன்னி
லோங்கிய ஞானவெள்ள முண்ணிறைந் தெழுந்ததென்னத்
தாங்கிய முத்தின்பைம்பூ ணண்ணிலா வெறிப்பவேறிப்
பாங்கொளிபரப்பிநின்றார் பரசமயங்கள்வீழ்த்தார்.

(இ-ள்.) ஆங்குமுன் இட்டசெம்பொன் அணிமணிப்பீடந்தன்னில் = அவ்விடத்தில் பிள்ளையார் திருமுன்னேயிடப்பட்ட சிவந்தபொன்னாற்செய்த அழகிய பீடத்தினிடத்து, ஓங்கிய ஞானவெள்ளம் உள்நிறைந்து எழுந்த தென்ன = உயர்ந்த சிவஞானமென்னும் வெள்ளமானது உள்ளத்து நிறைந்து புறத்துவழிந்தாற்போல, தாங்கிய முத்தின் பைம்பூண் தண்ணிலா எறிப்ப = திருமேனியிற்றரித்த பசிய முத்தாபரணங்கள் குளிர்ந்த நிலவைவீச; ஏறிப் பாங்கு ஒளிபரப்பி நின்றார் பரசமயங்கள்வீழ்த்தார் = அப்பீடத்திலேறிநின்று பக்கங்களி லொளியைவீசி நின்றருளினார் புறச்சமயங்களையழித்த ஆளுடையபிள்ளையார்—எ-று. பரசமயங்கள் வீழ்த்தார் தண்ணிலா வெறிப்ப ஏறி ஒளிபரப்பி நின்றாரெனக்கூட்டுக. (௧௨௨௮)

எதிர்வர வேற்றசாய லிளமயி லனையமாதர்
மதுரமங்கல முன்னான வாழ்த்தொலி யெடுப்பவந்து
கதிர்மணிக் கரகவாசக் கமழ்புன லொழுக்கிக்காதல்
விதிமுறை வலங்கொண்டெய்தி மேவுநல்வினைகள் செய்தார்.

(இ-ள்) எதிர்வரவு ஏற்றசாயல் இளமயில் அனையமாதர் = பிள்ளையாரை எதிர்கொண்டுநின்ற இளமயில்போலுஞ் சாயலையுடைய அப்பார்ப்பன மகளிர், மதுரமங்கலமுன்னான வாழ்த்தொலி எடுப்பவந்து = மதுரம்பொருந்திய மங்கலத்தை முன்னிட்ட வாழ்த்தொலிகள் மேம்படவந்து; கதிர்மணிக் கரகவாசக் கமழ்புனல் ஒழுக்கி = ஒளிபொருந்திய அழகிய கமண்டலத்திலுள்ள வாசனைபொருந்திய நறும்புனலைத் திருமுன்னேபெய்து; காதல்விதிமுறை வலங்கொண்டு எய்தி மேவுநல்வினைகள் செய்தார் = விருப்போடு விதிப்படி வலமாகவந்து பொருந்திய நீராஞ்சனமுதலிய மங்கலவினைகளைச்செய்தார்கள்.—எ-று. நீராஞ்சனம், திருட்டிதோட பரிகாரத்தின்பொருட்டுச் செய்யும் ஆலத்தி. (௧௨௨௯)

மங்கலம் பொலியவேந்தி மாதரார் முன்புசெல்லக்
கங்கையின் கொழுந்துசெம்பொ னிமவரை கலந்ததென்ன
வங்கவர் செம்பொன்மாடத் தாதிபூமியி னுட்புக்கா
ரங்கவை வாழ்முன்னுள் ளேடுவைகையினி லிட்டார்.

(இ-ள்.) மங்கலம் பொலிய ஏந்தி மாதரார் முன்பு செல்ல = அட்டமங்கலங்களைப் பொலியும்படி தாங்கிக்கொண்டு பார்ப்பனிகள் முன்னே செல்ல, கங்கையின் கொழுந்து செம்பொன் இமவரை கலந்தது என்ன = கங்கையினுடைய பிரவாகத் தாரை சிவந்த பொன்மலையான இமயத்திற் சேர்ந்தாற்போல, அங்கவர் செம்பொன் மாடத்து ஆதிபூமியினுள் புக்கார் = அவ்விடத்து நம்பாண்டார் நம்பியது சிவந்த பொன்னாலாகிய திருமாளிகையில் விவாகபூமியுட் புகுந்தருளினார், எங்களை வாழ முன்னாள் ஏடு வைகையினில் இட்டார் = அடியேங்களை வாழச்செய்யும்பொருட்டு முன்னாளில் திருமுகப்பாசுரத்தை வைகையாற்றில் இட்டருளிய ஆளுடையபிள்ளையார் — எ-று. பிள்ளையாரது தெய்வத்தன்மையுந் தூய்மையும் விளக்கிய அவரைக் கங்கையின் கொழுந்தெனவும், அக்கொழுந்து தேவர்களையும் இரத்தினங்களையும் திவ்வியௌடதிகளையுமுடைய மலையரசனென்னு மிமயத்தனிற் செல்லாமைபோல மணஞ்செய்யப் பிள்ளையாரெழுந்தருளிய நம்பாண்டார் நம்பியினது திருமாளிகையை அவருயர்வும் பெருமையுந் தோன்ற இமயமாகவும் உவமைகூறினார். (௧௨௩௰)

அகில் நறுந்தூபம் விம்ம வணிகிளர் மணியால் வேய்ந்த
துகிற்புனை விதானநீழற் றூமலர்த் தவிசின் மீது
நகிலணி முத்த மாலை நகை முகமடவார் வாழ்த்த
இகலில் சீர் மறையோர் சூழ இனிதினங் கிருந்த வேலை.

(இ-ள்.) அகில் நறுந்தூபம் விம்ம = அகில் துண்டுகளினது நறுமணம் பொருந்திய தூபமானது மேம்பட, அணிகிளர் மணியால் வேய்ந்த = அழகு விளங்கு மிரத்தினங்களாலலங்கரித்த, துகிற்புனை விதான நீழல் = வஸ்திர மேற்கட்டியின் கீழ், தூமலர்த் தவிசின் மீது = தூய்மை பொருந்திய பூந்தவிசின்மேல், நகில் அணி முத்த மாலை நகைமுக மடவார் வாழ்த்த = தனங்களின்மேலணிந்த முத்துமாலைகளையு மொளிபொருந்திய முகத்தையுமுடைய மகளிர் வாழ்த்தொலிகூற, இகலில் சீர் மறையோர் சூழ இனிதின் அங்கு இருந்த வேலை = மாறுபாடில்லாத சிறப்பினையுடைய மறையவர்கள் சூழும்படி யினிதாக அங்கு எழுந்தருளியிருந்தபொழுது — எ-று. (௧௨௩௧)

திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர் தாமும்
அருமையால் முன்செய் மெய்ம்மை யருந்தவ மனைவியாரும்
பெருமகிழ்ச்சி யினற்பாதம் விளக்குவார் பிள்ளையார்முன்
னுரிமையால் வெண்பாற் றூ நீருடனெடுத் தேந்தி வந்தார்.

(இ-ள்) திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறைமுனிவர் தாமும் = அழகமைந்த புதல்வியைக் கொடுக்கும்படி பெற்ற செழுமைபொருந்திய வேதங்களையுணர்ந்த நம்பாண்டார் நம்பியும், அருமையால் முன்செய் மெய்ம்மை அருந்தவ மனைவியாரும் = அப்புதல்வியைப் பெறுதற்கு அருமையோடு முன் செய்த மெய்ம்மையான பெரியதவத்தையுடைய அவர் மனைவியாரும்,

பெருமகிழ்ச்சியினால் பாதம்விளக்குவார் பிள்ளையார்முன் = மிக்கமகிழ்ச்சியோடு பிள்ளையார் திருவடிகளை விளக்குங் கருத்துடையாராய் ஆளுடையபிள்ளையார் திருமுன்பு, உரிமையால் வெண்பால் தூநீர் உடன் எடுத்து ஏந்தி வந்தார் = உரிமையுடன் வெள்ளியபாலைத்தூய நீருடனெடுத்துக் கையிலேந்தி வந்தார்கள் —எ-று கொடுக்கு முதன்மை நம்பாண்டார் நம்பியதாதலின், அவர் தவந்தோன்றக் கொடுக்கப்பெற்ற மறைமுனிவரென்றும்; அவர் கொடுக்க அப்புத்திரியைப்பெறுதல் அம்மனைவியார் தவமாதலின், முன்செய்மெய்ம்மையருந்தவமனைவியாரென்றுங் கூறினார் (௪௨௯௨)

வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தி னன்மை
நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
கந்தவார் குழலி னார்பொற் கரகநீ ரெடுத்து வார்ப்பப்
புந்தியா னிறை தியானம் புரிசடை யானென் றுன்னி.

(இ-ள்.) வந்துமுன் எய்தி = மனைவியாரோடும்வந்து பிள்ளையார் திருமுன்னடைந்து, தாம் முன்செய்த மாதவத்தின் நன்மை = தாமுற்பவத்திற் செய்த பெருந்தவத்தின்து நன்மையானது, நந்துநம்பாண்டார் நம்பி = உயர்வடையும் நம்பாண்டார் நம்பியென்னுமறையவர், ஞானபோனகர்பொற்பாதம் = ஆளுடையபிள்ளையாரது அழகிய திருவடிகளை, கந்தவார்குழலினார்பொற் கரகநீர் எடுத்துவார்ப்ப = வாசனைபொருந்திய நீண்ட அளகத்தையுடைய மனைவியார் பொன்னாலாகிய கரகத்திலிருக்கும் நீரையெடுத்துப்பெய்ய, புந்தியால் நினை தியானம் புரிசடையான் என்று உன்னி = மனத்தினாற்குறிக்குந் தியானமுறைக்குப்பொருந்திய சடையையுடைய சிவபெருமானென்று கருதி.—எ-று

மகட்கொடுப்பான் பிள்ளையார் திருவடிகளை விளக்குகின்றாராதலின், அவர்செய்த நன்மை யப்போது மென்மேலுயர்ந்ததென்பார், நன்மை நந்து நம்பாண்டார் நம்பியென்றும், மணமகனைச் சிவபிரானாகப் பாவனைசெய்யு முறைமை அறமாமென்பார், புந்தியானினை தியானம் புரிசடையானென் றுன்னியென்றுங் கூறினார் (௪௨௯௩)

விருப்பினால் விளக்கிமிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
பொருப்புறு மாடத் துள்ளும் புறத்துளுந் தெளித்த பின்ன
ருருப்பொலி யுதரத் துள்ளும் பூரித்தா ருவகை பொங்கி
யருப்புறு கிளைஞர் மேலுந் தெளித்தன ராவத் தோடும்

(இ-ள்) விருப்பினால் விளக்கிமிக்க புனிதநீர் தலைமேற்கொண்டு = விருப்போடு பிள்ளையார் திருவடிகளை விளக்கி மேலாய தூய்மைபொருந்திய பாததீர்த்தத்தைச் சிரமேற் றெளித்துக்கொண்டு; பொருப்புறு மாடத்துள்ளும் புறத்துளும் தெளித்தபின்னர் = மலைபோலுமுயர்ந்த திருமாளிகையினுள்ளும் புறத்திலுந்தெளித்தபின்பு; உருப்பொலி உதரத்துள்ளும் பூரித்தார் = அழகமைந்தவயிற்றினுள்ளும் நிறைத்தார், உவகைபொங்கி அருப்புறு

கிளைஞர்மேலும தெளிததனா ஆர்வததோடிம=விருபபுமிகரு உரோமமுகிழ்த்த தலைப பெறறு சுறறத்தாரமேலும் பிரியததோடு தெளிததார்—எ-று பாத தீரததம மிகததூயதாதலிற புனிதநீரென்றூா. அதை யுதரததிற பூரிததல அகததூயமையாதறபொருட்டு மேனிய இடஙகளிறறெளிததல புறததூய மையாதறபொருட்டெனறுஙகொளக. அரும்பெனனுந் தலைவிருதி கெட்டுமுத னிலைததொழிறபெயா, அருமபெனவிகாரமாய சண்டு உரோமமுகிழததலை யுணாத்திற்று.மகிழசசியானு முரோமமுகிழததலில (கஉகூச)

பெருகொளி ஞானமுண்ட பிளளையாா மலாககைதனனின
மருவுமஙகல நீாவாசககரக முன்னேநதி வாாபபாா
தருமறைக கோததிரததின் றஙகுலஞ்செபபி யென்ற
னருநிதிய பாவையாரைப பிளளையாாககளிததே னென்றூா

(இ-ள) பெருகு ஒளிஞானம உண்ட பிளளையாா மலாககைதன னின்=மிகக ஒளிபொருநதிய சிவஞான அமுதையுணடருளிய ஆளுடைய பிளளையாரது மலாபோலுந திருககரததில, மருவும மஙகல நீாவாசககரகம முன் ஏநதி வாாபபாா=மஙகலமபொருநதிய நீாவாசனைகமழும பொறகர கததில திருமுனனே தாஙகிககொணடு வாாககும நமபாணடாா நமபி, தரும மறைககோததிரததின தஙகுலம செபபி=வேததறிறகூறும கோததிரஙக ளுள தமது கோததிரததைசசெபபி, என்றன் அரும் நிதிபபாவையாரைப பிளளையாாககு அளிததேன என்றூா=எனது அரிய நிதிபோலு மிககனனிகை யை கவுணியகோததிரததலைவராகிய ஆளுடையபிளளையாாககுக கொடுததே னெனறுகூறினூா.—எ-று இனனகோததிரததனுகிய இனனுள எனபுததிரி யை இன்னகோததிரததனுகிய இனனுனுககுக கொடுககினறேனெனறுமுவருக கஙகூறிககொடுககும வழககுபபறறி இவவாறுகூறினா (கஉகூரு)

நறறவக கன்னியாாகை ஞானசமபநதா செஙகைக
பறறுதற குரியபண்பிற பழுதினறபொழுது நணணப
பெறறவருடன பிறநதாா பெருமணப பிணையனனைச
சுறறமுன சூழநதுபோறறக கொணடுமுன றுனனினாாகள.

(இ-ள்) நறறவக கன்னியாாகை ஞானசமபநதர்செஙகை=நலல தவததையுடைய அககனனிகையாரது திருககரததை ஆளுடையபிளளையாா தமது திருககரததால, பறறுதறகுரிய பணபிறபழுதில நறபொழுது நண்ண= பிடிததறகுரிய குணததோடு கூடிய குறறமறற நலலமுகூாததமவர, பெற றவா உடனபிறந்தாா பெருமணபபிணை அனனை=பெறற தாயதநதைய ரும்சகோதரரும பெருமைபொருநதிய மணககோலஙகொணட மானபிணை போல்வாளை, சுறறம் முன் சூழநது போற்றக கொணடுமுன் துன்னினூா கள=சுற்றத்தாா முனனே சூழ்ந்துவாழதத அழைததுககொணடு மணசசாலை முன் வந்தார்கள்.—எ-று. (கஉகூசு)

ஏகமாஞ் சிவமெய்ஞ்ஞான மிசைந்தவா வலப்பாலெய்தி
நாகமா பணமபோலகு னற்றவக கொழுந்தன்னுரை
மாகமா சோதிமல்க மன்னிவீற்றிருந்த வெள்ளை
மேகமோடிசைய மின்னுககொடி யெனவிளஙக வைத்தார்.

(இ-ள்) ஏகமாம சிவமெயஞ்ஞானம இசைந்தவா வலப்பாலெய்தி = ஒன்றாகிய மெய்மமைபொருந்திய சிவஞானததைபபெற்ற ஆளுடையபிள்ளையாரது வலபபககதது அடைந்து, நாகமாபணமபோ அலகுல் நற்றவக் கொழுந்தனனாை = பாமபினபடமபோலும பரந்த கடிதடத்தையுடைய நல்ல தவககொழுந்து போலு மபபிராட்டியாரை, மாகமா சோதிமல்க மன்னிவீற்றிருந்த = விண்ணுலகதது நிறைந்த ஒளிவிளஙகுமபடி பொருநதியிருந்த ; வெள்ளை மேகமோடு இசையும் மின்னுககொடியென விளஙகவைத்தார் = வெள்ளை நிறமபொருநதிய மேகததோடு கூடியமின கொடிபோல விளங்கும்படி வைத்தாாகள். — எ-று (௧௨௩௭)

புனிதமெயக கோல நீடு புகலியா வேநதாதமமைக
குனிசிலைப புருவமென பூஙகொமபனு ருடனேகூட
நனிமிகக கணடபோதி னலலமங கலஙகளகூறி
மனிதருந தேவராளு கணணிமை யாதுவாழததி.

(இ-ள்) புனிதமெயககோலம நீடுபுகலியா வேநதாதமமை = பரிசுத்தமான திருமேனிபபொலிவு மிகருவிளஙகுஞ சீகாழிததலைவராகிய ஆளுடையபிளளையாரை, குனிசிலைபபுருவமென பூஙகொமபனா உடனேகூட = வளைந்தவிலைபோலும புருவததையுடைய மிருதுவான பூஙகொமபுபோலும பிராட்டியாருடனே சேர, நனிமிககணடபோதில நலலமஙகலஙகள கூறி = மிககவியப்போடு தரிசிததபொழுது நனமைபொருநதிய மஙகல வாழததுகளைககூறி; மனிதரும தேவராளு கண இமையாதுவாழததி = மனிதாகளும வானவர்களாளுாகள கணணிமையாது வாழததுதல செயது — எ-று மனிதரும் மங்கலஙகளகூறிக கணணிமையாது வாழததித தேவராளுனொனககூட்டுக திருமணககோலததை மிகக மகிழசசியால கணணிமையாது நோககலில, கணணிமைபபோா இயலபால கணணிமையாத தேவாபோலாயினரொனறது. (௧௨௩௮)

பததியிற குயிறறுமபைமபொற பவளககாற பநதாநாப்பண்
சித்திரவிதானததினகிழச செழுநதிருநீலநககா
முத்தமிழ விரகாமுனபு முதனமறை முறையினேடு
மெயததநம பெருமானபாத மேவுமுளளததாறசெயய.

(இ-ள்.) பததியிறகுயிறறும பைம்பொற பவளககாற பந்தர்நாப்பண் = வரிசையாலிழைதத பசியபொனனையுடைய பவளக்காறபந்தரினடுவே; சித்திரவிதானததினகிழச செழுந்திருநீலநக்கா = பலநிறஙகளோடு கூடியமேற்கட்டியினகிழ பெருமைபொருந்திய திருநீலநகக நாயனுர் ; முத்தமிழ்விரகாமுன்பு = முத்தமிழின் கூறுபாடடையுணாநத ஆளுடையபிளளையார் திரு

முன்பு ; முதன்மறை முறையினோடு = முதன்மைபொருந்திய மறையிற்கூ
றுஞ் சடங்குகளை முறைமையால், மெய்த்தரும பெருமான பாதமேவும் உள்
ளத்தாற் செய்ய = மெய்ம்மைபொருந்திய நமது பெருமானாகிய முதல்வ
ராகரது திருவடிகளில் கலந்த உள்ளத்தோடு செய்யவும் —எ-று.(கஉ௬௯)

மறையொலிபொங்கி யோங்க மங்கலவாழ்த்து மல்க
நிறைவளைச் செங்கைபற்ற நேரிழையவர்முன் னந்தப்
பொறையணி முந்நூன்மார்பர் புகரில்வெண் பொரிகையட்டி
யிறைவரை யேத்துமவ்வேலை யெரிவலங் கொள்ளவேண்டி.

(இ-ள்.) மறையொலி பொங்கியோங்க மங்கலவாழ்த்து மல்க=வேதங்களி னோசை மேற்பட்டோங்கவும் மங்கலவாழ்த்துக்க ளிருமருங்கும் நிறையவும், நிறைவளைச் செங்கைபற்ற=நிறைந்த வளையலையணிந்த அப்பிராட்டியாரது திருக்கரத்தைப் பிடிக்குங்கால், நேரிழையவர்முன்=நேர்ந்த ஆபரணங்களை யணிந்த அப்பிராட்டியார் முன்பு, அந்தப் பொறையணி முந்நூன்மார்பர்= முந்நூலின் பொறையையணிந்த மார்பையுடைய அந்தத் திருநீலநக்கநாய னார்; புகரில்வெண் பொரி கை அட்டி=குற்றமற்ற வெள்ளிய பொரியைக் கையால் ஓமத்தீயிற்பெய்து, இறைவரை ஏத்துமவ்வேலை=சிவபிரானைத் துதி க்கும் சமயத்து; எரிவலங் கொள்ளவேண்டி = ஓமாக்கினியை வலமாகவர விரும்பி —எ-று. (கஉ௭0)

அருப்புமென் முலையினார்தம் மணிமலர்க் கைபிடித்தங்
கொருப்படு முடையபிள்ளை யார்திரு வுள்ளந்தன்னில்
விருப்புறு மங்கியார்வார் விடையுயர்த் தவரேயென்று
திருப்பெரு மணத்தைமேவுஞ் சிந்தையிற் றெளிந்துசெல்வார்

(இ-ள்.) அருப்புமென் முலையினார்தம் அணிமலர்க்கை பிடித்து= அரும்புபோலு மிருதுவான முலையையுடைய அப்பிராட்டியாரது அழகிய மலர்போலுங் கையைத் திருக்கரத்தாற்பற்றி, ஒருப்படும் உடையபிள்ளை யார் திருவுள்ளம் தன்னில்=வலமவருதற் கொருப்பட்ட ஆளுடையபிள்ளை யார் தமது திருவுள்ளத்தின்கண், விருப்புறும் அங்கியார்வார் விடை உயர்த் தவரே என்று=விரும்பத்தக்க வன்னிரூபத்தியாயு மிருப்பவர் இடபக்கொடி யையுயர்த்த சிவபெருமானேயென்று, திருப்பெரு மணத்தைமேவும் சிந்தை யிற்றெளிந்து செல்வார் = திருநல்லூர்ப் பெருமணமென்னு மாலயத்தை யடைகின்ற திருவுள்ளத்தோடு தெளிந்து செல்வாராய.—எ-று. (கஉ௭௧)

மந்திரமுறையாலுய்த்த வெரிவலமாக மாதர்
தந்திருக்கையைப்பற்றுந் தாமரைச்செங்கையாளர்
இந்தவில் லொழுக்கம்வந்து சூழ்ந்ததே யிவடன்னோடு
அந்தமில் சிவன்றாள் சேர்வனென்னு மாதரவுபொங்க.

(இ-ள்) மந்திரமுறையால் உய்த்த எரிவலமாக = மந்திரவிதியால் வளர்த்த அவ்வக்கினியை வலமாகும்பொழுது ; மாதர் தந்திருக்கையைப் பற்றும் தாமரைச் செங்கையாளர்=அம்பிராட்டியாரது திருக்கரத்தைப் பிடிக்கும் தாமரைமலர்போலுந் திருக்கரத்தையுடைய ஆளுடையபிள்ளையார் ; இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே=இந்த இல்வாழ்க்கை நிலையானது எம்மை வந்தடைந்ததே , இவள் தன்னோடும் அந்தமில் சிவன்றாள் சேர்வன் என்னும் ஆதரவு பொங்க=இப்பத்தினியோடு மழிவில்லாத சிவபெருமானது திருவடிகளை யடைவேனென்னும் விருப்பானது மேம்பட —எ-று. சூழ்ந்ததே என்றது சூழ்தல் பழுதென்பது குறித்து நின்றது (௧௨௪௨)

மலர்பெருங் கிளையுந் தொண்டர் கூட்டமு மல்கிச்சூழ
வலகின்மெய்ஞ் ஞானத்தெல்லை யடைவுறுங் குறிப்பாலங்க
ணுலகின்மெ மருங்குநீங்க வுடனணைந்தருள வேண்டிக்
குலமணம் புரிவித்தார்தங் கோயிலை நோக்கிவந்தார்.

(இ-ள்.) மலர்பெருங்கிளையும் தொண்டர்கூட்டமும் மல்கிச்சூழ = மிக்கபெரிய உறவினரு மடியார் கூட்டமும் நெருங்கிச்சூழும்படி ; அலகில் மெய்ஞ்ஞானத்து எல்லை அடைவுறும் குறியால்=அளவுபடாத சிவஞானத்தினது வரம்பை யடையுங் குறிப்பினால் , அங்கண் உலகின் எம்மருங்கும் நீங்க=அவ்விடத்து உலகங்களில் எவ்வுலகமுந் தன்னை நீங்க, உடன் அணைந்து அருள வேண்டி=சிவபிரானுடன் றாமடைந் தருளுதலைக்கருதி ; குலமணம் புரிவித்தார்தங் கோயிலை நோக்கிவந்தார் = குலத்திற்கிசைந்த திருமணத்தைச் செய்வித்த முத்தித்தியாகரெழுந்தருளும் திருக்கோயிலைக் குறித்து வந்தருளினார் —எ-று பத்தியிற்குயிற்றும் என்பதுமுதல் இதுகாறைந்துசெய்யுளுங் குளகம் சாலோகமாதிபத முத்திகளு நீங்கவென்பார், உலகின்மமருங்கு நீங்கவென்றும், சாயுச்சியமென்னும் பரமுத்தியையடைய வென்பார் , உடனணைந்தருளவென்றுங் கூறினார் (௧௨௪௩)

சிவன்மாந்தருளுஞ் செல்வத்திருப்பெரு மணத்துள்ளெய்தித்
தவநெறிவளர்க்க வந்தார்தலைப்படுஞ் சார்வுநோக்கிப்
பவமறவென்னை முன்னாளாண்ட வப்பண்புகூட
நவமலர்ப் பாதங்கூட்டு மென்னு நல்லுணர்வுநல்க.

(இ-ள்) சிவனமர்ந்தருளும் செல்வத்திருப்பெருமணத்துள் எய்தி =முத்தித்தியாகரெழுந்தருளும் செல்வம் நிறைந்த திருநல்லூர்த் திருப்பெருமணமென்னு மாலயத்திலெழுந்தருளி , தவநெறி வளர்க்கவந்தார் தலைப்படுஞ் சார்வுநோக்கி=தவமார்க்கத்தை வளர்க்கும்படி அவதரித்த ஆளுடைய பிள்ளையார் தாம் பரமுத்தியிற் றலைப்படுதற்குக் காரணமான திருவருட்சார்பைக் குறித்து , பவமறவென்னைமுன்னாள் ஆண்ட அப்பண்புகூட=பிறவிநீங்க என்னை முன்னாளில் அடிமைகொண்ட அத்திருவருளுக்கு இயைய , நவம

லர்ப்பாதங்கூட்டுமே என்னும் நல்லுணர்வு நல்க=புதிதான தாமரைமலர்போலுந் திருவடியை யடைவிக்குமென்னும் நல்ல மெய்யுணர்வானது திருவுள்ளத்துதிக்க.—எ-று. (௧௨௪௪)

காதன்மெய்ப் பதிகங்கல்லூர்ப் பெருமணமெடுத்துக் கண்டோர்
தீதுறுபிறவிப்பாசந் தீர்த்தல்செம் பொருளாகக்கொண்டு
நாதனேநல்லூர்மேவும் பெருமண நம்பனேயுன்
பாதமெய்ந் நீழல்சேரும் பருவமீ தென்றுபாட.

(இ-ள்) காதன்மெய்ப்பதிகம் கல்லூர்ப்பெருமணம் எடுத்து=விருப்பமிக்க மெய்ம்மைபொருந்திய திருப்பதிகத்தைக் "கல்லூர்ப்பெருமணம்" என முதலெடுத்து; கண்டோர்தீதுறுபிறவிப்பாசந் தீர்த்தல்செம் பொருளாகக்கொண்டு = அத்திருப்பதிகத்தில் தம்மை அத்திருமணத்திற் றரிசித்தவர்களது குற்றம்பொருந்திய பிறவிக்குக் காரணமானமலமாயைகன்மங்களை நீக்குதலைச் செப்பமான பொருளாகக்கொண்டு, நாதனே நல்லூர்மேவும் பெருமண நம்பனே=எல்லாவற்றிற்குங் காரணரே திருநல்லூரின் கண்ணுள்ளபெருமணமென்னு மாலயத்தின்கண்ணெழுந்தருளியவரே, உன்பாதமெய்ந் நீழல்சேரும் பருவமீதென்றுபாட=உனது திருவடியாகிய மெய்ம்மை பொருந்திய நிழலை யடையும் பருவமிதுவென்று பாடியருள.—எ-று. (௧௨௪௫)

---

நல்லூர்ப்பெருமணம் - பண் - அந்தாளிக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப்பெருமணம் வேண்டாகழுமலம்
பல்லூர்ப்பெருமணம் பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ் சூடலரேதொண்டர்
நல்லூர்ப்பெருமணமேய நம்பானே. (௧)

தருமணலோதஞ் சேர்தண்கடனித்திலம்
பருமணலாக்கொண்டு பாவைநல்லார்கள்
வருமணங்கூட்டி மணஞ்செயுநல்லூர்ப்
பெருமணத்தான் பெண்ணோர்பாகங் கொண்டானே.

அன்புறுசிந்தை யராகியடியவர்
நன்புறுநல்லூர்ப் பெருமணமேவிநின்
றின்புறுமெந்தை யிணையடியேத்துவார்
துன்புறுவாரல்லர் தொண்டுசெய்வாரே. (௩)

வல்லியந்தோலுடை யார்ப்பதுபோர்ப்பது
கொல்லியல்வேழத் துரிவிரிகோவணம்



திருஞானசம்பந்தசுவாமிகள் திருமணம்.

நலமியலாதொழு நல்லூர்ப்பெருமணம்
புலமியல்வாழ்க்கை யெம்புண்ணியனாகவே. (௪)

ஏறுகந்தீறிக்கொட்டிட்டெரி யாடிவெண்
ணீறுகந்தீர்மிளையார் விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திரு நல்லூர்ப்பெருமணம்
வேறுகந்தீருமை கூறுகந்தீரே. (௫)

சிட்டப்பட்டார்க்கெளியான் செங்கண்வேட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னி யானபதியாவது
நட்டக்கொட்டாட்டறா நல்லூர்ப்பெருமணத்
திட்டப்பட்டாரலொந்தீர லெம்பிரானீரோ. (௬)

மேகத்தகண்டன்னென்பேராளன் வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய புலித்தோலொடுபந்தித்த
நாகத்தனல்லூர்ப் பெருமணத்தானல்ல
போகத்தன்யோகத்தையே புரிந்தானே. (௭)

தக்கிருந்தீரன்று தாளாலரக்கனை
யுக்கிருந்தொல்கவுயர் வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்று நல்லூர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப் போக்கருளீரோ. (௮)

ஏலுந்தண்டாமரை யானுமியல்புடை
மாலுந்தம்மாண்பறி கின்றிலாமாமறை
நாலுந்தம்பாட்டென்பர் நல்லூர்ப்பெருமணம்
போலுந்தங்கோயில் புரிசடையார்க்கே (௯)

ஆதரமண்ணொடுசாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமைகேட்டுப் பிணக்குறுவீர்வம்மி
னாதனைநல்லூர்ப் பெருமணமேவிய
வேதனதாடொழ வீடெளிதாமே. (௧௦)

நறும்பொழிற்காழி யுள்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப் பெருமணத்தானை
யுறும்பொருளாற் சொன்னவொண்டமிழ் வல்லார்க்
கறும்பழிபாவ மவலமிலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சிவலோகத்தியாகர். தேவியார் - உமையம்மை.

தேவர்கள் தேவர்தாமும் திருவருள் புரிந்து நீயும்
பூவையன் னாளுமிங்குன் புண்ணிய மணத்தின்வந்தார்
யாவருமெம்பாற்சோதி யிதனுள்வந் தெய்துமென்று
மூவுல கொளியாலவிம்ம முழுச்சுடர்த் தாணுவாகி.

(இ-ள்) தேவர்கள் தேவர்தாமும் திருவருள்புரிந்து=தேவர்கட்கெல்லாம் அதிதேவராகிய சிவலோகத்தியாகரும் பிள்ளையாரது வேண்டுகோட்கிசையத்திருவருள்செய்து, நீயும் பூவை அன்னாளும்=நீயும் நாகணவாய்ப்புட்போல மொழியினையுடைய உனது பன்னியும், இங்கு உன் புண்ணியமணத்தின்வந்தார் யாவரும்=இங்கே உனது புண்ணியரூபமான திருமணத்தில் வந்த எல்லாரும், எம்பாற்சோதியிதனுள் வந்தெய்துமென்று = எம்மிடத்திற்றோன்றும் ஒளிப்பிழம்பினிடத்துவந்தடையுங்களென்று, மூவுலகொளியாலவிம்ம முழுச்சுடர்த்தாணுவாகி=மூவுலகும் தன்னொளியினால் விளங்க நிறைந்த திவ்வியசோதிலிங்கமாய—எ-று. எம்பால் என்பதனால், அவ்வாலயத்தில் சிவலிங்கப்பெருமானிடத்தினின்றுதித்த தென்றும், சோதியென்றதனால், ஒளியாலனேக சூரியர்கள்போலவும், தண்மையினாலனேக சந்திரர்கள் போலவும், நிறைந்த ஒளியென்றுமாம் (௧௨௭௬)

கோயிலுட் பட்டமேலோங்குங் கொள்கையாற் பெருகுஞ்சோதி
வாயிலை வகுத்துக்காட்ட மன்னுசீர்ப் புகலிமன்னர்
பாயினவொளியானீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி
மாயிரு ஞாலமுய்ய வழியினை யருளிச்செய்வார்

(இ-ள்) கோயிலுட்பட்டமேலோங்குங் கொள்கையாற் பெருகுஞ்சோதி=திருக்கோயில் தன்னுள்ளடங்க அதன்மேலுமுயர்ந்த குணத்தினால் மிக்க அந்த ஞானலிங்கமானது, வாயிலைவகுத்துக்காட்ட=தன்னிடத்திலோர் திருவாயிலைப்பகுத்துக்காட்ட, மன்னுசீர்ப்புகலிமன்னர்=நிலைபெற்ற புகழையுடைய சீகாழித்தலைவராகிய ஆளுடையபிள்ளையார், பாயினவொளியானீடு பரஞ்சுடர்த்தொழுதுபோற்றி=பரம்பிய திவ்விய ஒளிப்பிழம்போடுவளர்ந்த அச்சிவபரஞ்சுடரை நிலமுறச் சாஷ்டாங்கமாய்ப் பணிந்துதுதித்து, மாயிரு ஞாலமுய்ய வழியினையருளிச்செய்வார்=மிக்கபெருமைபொருந்திய உலகத்துள்ளார் உய்யும்பொருட்டுமுத்திசாதனநெறியை அருளிச்செய்வாராயினார்.

ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்லாமென்
றானசீர் நமச்சிவாயத் திருப்பதிகத் தையங்கண்
வானமு நிலனுங்கேட்க வருள்செய்திம் மணத்தில் வந்தோ
ரீனமாம்பிறவிதீரயாவரும் புகுகவென்ன.

(இ-ள்) ஞானமெய்ந்நெறிதான்யார்க்கும் நமச்சிவாயச் சொல்லாமென்று=சிவஞானத்தைக் கொடுக்குமுண்மைநெறியாவது எவ்வகையார்க்கும்

திருவைந்தெழுத்தேயாமென்று, ஆன்சீர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை அங்கண் = சிறப்பமைந்த நமச்சிவாயத் திருப்பதிகத்தை அவ்விடத்து; வானமும் நிலனுங்கேட்க அருள்செய்து = விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் கேட்கும்படி அருளிச்செய்து, இம்மணத்தில் வந்தோர் = இத்திருமணத்தில் வந்தவர்கள், யாவரும் ஈனமாம் பிறவி தீரப்புகுக என்ன = எல்லாரும் துன்பத்தை விளைக்கும் பிறவி நோயானது நீங்கும்படி புகக்கடவீரென்று அருளிச்செய்ய

---

நமச்சிவாயத்திருப்பதிகம் - பண் - கவுசிகம்

திருச்சிற்றம்பலம்

காதலாகிக்கசிந்து கண்ணீர்மல்கி
யோதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினு மெய்ப்பொருளாவது
நாதனாமநமச்சி வாயவே (௧)

நம்புவார்நமர் நாமநவிற்றினால்
வம்புநாண்மலர் வார்மதுவொப்பது
செம்பொனார்திலக முலகுக்கெலா
நம்பனாம நமச்சிவாயவே (௨)

நெக்குள்ளார்வ மிகப்பெருகிநினைந்
தக்குமாலைகொடங்கையி லெண்ணுவார்
தக்கவானவ ராத்தகுவிப்பது
நக்கனாம நமச்சிவாயவே (௩)

இயமன்றூதரு மஞ்சுவரின்சொலா
னயம்வந்தோத வல்லார்தமைநண்ணினு
னியமந்தானினை வார்க்கினியானெற்றி
நயனனாம நமச்சிவாயவே (௪)

கொல்வாரேனுங் குணம்பலநன்மைக
ளில்லாரேனு மியம்புவராயிடி
னெல்லாத்தீங்கையு நீக்குவரென்பரா
னல்லானாம நமச்சிவாயவே (௫)

மந்தரமன்ன பாவங்கண்மேவிய
பந்தணையவர்தா மும்பகர்வரேற்
சிந்தும்வல்வினை செல்வமுமல்குமா
நந்திநாம நமச்சிவாயவே. (௬)

நரகமேழ்புக நாடினராயினு
முரைசெய்வாயின ராயினுருத்திரர்
விரவியேபுகு வித்திடுமென்பரால
வரதனாம நமச்சிவாயவே. (எ)

இலங்கைமன்ன னெடுத்தவடுக்கன்மேற
றலங்கொள்கால விரலசங்கரனூன்றலு
மலங்கிவாய்மொழி செய்தவனுய்வகை
நலங்கொணாம நமச்சிவாயவே. (அ)

போதன்போதன கண்ணனுமண்ணறன்
பாதந்தான்முடி நேடியபண்பரா
யாதுங்காணபரி தாகியலந்தவ
ரோதுநாம நமச்சிவாயவே. (௯)

கஞ்சிமண்டையா கையினுண்கையர்கள்
வெஞ்சொன்மிண்டா விரவிலரென்பரால்
விஞ்சையண்டாகள வேண்டவமுதுசெய்
நஞ்சுணகண்ட னமச்சிவாயவே. (௧0)

நந்திநாம நமச்சிவாயவெனுஞ்
சந்தையாற்றமிழ் ஞானசமபந்தனசொற
சிந்தையான்மகிழ்ந்தேத்தவல்லாரெல்லாம
பந்தபாசமறுக்க வல்லாகளே. (௧௧)

திருச்சிற்றமபலம்.

---

வருமுறைப பிறவிவெள்ளம வரமபுகாணாதழுந்தி
யுருவெனுந துயாக்கூட்டி லுணாவின்றி மயங்குவாாக
டிருமணத் துடன்சேவிதது முன்செலுஞ் சிறபபினாலே
மருவிய பிறவிநீங்க மன்னுசோதியி னுடபுககாா.

(இ-ள்.) வருமுறைபபிறவி வெள்ளம வரமபுகாணாதழுந்தி = அலை போல மாறிவரும முறைமையினையுடைய பிறவிககடலின கரையைககாணாம லதனுளளழுந்தி; உருவெனுந துயரககூட்டில உணாவினறிமயங்குவாாகள= உடம்பெனனும் துயர்ககிடஙகை கூட்டினுள அறிவினறி மயங்குமனிதாகள, திருமணததுடன் சேவிதது முன்செலும் சிறபபினாலே = பிளளையாா திருமணத்தோடு சேவைசெயது அவா திருமுன் வருஞ்சிறப்பினால், மருவிய பிறவிநீங்க மன்னுசோதியினுட்புக்கார்=தம்மையடைந்த பிறவியானது நீங்குமபடி நிலைபெற்ற அச்சோதிலிங்கத்தினுளளே புகுந்தார்கள்.—எ-று. (௧௨௪௧)

றபின=அழிவில்லாத பெரிய அசசோதிலிஙகததினுள அனைவரும புகுநத பினபு —எ-று (௬௨௫௨)

காதலியைக கைபபறறிக கொணடுவலங கொண்டருளித
தீதகற றவநதருளுந திருஞானசமபநதா
நாதனெழில வளாசோதி நண்ணியதனுட புகுவாா
போதநிலை முடிநதவழிப புககொனறியுடனுறறா

(இ-ள) காதலியைககைபபறறிககொணடு வலஙகொணடருளி=பததினியாரைத-திருககரததாறபிடிததுககொணடு அசசோதிலிஙகததைவலமாக வநது, தீதகறறவநதருளும திருஞானசமபநதா=குறறததை யாவாககும நீககுமபடி அவதரிதத ஆளுடையபிளளையாா, நாதன எழிலவளாசோதி நண்ணியதன உடபுகுவாா=சிவபிரானது அழகு மிகக சோதிலிஙகததையடைநது அதனுளளேபுகுநது, போதநிலைமுடிநதவழிப புககொனறியுடனுறறா=சிவபோதம முடிநதபோதாநதமெனனும வழியில புகுநது சிவபிரானுடன கலநது ஒனறுறறா.—எ-று ஒனறி எனபதனால தமது வியாபகவறிவுவிளங்கபபெறறா எனவும, உடனுறறா எனறதனால, ஒதது நிறகும அததுவிதவியல புடையராறுரெனவுஙகொளக ஒனறி உடனுய நிறகும அதததுவிதவியலபுதமமைபபோறறு மடியாாககினபளிபபொனறும திருககடைககாபபாலுணாக ()

பிளளையா ரெழுநதருளிபபுககதறபின பெருஙகூததா
கொளளுநீடிய சோதிககுறிநிலை யவவழிகரபப
வளளலாா தமபழைய மணககோயி றேனறுதலுந
தெளளுநீ ருலகததுபபெறறிலாா தெருமநதாா

(இ-ள) பிளளையாரெழுநதருளிப புககதறபின = ஆளுடையபிளளையாா அசசோதியினுள கலநதுடனுனபின, பெருஙகூததாகொளளும நீடிய சோதிககுறிநிலை அவவழிகரபப=பெரிய பஞசகிருததிய நிருததஞசெயதருளும சிவபிரானகொணட நீணட சோதிலிஙகததின நிலைமை அவவிடதது மறைய, வளளலாாதம பழையமணககோயில தோனறுதலும=முதலிதநியாகேசரது பழமையான நலலூாபபெருமண மெனனும ஆலயம வெளிபபடவும; தெளளுநீா உலகததுப பெறறிலாா தெருமநதாா=தெளிவுபொருநதிய கடலசூழநத நிலவுலகததுு அபபெருமபேறறை யடையாதாரெலலாரும மனமயககமடைநதாா —எ-று முனதானுவாம எனறதனாலும, ஈணடு சோதிககுறி என்றதனாலும அது, ஓாஜோதிலிஙகஸதமபாகிருதி உடையதெனறுணாக

கண்ணுதலாா திருமேனியுடன்கூடக கவுணியனுா
நண்ணியது தூரததேகணடு நணுகபபெறு
விண்ணவரு முனிவாகளும விரிஞசனே முதலோரு
மெணணியவரோ சரவுதீரவெடுத தேததினுா

(இ-ள்) கண்ணுதலார் திருமேனி உடன்கூடக் கவுணியனார் = சிவபிரானது சிவரூபத்துடன் ஆளுடையபிள்ளையார் கலந்துடனானதை; ஆரத்தே கண்டு நுகப்பெறார் = ஆரத்தே தரிசித்துத் தாமதனைப் பெறாத; விண்ணவரும் முனிவர்களும் விரிஞ்சனே முதலோரும் = தேவர்களும் இருடிகளும் பிரமன் மால் முதலியோருமாகிய எண்ணிறந்தவர்களும், ஏசறவு தீர எடுத்து ஏத்தினார் = தமது மனத்துயர் நீங்கப் பிள்ளையார் பெருமையை எடுத்துத் துதித்தார்கள் —எ-று. (௧௨௫௫)

அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந்
தருமபரிசா லறிந்தபடி துதிசெய்தேன் றாரணிமேற்
பெருங்கொடையுந் திண்ணனவும் பேருணர்வுந் திருத்தொண்டால்
வருந்தகைமைக் கலிக்காம னார்செய்கை வழுத்துவேன்.

(இ-ள்) அருந்தமிழாகரர் சரிதை = அரிய தமிழ் பிறத்தற்கிடமான ஆளுடையபிள்ளையாரது சரித்திரத்தை, அடியேனுக்கு அவர் பாதம் தரும்பரிசால் = அடியேனாகிய எனக்கு அவரது திருவடி தந்த திருவருள் விளக்கத்தால் அறிந்தபடி துதிசெய்தேன் = யான் அறிந்தவாறு துதித்தேன், தாரணிமேல் பெருங்கொடையும் = நிலவுலகினைக்கண் மிகுகொடையும், திண்ணனவும் = உறுதிப்பாடான பத்தியும், பேருணர்வும் = பெரிய மெய்யுணர்ச்சியும்; திருத்தொண்டால் வரும் தகைமைக் கலிக்காமனார் செய்கை வழுத்துவேன் = திருத்தொண்டாலாய பெருமையினையுமுடைய ஏயர்கோன் கலிக்காமநாயனாரது திருத்தொண்டை மேற் கூறுவேன் —எ-று. (௧௨௫௬)

திருச்சிற்றம்பலம்

உலகெலா முணர்ந்தோ தற்கரியவ
னிலவுலாவிய நீர்மலிவேணிய
னலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்

## ஆளுடையபிள்ளையார்புராண முற்றிற்று.

சென்னபட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை அண்ணாப்பிள்ளைவீதி
௬௭-வது கதவிலக்க வீட்டில் சி. த. முத்தையபிள்ளை அவர்களது
ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

உ



சிவமயம்.

# தலத்தின் அட்டவணையும் அவ்வப்பதியிலோதிய பண்ணும் தேவாரமுதலடியும்.

| பக்கம். | தலம் | பண் | பதிகமுதலடியும். |
|---|---|---|---|
| ௩௮ | * திருப்பிரமபுரம் | நட்டபாடை | தோடுடையசெவியன் விடையேறியோர்தூவெண்மதி [சூடி |
| ௫௧ | * திருக்கோலக்கா | தக்கராகம் | மடையில்வாளைபாயமாதரார் |
| ௫௫ | சீகாழி | தக்கராகம் | பூவார்கொன்றைப்புரிபுன்சடையீர் |
| ,, | திருக்கழுமலம்-திருத்தாளச்சதி | வியாழக்குறிஞ்சி | பந்தத்தால்வந்தெப்பாலயினருமினரவும்பா |
| ௫௯ | திருநனிபள்ளி | பியந்தைக்காந்தாரம் | காரைகள்கூகைமுல்லைகளவாகைபீகைபடர்தொடரி |
| ௬௨ | திருவலம்புரம் | பழம்பஞ்சுரம் | கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைதாங்கி. |
| ௬௩ | திருச்சாய்க்காடு | சீகாமரம் | மண்புகார்வான்புகுவார்மனமிளையார்பசியாலும் |
| ௬௪ | ஷை | இந்தளம் | நித்தலுநியமஞ்செய்துநீர்மலர்தூவி |
| ௬௫ | திருவெண்காடு | சீகாமரம் | கண்காட்டுநுதலானுங்கனல்காட்டுங்கையானும் |
| ௬௬ | தென்திருமுல்லைவாயில் | பியந்தைக்காந்தாரம் | துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்டன்நடமன்னுதுன்னு |
| ௬௮ | திருமயேந்திரப்பள்ளி | கொல்லி | திரைதருபவளமுஞ்சீர்திகழ்வயிரமும் |
| ௮௨ | கோயில் | குறிஞ்சி | கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே. |
| ௮௪ | திருவேட்களம் | தக்கராகம் | அந்தமுமாதியுமாகியவண்ணலாரழல்லங்கையமர்ந்திலங்க [புனலாடியபுன்சடையாயரணம் |
| ௮௫ | திருக்கழிப்பாலை | இந்தளம் | புனலாடியபுன்சடையாயரணம் |
| ௮௭ | திருக்கோயில் | காந்தாரபஞ்சமம் | ஆடினாய்நறுநெய்யொடுபாலயிரந்தணர் பிரியாத சிற்றம்பலம் |
| ௯௦ | திருஎருக்கத்தம்புலியூர் | குறிஞ்சி | படையார்தருபூதப்பகடாருரிபோர்வை |
| ௯௧ | திருமுதுகுன்றம் | நட்டபாடை | மத்தாவரைநிறுவிக்கடல்கடைந்தவ்விடமுண்ட. |
| ௯௨ | ஷை திருவிருத்தகுன்றம் | குறிஞ்சி | நின்றுமலர்தூவி. |
| ௯௩ | ஷை திருமுதுகுன்றம் | சாதாரி | முரசதிர்ந்தெழுதருமுதுகுன்றமேவிய |

| பக்கம். | தலம் | பண் | பதிகமுதலடியும் |
|---|---|---|---|
| „ | † திருவெழுகூற்றிருக்கை | ௦ | ஓருருவாயினைமானாங்காரத்தீரியல்பாயொருவிண். |
| ௧௪௪ | † ஈரடிமேல்வைப்பு | காந்தாரபஞ்சமம் | தக்கன்வேள்விதகர்த்தவன்பூந்தராய. |
| „ | † நாலடிமேல்வைப்பு | ௦ | இயலிசையெனும்பொருளின்றிறமாம் |
| ௧௪௫ | திருச்சண்பைநகர்-திருவிராகம் | சாதாரி | எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சி |
| „ | ௸ திருச்சக்கரமாற்று | காந்தாரம் | விளங்கியசீர்ப்பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குரு. |
| ௧௪௯ | திருக்கண்ணார் கோயில் | குறிஞ்சி | தண்ணார்திங்கட்பொங்கரவந்தாழ்புனல்சூடி |
| „ | திருப்புள்ளிருக்கும் வேளூர் | சீகாமரம் | கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதியம் |
| ௧௫௦ | திருநின்றியூர் | நட்டபாடை | சூலம்படைசுண்ணப்பொடிசாந்தஞ்சுடுநீறு |
| ௧௫௧ | திருப்புன்கூர் | தக்கராகம் | முந்திநின்றவினைகளவைபோக. |
| ௧௫௨ | திருமணஞ்சேரி | இந்தளம் | அயிலாருமம்பதனாற்புரமூன்றெய்து |
| ௧௫௩ | திருத்துருத்தியும்-திருவேள்விக்குடியும் | சாதாரி | ஒங்கிமேலுழிதருமொலிபுனற்கங்கையையொருசடை. |
| ௧௫௪ | திருக்கோடிகா-திருவிராகம் | நட்டராகம் | இன்றுநன்றுநாளைநன்றென்றுநின்றவிச்சையால் |
| ௧௫௫ | திருமங்கலக்குடி | இந்தளம் | சீரினார்மணியுமகிலுஞ்சந்துஞ்செறிவரை |
| „ | திருவியலூர் | நட்டபாஷை | குரவங்கமழ்நறுமென்குழலரிவையவள்வெருவ |
| ௧௫௬ | திருந்துதேவன்குடி | கொல்லி | மருந்துவேண்டில்லிவைமந்திரங்களிவை |
| ௧௫௭ | திரு இன்னம்பர்- திருமுக்கால் | சாதாரி | எண்டிசைக்கும்புகழின்னம்பர்மேவிய |
| ௧௫௮ | திருக்குரங்காடுதுறை | ௸ | கோங்கமேகுரவமேகொழுமலர்ப்புன்னையே |
| ௧௫௯ | திருப்பழனம் | தக்கேசி | வேதமோதிவெண்ணூல்பூண்டுவெள்ளையெருதேறி |
| ௧௬௦ | திருவையாறு | மேகராகக்குறிஞ்சி | புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டு |
| ௧௬௨ | திருவையாறு | இந்தளம் | கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாயசீர் |
| „ | திருப்பெரும்புலியூர் | தக்கராகம் | மண்ணுமோர்பாகமுடையார்மாலுமோர்பாகமுடையார் |
| ௧௬௩ | திருநெய்த்தானம் | நட்டபாஷை | மையாடியகண்டன்மலைமகள்பாகமதுடையான் |
| ௧௬௪ | திருமழபாடி | கௌசிகம் | அங்கையாரழலன்னழகார்சடை |

